# வீரமாதேவி

## வரலாற்று நவீனம்

**பாகைநாடன்**



**பூவழகி பதிப்பகம்**

B.L. Towers, S-4 தமிழர் வீதி
பத்மநாபன் நகர், சூளைமேடு,
சென்னை - 600 094
Cell :- 9940502284

# தோரண வாயில்

வரலாற்றுப் புதினங்கள் எழுதுவது என்பது சற்றுக் கடினமான ஒன்றுதான். அது, எழுத்தாளனுடைய எழுத்துச் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தி விடுகிறது.

வரலாற்றுக்குப் புறம்பாக நான் செல்ல இயலாத இக்கட்டான நிலை. என்றாலும், வரலாற்றுச் சம்பவங்களில் எனக்கு வேண்டிய அளவு மட்டும் எடுத்துப் பயன்படுத்திக் கொண்டேன்.

இதை எழுதும்போது கதை நடந்த காலத்தில் வாழ்ந்தவன் போல உணர்ந்தேன். இக்கதைமாந்தர்களே என்னை வழிநடத்திச் சென்றனர்.

இராசசிம்ம பாண்டியரும், பராந்தக சோழரும், இளங் கோப்பிச்சியும், விக்கிரமனும், வீரமாதேவியும், அமோகவர்ஷனும், அநுபமாவும்கூட என்னை ஆட்கொண்டனர்.

அவர்களுடைய எண்ணங்களை எழுத்தோவியத்தில் பிரதிபலித்தேன். அக்காலப் பேச்சுவழக்கு இக்காலத்திற்கு இயைந்து வராதே! எனவே, இதனைத் தெளிந்த நீரோட்டம் போல எளிய - இனிய நடையில் எளியேன் எழுதி முடித்தேன்.

பரகேசரி பராந்தக சோழர், தன்னைச் சிவனது பாதத் தாமரையில் உறையும் வண்டு என்று திருவாலங்காட்டுச் செப்பேடு மூலம் கூறிக் கொள்கிறார். அவரது பேராற்றல், படைத்தலைவர்களிடம் கொண்ட நம்பிக்கை, இரக்க உணர்வு, கௌரவம் காப்பதற்காகப் பெற்றெடுத்த பெண்மகளிடம் அவர் காட்டுகின்ற கண்டிப்பு ஆகியவற்றை இப்புதினத்தில் புலப்படுத்தி யுள்ளேன்.

அரசனே ஆனாலும் உணர்ச்சிப் பெருக்கிலும், மனப் போராட்டங்களிலும் சிக்கித் தவிக்க நேரும் என்பதை இந்த நவீனம் மூலம் எடுத்துக் காட்டியுள்ளேன்.

சோழப் பேரரசு மகோன்னத நிலையை எட்டிப் பிடித்த காலம் அது. பேரரசர் மற்ற அரசர் குடும்பங்களுடன் பெண் எடுத்தும், பெண் கொடுத்தும் மண உறவை ஏற்படுத்திக் கொண்டதற்குக் காரணம் அவர்களுடன் ஒற்றுமை வளர வேண்டும் என்ற ஆசையால்தான், போரும் பூசலும் அற்ற -பலம் வாய்ந்த பேரரசைக் கட்டிக் காக்க விரும்பியதால்தான்.

ஆனால் பராந்தக சோழர் பெண் கொடுத்து உறவை ஏற்படுத்திக் கொண்டது, சோழப் பேரரசையே ஆட்டம் காண வழி வகுத்து விட்டது என்பதை வரலாறு சுட்டிக் காட்டியதால்தான் இந்தக் கதையை எழுத நான் தேர்ந்தெடுத்தேன். கற்பனையும் கைகொடுத்தது.

அரச குமாரிகள் அரண்மனைப் பூங்காக்களில் ஆடித் திரியும் மயில்களாக -பாடித் திரியும் குயில்களாக வாழ்ந்திருப்பார்கள்; மணம் முடித்துச் சென்று வாழும் அரண்மனைகளிலும் வசதிகளுக்கும் எந்தக் குறையும் இருக்காது என்றே நாம் அரசக் குடும்பங்களைப்பற்றிய கற்பனைகளை வளர்த்துக் கொண்டிருக்கிறோம்.

அவர்கள் அணிந்த ஆடைகள், அணிகலன்களின் பட்டியல் களைக் கண்டால் அப்படித்தான் எண்ணத் தோன்றும்.

ஆனால் இளவரசிகளோ சதுரங்கக் காய்கள்போல ஆக்கப்படுவதும் உண்டு. வரலாறு எத்தனையோ ஆதாரங்களை அவ்வாறு எடுத்துக் காட்டுகின்றது.

இதில் வருகின்ற பெரும்பாலான கதை மாந்தர்கள் சோழர் வரலாற்றில் இடம் பெற்றவர்களே! அவர்கள் இப்படித்தான் இருந்திருக்க வேண்டும்; இருந்திருக்க முடியும் என்பது என் கருத்து. மற்றவர்கள் கதைக்குச் சுவையூட்ட உருவாக்கப்பட்ட கற்பனைப் பாத்திரங்களே.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட கதை இது. சுமார் பத்துப் பதினைந்தாண்டுகள் இடைவெளியைக் கதைப் போக்கில் சுவையூட்ட சுருக்கிப் புனைந்துள்ளேன்.

இந்த நவீனம் எழுதுவதற்கு எனது முந்தைய படைப்பான 'சிநேகவல்லி' என்னும் வரலாற்று நவீனமும் சற்று உதவியுள்ளது.

அதில் வருகின்ற சில கதை மாந்தர்களே இதிலும் வரவேண்டிய சூழ்நிலை. வந்தார்கள்.

அவர்களுடனே வாசம் செய்தேன். கதையை முடிக்கும் போது என்னை அறியாமல் கண்ணீர் மல்கியது.

மனித வாழ்க்கை அனைவருக்கும் இனிமை தருவதில்லையே! அரசக் குடும்பத்தில் வாழ்ந்தவர்களும் அவதிப்பட நேர்ந்தது, அவரவர் தலைவிதிப்படிதான். அது ஆண்டவன் வகுத்துக் கொடுத்த வழி. அதை யார்தான் மாற்ற முடியும்? மீற முடியும்?

வாழ்ந்தார்கள்; வரலாறாக மாறினார்கள். அவர்களைக் காண இந்தத் தோரண வாயிலை உங்களுக்குத் திறந்து வைக்கிறேன். உள்ளே சென்று அவர்களைக் கண்டு உரையாடுங்கள். நான் ஒதுங்கிக் கொள்கிறேன்.

பாகனேரி - 630 558
31-7-2004

என்றும் அன்புடன்
**பாகை நாடன்**

# பதிப்புரை

நாடகாசிரியர் பாகை நாடன் அவர்களுக்கும் எங்கள் பதிப்பகத்திற்கும் நீண்ட நாள் நட்பு உண்டு என்று சொல்வதில் பெருமை கொள்கிறோம். பாகை நாடன் அவர்கள் நாடகக் கலையில் குறிப்பாகச் சரித்திர நாடகங்களை உருவாக்குவதில் வல்லவர்.

சாதாரணமாகவே புதினம் எழுதுவது கடினம். அதிலும் சரித்திரக் கதை எழுதும்போது நிறைய சரித்திரத் தொடர்பான விஷயங்களை அறிந்திருக்க வேண்டும்.. கதையின் சரித்திரப் பின்னணி அறிந்திருக்க வேண்டும். அதோடு சமூகக் கதை போலில்லாமல் இதில் கதாபாத்திரங்களின் வசனம் சரித்திரக் காலத்திற்கு ஏற்ப இருக்க வேண்டும் அந்த வகையில் பாகை நாடன் அவர்களைச் சரித்திரக் கதையில் வித்தகர் என்றே சொல்லலாம். அவருடைய புத்தகத்தை வெளியிடுவதில் பெருமையடைகிறோம்.

இப்புத்தகம் உருவாகக் காரணமாக இருந்த அனைவருக்கும் எமது நன்றிகள்.

—பதிப்பகத்தார்

# வீரமாதேவி

## 1. சிங்கள வீரனுக்கு ஆபத்து

மாலை மயங்கும் நேரம். மாதோட்ட நகரம் சுறுசுறுப்புடன் இயங்கிக் கொண்டிருந்தது. பாலாவி நதிக் கரையில் படகுகள் பல போவதும் வருவதுமாக இருந்தன.

பாண்டிய மன்னர் இராசசிம்மர் தன் பரிவாரங்களுடன் வந்துள்ளதால் மேலும் அங்கு பரபரப்புத் தொற்றிக் கொண்டது.

மன்னர் கேசீசுவரர் ஆலயம் சென்று ஈசுவரரைத் தரிசித்துச் செல்வதாக மக்கள் பேசிக் கொண்டனர்.

நாயன்மார்களான சம்பந்தர், சுந்தரர் ஆகியோர் வந்து தரிசித்துச் சென்ற இடமல்லவா அது! சைவம் தழைத்த காலத்திலேயே பிரசித்தி பெற்று விளங்கிய கோயில் அது.

பொன்பெருமாள் தன் குதிரையைக் காலாற நடை போட விட்டுச்சவாரி செய்து கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தவாறே சென்று கொண்டிருந்தான். யாரும் அவனைச் சட்டை செய்ய வில்லை. அவனும் யாரையும் பார்க்கும் எண்ணம் இல்லாதவன் போல அலட்சியமாகக் குதிரையை நடத்திச் சென்று கொண்டிருந்தான்.

எதிரே சிங்கள வீரன் ஒருவன் கையில் வேல் ஒன்றை ஏந்தியவாறு குதிரையில் வந்துகொண்டிருந்தான். அவனைக் கண்டதும் பொன்பெருமாள் வணங்கினான். பதிலுக்குச் சிங்கள வீரனும் பெருமாளை வணங்கினான்.

"பாண்டிய மன்னர் வந்து தங்கியுள்ள இடம் எது தெரியுமா?"

சிங்கள வீரன் அவனைச் சந்தேகத்துடன் நோக்கினான். அதைப் பொன்பெருமாளும் புரிந்து கொண்டான்.

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?"

"பாண்டிய மன்னர் தன் பரிவாரங்களுடன் சென்று பல நாழிகைகள் ஆகின்றனவே! பிறகு இப்படிக் கேட்டால் ஐயம் கொள்ளாமல் இருக்க முடியுமா?"

"ஓ! மன்னிக்க வேண்டும்! அமைச்சர் பெருமான் அவசரமாக ஓலை ஒன்றை மன்னருக்கு அனுப்பியுள்ளார். இங்கே சந்தித்து விடலாம் என்றுதான் விரைந்து பயணப்பட்டு வந்தேன்!"

"அடடா! காலம் கடந்துவிட்டதே!"

"அதனால் என்ன? அவர்கள் தங்கியிருந்த மாளிகையைக் காட்டுங்கள். யாராவது ஒருவர் இருந்தாலும் அவர் துணையுடன் பின்பற்றிச் சென்று மன்னர் செல்வதைப் பிடித்து விடுவேன்."

இப்போது சிங்கள வீரனது ஐயம் தீர்ந்துவிட்டது.

"அடடா! இப்போதுதானே எஞ்சியிருந்த சிலரையும் வழியனுப்பி வைத்துவிட்டு வருகிறேன்.!"

"ஓர் உதவி செய்ய முடியுமா?"

"என்ன செய்ய வேண்டும்?"

"எங்கள் மன்னர் சென்ற வழியைச் சற்று சாலைவரை வந்து காட்ட முடியுமா? இருள் சூழும் வேளை வேறு! பாதையும் தெரியாது!"

"ஓ! அதனால் என்ன? வந்து காட்டுகிறேன்."

சிங்கள வீரனும் தன் குதிரையைத் திருப்பினான். இரு குதிரைகளும் நகர வீதிகளைக் கடந்து செல்ல ஆரம்பித்துவிட்டன.

"என்ன? திடீரென்று பாண்டிய அமைச்சர் உங்களை அனுப்பி வைத்துள்ளார்?"

"இது அரசாங்க விசயம். என்ன எழுதியிருக்கிறார் என்பது எனக்கு எப்படித் தெரியும்?"

"அதுவும் சரிதான்! ஏதோ முக்கிய விஷயம் இருந்தால்தானே அமைச்சர் உங்களை அனுப்பி இருக்க முடியும்?"

"ஆமாம். போர் மேகங்கள் சூழ்ந்து வருகின்றன. என்ன நேருமோ என்ற கவலை எங்கள் நாட்டு மக்களுக்கு!"

"கவலையே வேண்டாம் வீரரே! அதுதான் உங்கள் மன்னர் எங்களிடம் படை உதவி கேட்க வந்துவிட்டார் அல்லவா?"

"எங்களுக்குப் படை உதவி கிட்டுமா?"

"நிச்சயம் கிடைக்கும்! மன்னர் கட்டளைப்படி அவரை அழைத்துச் செல்லும் எங்கள் படைத் தலைவரும் உறுதியுடன் கூறினாரே!"

"அப்படியானால் எங்களுக்குக் கவலையில்லை! உம்!... எங்கள் நிலையைப் பார்த்தீர்களா?"

பொன்பெருமாள் பெருமூச்சுடன் இப்படிக் கூறியதும் சிங்கள வீரன் அனுதாபத்துடன் கூறத் தொடங்கினான்.

"கவலையை விடுங்கள்! சோழ நாட்டுப் படைகளைத் துரத்தியடித்து விடலாம்!"

"உங்களது ஆறுதலான வார்த்தைகளுக்கு மிக்க நன்றி! இப்பொழுதுதான் எனக்கும் நிம்மதி!"

நகர எல்லையைத் தாண்டிவிட்டனர்.

"இந்த வழியாகச் சீக்கிரம் சென்றால் உங்கள் மன்னர் பரிவாரங்களைக் கண்டுவிடலாம்."

சாலையைச் சுட்டிக் காட்டினான் சிங்கள வீரன்.

"சற்று பேச்சுத் துணையாக அரைக்காத தூரம்வரை வந்தால் நல்லது. எங்கள் மன்னர் பரிவாரத்தை அதற்குள் பிடித்து விடலாம்!"

சிங்கள வீரன் தயங்கினான்.

"யோசிப்பதாகத் தெரிகிறது. உங்கள் தயக்கம் எனக்குப் புரிகிறது! சென்று வருகிறேன் வீரரே!"

பொன்பெருமாள் கூறிவிட்டுப் புறப்பட்டான்.

"அதனால் என்ன, பரவாயில்லை! சிறுது தூரம்வரை வருகிறேன்."

ஆபத்து சூழ்ந்து வருவதை அவனும் அறியாமல், பொன் பெருமாளுடன் பயணத்தைத் தொடர்ந்தான்.

"பாண்டிய வீரரே! பயணக் களைப்புத் தீர ஒரு சத்திரத்தில் தங்கிச் செல்லலாமே நீங்கள்?"

"எனக்கும் ஆசைதான். குதிரையும் களைத்து விட்டது. மன்னர் பிரானைத் தரிசித்து விட்டால் பிறகு எங்காவது ஓய்வெடுத்துத் தூங்கலாம்!"

"அதுவும் சரிதான். சற்று துரிதப்படுத்துங்கள்!"

சிங்கள வீரன் குதிரையை விரட்டினான். பொன் பெருமாளும் பின்தொடர்ந்தான்.

தூரத்தே ஒரு கூட்டம் சென்று கொண்டிருக்கும் ஆரவாரம் கேட்டது. சில தீப்பந்தங்களும் நகர்ந்து செல்வதும் கண்களுக்குப் புலப்பட்டன.

"அதோ உங்கள் மன்னர் பரிவாரம் செல்கிறதுபோல. இனி நீங்கள் பயமின்றிப் பயணத்தைத் தொடரலாம். நான் வருகிறேன்!"

"நன்றி வீரரே!"

சிங்கள வீரன் தன் குதிரையைத் திருப்பியதுதான் தாமதம்! சரேலென்று தலையில் அடி விழுந்தது!

நிலைகுலைந்த சிங்கள வீரனும் குதிரையிலிருந்து குப்புற விழுந்து விட்டான்! பொன்பெருமாள் அவனைச் சாலையோரம் இழுத்துச் சென்றான்!

அவனது ஆடைகளைக் களைந்தான். அவற்றைக் கழற்றியவன் தானே அணிந்து கொண்டான். சிங்கள வீரன் ஏறி வந்த குதிரையை விரட்டியடித்துவிட்டு மறுபடி தன் பயணத்தைத் தொடர்ந்தான்.

பாண்டிய மன்னருடைய பரிவாரம் தன் கண்ணுக்குத் தெரியும் வகையில் பின்பற்றிச் சென்றான்.



## 2. எதிர்பாராத உதவி!

அநுராதபுரத்து அரச சபை அன்று பாண்டிய மன்னர் இராச சிம்மருக்குச் சிறப்பான வரவேற்பளித்து மகிழ்ச்சிப் பெருக்கில் திளைத்தது.

இரு நாடுகளும் அடுத்தடுத்துச் சோழர்களின் படையெடுப்புகளால் பாதிப்புக்குள்ளாகியிருந்தன.

சேதத்தைத் தவிர்க்க - சேதாரமில்லாமல் சிறப்பான வெற்றி பெற வேண்டுமானால் ஈழமன்னர் கச்சபரின் உதவியை நாடுவதைத் தவிர வேறு வழியில்லை என்று அமைச்சர் வேறு கூறிவிட்டார்.

தன் தாய் வானவன்மாதேவி பிறந்த சேர நாட்டு உதவியும் கிட்டுவதாக இல்லை. எனவே, தன் பரிவாரத்துடன் பாண்டிய மன்னர் இராசசிம்மர் ஈழ நாட்டுக்கு விஜயம் செய்துள்ளார்.

அன்பான வரவேற்பில் உள்ளம் நெகிழ்ந்து பதில் அளித்துப் பாண்டிய மன்னர் பேசலானார்.

"ஈழநாட்டு மக்களது மனதில் நீங்கா இடம் பெற்ற மன்னவரே! மக்களே! இப்பொழுது நான் உங்களிடம் உதவி கேட்டு வந்துள்ளேன்.

"நாடு விட்டு நாடு - ஊர் விட்டு ஊர் வந்து உங்களிடம் உதவி கேட்கும்படியாகிவிட்டது எங்கள் நிலைமை! சோழர் களிடம் போரிட்டுப் பெரும் பகுதியை இழந்துவிட்ட நான், அதை மீட்கும் பொறுப்பும், என் மக்களை அடிமைத் தளையிலிருந்து காப்பாற்றும் பொறுப்பும் என்னுடைய கடமைகளாகிவிட்டன. அக் கடமைகளை நிறைவேற்ற உங்களுடைய உதவி தேவை. நீங்கள் செய்யும் இந்த உதவியைப் பாண்டிய மன்னரும், மக்களும் என்றும் மறக்க மாட்டார்கள்!"

சபையில் இறுக்கமான சூழ்நிலை இப்போது! அதை உடைக்கும் முகமாக ஈழ மன்னரே பேச ஆரம்பித்து விட்டார்.

"பாண்டிய மன்னரே! உமது இக்கட்டான சூழ்நிலையை உணர்ந்துள்ளோம். உதவி செய்யவும் உத்தேசம்தான். ஆனால், இடம், பொருள், ஏவல் பார்த்துத்தானே எதையும் செய்ய முடியும்?"

ஈழமன்னரின் வார்த்தைகள் இராசசிம்மருக்கு என்னவோ போலத் தெரிந்தது. உதவி கிடைக்குமோ, கிடைக்கதோ என்ற சந்தேகத்தை வேறு அது உருவாக்கி விட்டது.

ஆனால் அதைப் போக்கும் விதத்தில் சிங்கள நாட்டுத் தண்ட நாயகர் சக்கன் எழுந்து பேச ஆரம்பித்தார்.

"அரசே! பாண்டிய மன்னருக்கு ஏற்பட்ட களங்கத்தைத் துடைக்க நாம் ஆவன செய்யத்தான் வேண்டும். தினவெடுத்த தோள்களுடன் உள்ள நம் வீரர்களுக்கு இது ஓர் அரிய வாய்ப்பாகவே நான் கருதுகிறேன். தாங்கள் உத்தரவிட்டால் படை நடத்திச் செல்லவும் நான் சித்தமாயிருக்கிறேன்.!"

இதைக் கேட்டதும் மன்னர் இராசசிம்மரின் முகத்தில் புன்னகை மலர்ந்தது.

பாண்டிய மன்னர் மறுபடி பேச ஆரம்பித்தார்.

"மன்னரே! படை உதவி தாங்கள் அளித்தால் பாண்டிய நாட்டில் உள்ள எனது வீரர்கள் இருபதாயிரம் பேர் நாட்டை மீட்கக் காத்துக் கொண்டிருக்கின்றனர். குறைந்தது எண்பதாயிரம் படைவீரர்களும், போர்த் தளவாடங்களும் தாங்கள் தந்தால் சோழப் பேரரசை நிலைகலங்கச் செய்துவிடலாம். எத்தனை போர்க் கப்பல்கள் அனுப்ப முடியுமோ அத்தனைக்கும் அங்கு வேலையுண்டு!"

ஈழத்து மன்னர் கச்சபர் மெல்லச் சிரித்தார். அதன் பொருளை இராச சிம்மர் உணர முடியவில்லை.

"பாண்டிய மன்னரே! ஓர் இலட்சம் படைவீரர்களை வைத்துப் பாண்டிய நாட்டிலிருந்து பகைவரை விரட்டிவிட முடியும் என்றா நினைக்கிறீர்கள்? தவறு!"

இராசசிம்மர் தொடரும் முன் கச்சபரே குறுக்கிட்டுப் பேசினார்.

"குறைந்தது ஒன்றரை இலட்சம் போர் வீரர்களாவது தேவை! அத்தனை வீரர்களையும் என்னால் அனுப்ப முடியும்!"

இராசசிம்மர் மகிழ்ச்சியில் திளைத்தார்!

"நண்பரே! தங்களுக்கு ஏற்பட்ட களங்கத்தைத் துடைப்பதற்கு எதுவும் செய்ய நான் தயார்! சோழ மன்னர் பராந்தகரைத் தோற்கடித்துவிட்டால் வடபுலத்து வேந்தர்களும் நம்மிடம் வாலாட்ட நினைக்க மாட்டார்கள். இரு நாடுகளும் ஒன்றிணைந்து செயல்பட்டால் என்னதான் செய்ய முடியாது?

இராஷ்டிரகூடரைக் கூட என்ன என்று கேட்க முடியும்!"

இதைக் கேட்டதும் இராசசிம்மரின் கண்கள் பனித்தன. பேச வாய் எழவில்லை. உணர்ச்சிப் பிழம்பாகத் தோற்றமளித்தார்!

இப்படிப்பட்ட உதவி கிடைக்கும் என்று அவர் கனவிலும் கருதவில்லையே!

தண்டநாயகர் சக்கன் எழுந்து இரு மன்னர்களையும் வணங்கிப் பேச ஆரம்பித்தார்.

"அரசே! தாங்கள் ஆணையிடுங்கள்! நானே படை நடத்திச் செல்கிறேன். சோழர் மண்ணில் நம் வீரர்கள் கால் பதிக்கும் நாளை நான் எதிர்பார்த்துக் காத்திருக்கிறேன். உத்திரவிடுங்கள் அரசே! ஒரு நொடியில் படைகளைத் திரட்டிக் காட்டுகிறேன்! "

பெருமை பொங்க ஈழ மன்னர் தன் படைத்தளபதியை ஏறிட்டு நோக்கியவர் பக்கத்திலிருந்த பாண்டிய மன்னரிடம் பார்வையைத் திருப்பனார்.

'எப்படி எமது வீரம்?' என்பதுபோல் அவரது பார்வை இருந்தது!

கண்கள் பனிக்க இராசசிம்மர் எழுந்து ஈழமன்னர் கச்சபரின் கரங்களைப் பற்றினார்.

"மன்னரே! உங்களது இந்தப் பெருந்தன்மையை எப்படிப் புகழ்வேன்? என்ன சொல்வது என்றே எனக்குப் புரியவில்லை! தாங்களைப் புகழ வார்த்தைகளே இல்லை!"

'என்ன சொல்கிறீர்கள்?"

"அரசே! நான் கேட்டதோ எண்பதாயிரம் போர் வீரர்களைத் தான்! ஆனால் தாங்கள் எனக்கு அளிக்க முன்வந்ததோ ஒன்றரை இலட்சம் போர் வீரர்களை! உங்களது இந்த மேலான கொடைச் சிறப்பை, வையகம் உள்ளவரை பாண்டிய மன்னரும், மக்களும் வாயாற வாழ்த்திக் கொண்டே இருப்போம்!

"ஏ, தாயகமே! பொன்விளையும் புண்ணிய பூமியே உன்னைக் காக்கப் புறப்பட்டு விட்டான் இந்தப் பாண்டியன்!"

ஈழமன்னர் கச்சபர் அவரது தோளைத் தட்டிக் கொடுத்தார்!

"அரசே! விருந்தினர் மாளிகையில் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். படையணிகள் புறப்படத் தயாரானதும் தங்களை வெகுசிறப்புடன் வழியனுப்பி வைக்கிறேன்.!"

சபையை விட்டு மகிழ்ச்சி பொங்கப் பாண்டிய மன்னர் விடை பெற்றுச் சென்றார்! அவையில் இருந்த மக்களும் அவரை உற்சாகக் குரல் கொடுத்து வழியனுப்பி வைத்தனர்!

xxxxxxxx

மலையும், மலை சூழ்ந்த - சார்ந்த பகுதியே குறிஞ்சி. அந்தக் குறிஞ்சியே குடிகொண்டது போன்ற நாடு ஈழநாடு. மலை வளம் மிக்க மாநிலம் அது!

வானுயர்ந்த மலைகள். வெள்ளியை உருக்கிவிட்டாற் போன்ற அருவிகள்! மரகதப் போர்வையைப் போர்த்திவிட்டது போன்ற காடுகள். அவை எல்லாம் காணக் கிடைக்காக் காட்சிகள்!

அவை எல்லாவற்றையும் பார்த்து இரசித்து வந்த பொன் பெருமாள் அநுராதபுரக் கோட்டையை நெருங்கி விட்டான்.

முதல்நாள் நடந்த நிகழ்ச்சியை எண்ணித் தனக்குள் நகைத்துக் கொண்டான். இப்போது அவன் சிங்கள வீரன் உடையில்!

சோழ, பாண்டியத் தமிழ் வீரர்களின் உடையில் வேற்றுமை அதிகம் காண முடியாது. அதனால் பாண்டிய வீரனாக நடித்துச் சிங்கள வீரனைச் சிநேகம் பிடிக்க முடிந்தது. அவனைச் சற்று தூரம் அழைத்து வந்து அவன் எதிர்பாராத சமயம் தாக்கி அவனது உடைகளை அபகரிக்க முடிந்தது.

குதிரையும் அவனும் மிகவும் களைத்து விட்டாலும் காரியத்தில் அவன் குறியாக இருந்தான்.

வாயில் நுரை தள்ளிய குதிரையைத் தட்டிக் கொடுத்து ஆசுவாசப் படுத்தினான். அவனது நோக்கமறிந்த அந்த வாயில்லா ஜீவனும் பதிலுக்குக் கனைத்துத் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டது.

கோட்டைக் காவலைப்பற்றி அவன் கவலைப்படவில்லை. பாண்டியர் மன்னருடன் புறப்படுவதற்காக நாலாபுறமும் இருந்து சிங்கள வீரர்கள் தலைநகர் நோக்கி, வந்துகொண்டிருந்ததால் அவனை யாரும் தடுத்து நிறுத்திக் கேள்விகள் எதுவும் கேட்க வழியில்லாமல் போய்விட்டது!

'பாண்டிய மன்னர் தங்கியுள்ள விருந்தினர் மாளிகையை எப்படி அறிவது?'



## 3. வீரர்கள் துரத்தினர்

அநுராதபுரக் கோட்டைக்குள் புகுந்துவிட்ட பொன் பெருமாளுக்கு, இராசசிம்மர் தங்கியுள்ள விருந்தினர் மாளிகையைக் கண்டுபிடிக்க வேண்டுமே என்ற கவலை!

'எப்படித் தகவல் சேகரிப்பது?'

குதிரையைக் காலாற நடக்க விட்டான். பாண்டிய வீரர்கள் சிலர் அங்குமிங்குமாக நடமாடும் காட்சியைக் கண்டு விட்டான். மூளை துரிதமாக வேலை செய்தது!

'அதோ, அந்த மாளிகைதான் விருந்தினர் மாளிகையாக இருக்க வேண்டும். மன்னர் இராசசிம்மர் இப்போது இருப்பாரோ? மாட்டாரோ?

'இருந்தால் எப்படி நடந்து கொள்வது? இல்லாவிட்டால் எப்படி நடப்பது?'

மனதுக்குள் திட்டங்கள் தயாராயின.

விருந்தினர் மாளிகை வாசலை அடைந்ததும் குதிரையை விட்டிறங்கினான். வாசலில் குதிரையின் குளம்படி ஓசை கேட்டு உள்ளே இருந்த ஒருவன் வெளிப்பட்டான்.

"தாங்கள் யாரைப் பார்க்க வேண்டும்?"

வீரன் வினவியதுதான் தாமதம். பொன்பெருமாள் வணக்கம் கூறினான். வாயிலிருந்து வார்த்தைகள் மடமட வென்று வெளியாயின.

"நான் ஈழப்படை அதிகாரிகளில் ஒருவன். நாளை செல்லும் படையணிகளில் ஒன்றை நடத்திச் செல்லும் பாக்கியம் பெற்றவன்!"

"வணக்கம்! மிக்க மகிழ்ச்சி!"

"அரசர்! இன்னும் மாளிகை வரவில்லையா?"

"இன்னும் வரவில்லை! படையணிகளைப் பார்வையிடச் சென்றுள்ளார்!

பொன்பெருமாள் ஆமோதித்துக் கூறினான்.

"படையணிகள் திரண்டு கொண்டுதான் இருக்கின்றன. இன்னும் பல பகுதிகளிலிருந்து எங்கள் படைகள் வந்து கொண்டுதான் இருக்கின்றன!"

"மிக்க மகிழ்ச்சி வீரரே! எங்களுக்கு உங்கள் மன்னர் செய்யும் உதவி மகத்தானது!"

"அப்படியா?"

"பிறகு? ஒன்றா? இரண்டா? ஒன்றரை இலட்சம் வீரர்களை உதவியாகத் தருவதென்றால் அது சாதாரண விஷயமா?"

"ஒன்றரை லட்சமா?"

வியப்புடன் வினவினான் பொன்பெருமாள்! பாண்டிய வீரன் சந்தேகக் கண்கொண்டு பார்க்க ஆரம்பித்தான். பொன்பெருமாள் உஷாரானான்!

"அதனால்தான் கீழ்த்திசை, தென்திசைகளில் இருந்து படையணிகள் திரண்டு வருகின்றனவோ?"

"ஒன்றரை இலட்சம் படைவீரர்கள் திரண்டு வந்தால் தலை நகர்தான் தாங்குமா? வழியில் எல்லாம் படையணிகள் நிறுத்தப் பட்டிருக்கலாம்!"

"இருக்கலாம்! நான் படையணிகளில் எந்த மூலையில் இருப்பேனோ? தெரியாது! படையை எங்கு, எப்படி வழி நடத்திச் செல்லப் போகிறீர்கள் என்று தெரியவில்லையே! உணவு, தண்ணீர் சேகரிக்க வெகு சிரமம் ஆகுமே?"

“அதை எல்லாம் எம் படை வீரர்களும், மக்களும் பார்த்துக் கொள்வார்கள்!”

“எந்த வழியாகப் படை கொண்டு செல்லப் போகிறீர்கள்?”

“முதலில் கொற்கைத் துறைமுகம் போய்ச் சேருவோம்! அப்பகுதிகளில் இருக்கும் பத்தாயிரம் வீரர்கள் நம்முடன் சேர்ந்து கொள்வார்கள்! வடக்கே முன்னேறுவோம்! ஆரியங்காவுக் கணவாய் அருகே முகாமிட்டுள்ள மேலும் பத்தாயிரம் படைவீரர்கள் நம்முடன் கலந்து கொள்வார்கள்.”

“மதுரையை முதலில் கைப்பற்றியவுடன் வடக்கே நகர்ந்து சோழர் எல்லைக் காவற்படையைக் கொடும்பாளூரில் முறியடித்துத் தஞ்சை நோக்கிச் செல்ல வேண்டியதுதான்!”

“மிக்க மகிழ்ச்சி, பாண்டிய வீரரே! நாளை புறப்படும்முன் இருபகுதிகளுக்கும் செய்தி கொண்டு செல்லவில்லையா இன்னும்?”

“அரசர் வந்ததும் அனுப்பி வைப்பார்! அதில் நானும் ஒருவனாகச் செல்வேன்!”

“ஓ! அப்படியா?”

பாண்டிய வீரன் சற்று திரும்பிய சமயம் அவன் மேல் பாய்ந்து பொன்பெருமாள் தாக்க ஆரம்பித்தான்! எதிர்பாராத தாக்குதலால் நிலை குலைந்த பாண்டிய வீரன் கீழே தடுமாறி விழுந்து விட்டான்.

இப்போது பொன்பெருமாள் கையில் வாள்! அது பாண்டியவீரன் நெஞ்சில் குத்தி நின்றது; பாயவில்லை!

“உம்! உனது உடுப்புகளைக் கழற்று!”

பொன்பெருமாள் உறுமினான். பாண்டிய வீரனோ செய்வதறியாது மெதுவாக எழுந்து நின்றான்.

“உம்!”

பொன்பெருமாள் அதட்டலில் அவன் சொற்படி நடக்க ஆரம்பித்தான். பிறகு அவனைக் கத்தி முனையிலேயே நடத்திச் சென்று ஒரு தூணில் கயிற்றால் கட்டி வைத்தான் பொன் பெருமாள்!

அவன் சிங்கள வீரனின் உடுப்புகளைக் களைந்து போட்டு அந்தப் பாண்டிய வீரனின் உடைகளை அணிந்து கொண்டான்.!

"உம்! நீ ஒரு தமிழன் ஆனபடியால் பிழைத்தாய்! உன்னோடு போரிட எனக்கு அவகாசமில்லை! படை கொண்டு வருகிறீர்களா? அதையும் பார்ப்போம்! சோழ நாட்டை வெல்லப் போகிறீர்களோ? முதலில் மதுரையையாவது மீட்க உங்களால் முடியுமா என்று பார்ப்போம்!"

விடுவிடுவென்று அவன் வேகமாக வெளியேறினான். பாண்டிய வீரனோ இன்னும் திகைப்பிலிருந்து விடுபடவில்லை. கட்டுண்டு கிடந்தான்!

அதற்குமுன் எதிரே முதல் நாள் இரவு அடிபட்ட சிங்கள வீரன் பத்துப் பதினைந்து படைவீரர்களுடன் அந்த மாளிகைக்குள் பிரவேசித்தான்.

இப்போது பொன்பெருமாள் இருப்பதோ பாண்டிய வீரன் உடையில். அவர்கள் வருவதைப் பார்த்துவிட்டான். தூண் ஒன்றின் மறைவில் ஒதுங்கி அவன் நின்று கொண்டதால் அவர்களால் பார்க்க முடியவில்லை.

அவர்கள் அனைவரும் உள்ளே நுழைந்ததும் வெளியேறித் தாவி ஏறித் தன் குதிரையைத் தட்டிவிட்டான்.

உள்ளே சென்ற அவர்கள் கண்ட காட்சி அவர்களையே திடுக்கிடச் செய்து விட்டது.

விருந்தினராக வந்த வீரன் கட்டுண்டு கிடப்பதா? அருகில் கீழே சிங்கள வீரனின் உடுப்பு வேறு கிடந்தது!

"ஆ! ... இதோ என் உடுப்பு! அவன் இங்கேதான் வந்திருக்க வேண்டும்!"

"ஆமாம்!"

பாண்டிய வீரன் விளக்க ஆரம்பித்தான்!

"சிங்கள வீரன்போல வந்த சோழ ஒற்றன் என்னைத் தாக்கிக் கட்டிப் போட்டு அவன் அணிந்து வந்த சிங்கள வீரன் உடுப்பைக் களைந்து போட்டுவிட்டு என் உடையைப் பறித்து அணிந்து கொண்டு இப்போதுதான் அவன் வெளியேறினான்!"

"அவனை விட்டுவிடக் கூடாது! உடனே பிடிக்க வேண்டும்!"

பாண்டிய வீரனின் கட்டுகளை அவிழ்த்துவிடத் தோணாமல் வேகமாக வெளியேறிக் குதிரைகளில் பாய்ந்து ஏறிப் பறந்தனர்.

அவர்கள் விரட்டி வருவதற்குள் அநுராதபுரத்தை விட்டே பொன்பெருமாள் வெளியேறி விட்டான். நகரத்தின் வெளிப்புறத்தே உள்ள உணவு விடுதி ஒன்றில் குதிரையை விட்டிறங்கி உள்ளே சென்றான்.

"சுவை நீரும் உணவும் கொண்டு வா!"

வந்த பணியாளிடம் உத்தரவிட்டுவிட்டுச் சுற்றுமுற்றும் பார்வையைச் செலுத்தினான்.

அவனது பாண்டிய நாட்டு உடையைக் கவனித்த பணியாள் விசேசமாகக் கவனித்துப் பரிமாறினான்.

"தாங்கள் பாண்டிய மன்னரோடு வந்துள்ளீர்கள் என்று எண்ணுகிறேன்!"

"ஆமாம்! பசி வந்துவிட்டது! அதனால்தான் இங்கு இப்படி; படை வேறு புறப்படப் போகிறது! அதற்குள்! ....."

வேகமாக உண்ண ஆரம்பித்தான்.

அந்நேரத்தில் திடுதிடுவென்று சிங்கள வீரர்கள் பலர் ஆரவாரமாகப் பேசிக் கொண்டு உள்ளே நுழைந்தனர்.

திடுக்கிட்ட பொன்பெருமாள் உணவைப் பாதியிலேயே விட்டுவிட்டு, வாளை உருவிக் கொண்டு வெளியேறினான்!

சாப்பிட வந்த சிங்கள வீரர்களோ ஒன்றும் புரியாமல் அவன் பாதியிலேயே திரும்பிச் செல்வதை வியப்புடன் பார்த்தனர்.

அவசரப்பட்டுப் பாதிலேயே உணவை விட்டு வந்துவிட்ட தன் முன்ஜாக்கிரதையை எண்ணி ஒருபுறம் சிரிப்பும் உண்ணமால் வந்துவிட்டோமே என்ற வேதனையும் அவனிடம் ஒருசேர எழுந்தன.

அதே சமயத்தில் பின்னால் சிங்கள வீரர்கள் அவனைப் பின்பற்றி வருவதைக் கண்டதும் திடுக்கிட்டான்.

உடனே குதிரையைத் தட்டிவிட்டான்!

"விடாதீர்கள்! பிடியுங்கள் அவனை! சோழர் ஒற்றன் அவன்! பிடியுங்கள்!"

சிங்கள வீரன் உரக்கக் கத்தவும் உணவு விடுதிக்குள் நுழைந்து அமர்ந்த வீரர்களும் வெளியே ஓடி வந்தனர்.

குதிரையில் அவன் செல்வதைக் கண்டுவிட்ட அவர்களும் துரத்தி வந்த வீரர்களுடன் சேர்ந்து அவனைப் பிடிக்கக் குதிரைகளில் ஏறித் துரத்த ஆரம்பித்தனர்.



# 4. இராசசிம்மரின் கனவு

பாதிச் சாப்பாட்டுடன் எழுந்து வெளியேறிய பொன்பெருமாள் சாலையில் தன்னை விரட்ட ஆரம்பித்த சிங்கள வீரர்களைக் கண்டதும் தன் குதிரையைத் தட்டி விட்டான்.

தான் முன் ஜாக்கிரதையாக வெளியேறியது எவ்வளவு புத்திசாலித்தனம் என்று தன்னைத்தானே அவன் மெச்சிக் கொண்டான்.

தன் குதிரை நாலுகால் பாய்ச்சலில் பறக்க ஆரம்பித்ததும் அவன் பின்னால் திரும்பிப் பார்த்தான்.

ஒரு சில வீரர்களே பின்பற்றி வருவதைக் கண்டான். 'ஒரு கை பார்த்துவிட வேண்டியதுதான்' என்று எண்ணியவன் தன் குதிரையை மெதுவாக ஓட விட்டான்.

விரட்டி வந்த ஒரு சிலரும் அவனைச் சாதாரணமாக எடை போட்டு விட்டனர். சுற்றி வளைத்துப் போரிட ஆரம்பித்தனர். அவன் தன் வாள்வலியைக் காட்ட ஆரம்பித்தான். நாலைந்து பேர் காயம் பட்டுச் சாய்ந்து விட்டனர்.

எஞ்சியது இருவர்தான். அவர்களையும் ஒரு கை பார்ப்பதற்குள் பின்தங்கிய வீரர்கள் சாலையில் தென்பட ஆரம்பித்தனர்.

'இனி நின்றால் ஆபத்து!'

பொன்பெருமாளின் குதிரை சிட்டெனப் பறந்தது. சாலையில் ஒரு வளைவு வந்தது. அங்கு ஒரு பாறையின் மறைவில் தன் குதிரையைச் செலுத்தி மறைந்து கொண்டான். தன் குதிரையை ஆசுவாசப்படுத்திக் கொள்ள அந்த அவகாசமும் தேவைப்பட்டது.

துரத்தி வந்த வீரர்கள் அந்த இடத்திற்கு வந்து வெகுதூரம் வரை பார்வையைச் செலுத்தினர். பொன்பெருமாளைக் காண முடிய வில்லை.

"உம்! தப்பிச் சென்றுவிட்டான். நாளை புறப்படும் நாவாய் (கப்பல்) களைக் கொண்டு அவன் செல்லும் படகு எங்கு போனாலும் அவனைத் தொலைத்துவிடச் சொல்ல வேண்டியது தான். கடலிலேயே ஜலசமாதி செய்துவிட வேண்டும். இவனா இனி தப்பிச் செல்ல முடியும்? போகட்டும்! எங்கு போக முடியும்? திரும்புங்கள்!"

அவர்கள் பேசுவது சற்றுக் கேட்டது. குளம்படிச் சப்தம் ஓய்ந்த பிறகு பாறை மறைவிலிருந்து வெளியேறினான்.

"ஆகா! வந்ததே ஆபத்து! இனி இந்த வழியே சென்றால் நமக்கு ஜல சமாதிதான்! உம்! வடக்கே சென்றுதான் ஏதாவது ஒரு படகை வாடகைக்குப் பிடிக்க வேண்டும்! துறைமுக வழியாகச் சென்றால் தொலைத்து விடுவார்கள்!

"நல்லவேளை! அங்கே போனால் ஆபத்து நேரும் என்று சொல்லித் தொலைத்தார்களே! அதுவரை தப்பித்தோம்! உஸ்!.. அப்பாடா! பசி வேறு!"

முனகியவாறு கொஞ்ச தூரம் சென்றதும் வடக்கே பிரியும் பாட்டையில் தன் குதிரையைத் திருப்பி அதில் செல்ல ஆரம்பித்தான்.

xxxxxxx

அநுராதபுரத்துக்கு வெளியே விரிந்து பரந்த மைதானம்! யானை அணிகள் ஒருபுறம்! குதிரைகளின் கூட்டம் ஒருபுறம்! வாள்களுடனும், வேல்களுடனும் அணிவகுத்து நிற்கும் வீரர்கள் மற்றொருபுறம்!

எண்ணித் தொலைய முடியா அளவுப் பெருக்கம்!

அதைக் கண்ட பாண்டிய மன்னர் இராசசிம்மருக்கு அளவிட முடியாத ஆனந்தம்! ஈழமன்னர் கச்சபர் பாண்டிய மன்னரின் தோளைத் தட்டிக் கொடுத்தார்!

"அரசே! இதோ நிற்கின்ற படையணிகள்தான் தங்கள் நாட்டை மீட்கப் புறப்பட்டிருக்கும் போர் மறவர்கள்! ஆங்காங்கு நிறுத்தப்பட்டிருக்கும் படையணிகளும் தங்களுடன் சேர்ந்து கொள்ளும்.

"ஒன்றரை இலட்சம் தாண்டும் இந்த சேனா சமுத்திரத்தைக் கொண்டு சோழ சாம்ராஜ்யத்தையே மூழ்கடியுங்கள்! வெற்றி மாலை சூடுங்கள்!

"தண்டநாயகர் சக்கனும் உங்களுடன் படை நடத்தி வருகிறார். துறைமுகத்தில் காத்திருக்கும் கணக்கற்ற நாவாய்கள் இவர்களை ஏற்றிச் செல்லும்!"

பாண்டிய மன்னருக்குப் பேச நா எழவில்ல! அரசர் கச்சபரின் கைகளை இறுகப் பற்றிக்கொண்டார்!

"அரசே! உங்களுடைய இந்த உதவியை நான் என்றென்றும் மறக்க மாட்டேன். இந்தப் படையைக் கொண்டு பாண்டிய நாட்டைமட்டும் மீட்க மாட்டேன்! நாவலந்தீவு (தமிழகம்) முழுவதும் மீட்டு என் காலடியில் விழ வைப்பேன்!

"மண்மேடாகக் காட்சியளிக்கும் என் பாண்டிய மண்டலத்தைப் பொன்விளையும் பூமியாக மாற்றுவேன்! என்றுமே என் முன்னோர் காணாத வெற்றியை நான் இனிக் காணப் போகிறேன்! என் குலத்திற்கு நேர்ந்த மாசைக் களைந்து முன்னோர் புகழை நான் மீண்டும் நிலை நிறுத்துவேன்!

"சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பண்டைப் பெரியோர்களின் புகழைப் பார் எங்கும் பறைசாற்றுவேன்! பாண்டியரே இந்த நானிலத்தை ஆண்ட பண்டையர் பரம்பரை என்பதைப் பாருக்கு உணர்த்துவேன்! தாய் மண்ணே! தனயன் உன்னை இதோ மீட்கப் புறப்பட்டு விட்டேன்!"

உணர்ச்சிக் கொந்தளிப்பில் வீரவசனம் பேசினார். அத்தனை ஆதங்கம் அவர் மனதில் தேங்கிக் கிடந்தது! தன் காலத்தில் பாண்டிய நாட்டில் பாதியைப் பறிகொடுத்து விட்டோமே என்ற பதைப்பு கண்களில் கண்ணீர் ததும்ப வைத்து விட்டது!

"நண்பரே! உமது எண்ணம் ஈடேறட்டும்!" இருவரும் கட்டித் தழுவிக் கொண்டனர்.

xxxxxxxxx

**பா**ண்டிய மன்னர் இராசசிம்மர் பட்டமேற்ற பின்புதான் பராந்தகர் தஞ்சையில் முடி சூடிக் கொண்டார்.

இராசசிம்மரின் தாய் வானவன்மாதேவி பிறந்த நாடு சேர நாடு. பராந்தகர் மனைவி பிறந்த நாடும் சேர நாடுதான்.

அத்தையும், மருமகளும் அங்கே பிறந்திருந்தாலும் வாழ்க்கைப்பட்டுப் போன இருநாடுகளுமே எலியும், பூனையும்போல என்றும் பிணக்குத்தான், போரும் பூசலும்தான்.

இதற்குமுன் இராசசிம்மரின் தாய் வானவன்மாதேவி மூலம் உறவைப் பலப்படுத்த எண்ணி சேர நாட்டுக்குத் தூது விட்டார், சேர மன்னரின் மகளை மணம் புரிய விரும்பினார்.

ஆனால் அது பலன் தரவில்லை. ஆதித்த சோழரின் நண்பராகிவிட்ட சேர மன்னர் தாணுரவி தன் மகளை ஆதித்த சோழரின் காலத்திலேயே இளவரசன் பராந்தகனுக்கு மணம் முடித்துக் கொடுத்து விட்டார்.

சோழ நாடும், பாண்டிய நாடும் பகையை வளர்த்துக் கொண்டு போனதற்கு இதுபோல் அடுத்தடுத்து நேர்ந்த சம்பவங்களும், போர்களும்தான் காரணம்.

இக்கதை நடந்த காலத்தில் நடந்தவைபோல பின்னும் பல போர்களும், பழி வாங்குதலும் நடந்துள்ளன.

மேலும் எல்லைப்புறத்தில் இருந்த கொடும்பாளூர் சிற்றரசர்களும் சோழரோடு சேர்ந்து எல்லைப்புறத்தில் சச்சரவு செய்து கொண்டிருந்தனர்.

எல்லைப்புறத்தில் இதை முடிவுக்குக் கொண்டுவர, முடி சூடிய உடனேயே இராசசிம்மர், ஆதித்த சோழர் காலத்திலேயே கொடும்பாளூரைப் பிடித்து அடக்கினார்.

நெருங்கிய உறவு கொண்டிருந்ததால் கோபம் கொண்ட சோழ இளவரசன் பராந்தகன் பாண்டியர் படையை விரட்டிக் கொடும்பாளூரை மீட்டுக் கொடுத்தார்.

பராந்தக சோழர் பட்டமேற்றதும் முதற்காரியமாக பாண்டிய நாட்டின்மீது போர் தொடுத்து இராசசிம்மரையும் தோற்கடித்துத் தலைநகர் மதுரையைப் பிடித்துக் கொண்டார்.

அதனால் மதுரை கொண்ட கோப்பரகேசரி என்ற விருதும் கொண்டார். தென்பகுதியில் தன் நிலையைப் பலப்படுத்திக் கொண்ட இராசசிம்மர் கடந்த பத்துப் பதினைந்து ஆண்டுகளாகப் படை திரட்டுவதோடு மட்டும் நில்லாது ஈழத்தின் உதவியை நாடி நின்றார்.

காலம் கனிந்தது. படையும் திரண்டது. உதவியும் கிடைத்தது. ஈழத்திலிருந்து படைகள் கப்பல்களில் புறப்பட ஆரம்பித்தன.

யானைகள் பெரிய மரக்கலங்களிலும், குதிரைகள் அடுத்த வகை மரக்கலங்களிலும், சேனா வீரர்களும், ஆயுதங்களும் மற்ற கப்பல்களிலும் புறப்பட அவை வங்கக் கடலில் சங்கநாதம் முழங்கியவாறு பயணத்தைத் தொடங்கின.

ஈழ மன்னர் கப்பல் துறைக்கு நேரே வந்திருந்து வாழ்த்தி வழியனுப்பி வைத்தார்.

இராசசிம்மரும், ஈழப் படைத் தண்டநாயகர் சக்கனும் அழகாக அலங்கரிக்கப்பட்ட கப்பலில் ஏறினர்.

கப்பலில் கால் வைத்து ஏறும்போது இராசசிம்மரின் கால் இடறியது. அபசகுனமாக உள்ளதே என்று பாண்டியர் பதைபதைத்தார்.

ஆனால் சிங்களத் தண்டநாயகர் சிரித்தவாறு ஏறி அவருக்குக் கைலாகு கொடுத்து உள்ளே அழைத்துச் சென்றார். கப்பல் புறப்பட்டது.

கடல் அலைகளைப் பார்த்தவாறு மேல்தளத்தில் நின்று கொண்டிருந்தார். 'நான் தலைநகரை இழந்தது பாண்டிய குலத்துக்கே அவமானம். ஒன்று வெற்றி அல்லது வீரமரணம்!'

ஆவேசம் குடிகொண்டது.

'தமிழக மண்ணில் எப்போது கால் வைப்போம்?'

அலைகள் ஆவேசமாக ஆர்ப்பரித்தன. அவை அவரை வரவேண்டாம், வேண்டாம் என்று கப்பலைத் தடுத்துக் கூறினவோ?

வீணாக ஆபத்தைத் தேடிக் கொள்ளாதே என ஆர்ப்பரித்தனவோ? அரற்றினவோ?

யார் கண்டது?

இப்படையைக் கொண்டு தமிழகம் முழுவதையும் வெற்றி கொள்வதுடன், ஏன் இராஷ்டிரகூடர் மற்றும் சாளுக்கியரையும் சமர் செய்து வென்றடக்கிவிட முடியும் என்று கனவு வேறு காண ஆரம்பித்தார்.

அவர் கண்ட கனவு நிறைவேறியிருக்கும். ஆனால் விதி வேறு ரூபத்தில விளையாடப் போகிறது என்பதைப் பாவம் அவர் அறிய வில்லையே!

XXXXXXXXXX

தண்டமிழ் வளர்த்த மதுரைக் கோட்டையில் பாண்டிய மன்னரின் மீனக் கொடி பறக்கவில்லையே! வாயைத் திறந்தவாறு இருகால்களை ஊன்றியவாறு நின்ற புலி பொறித்த கொடியல்லவா, நான்தான் புவிக் கெல்லாம் அரசன் எனப் பறைசாற்றுவதுபோல கம்பீரமாகப் பறந்து கொண்டிருந்தது!

சோழ வீரர்கள் நடமாட்டம் அதிகரித்திருந்தது. இரவு நேரமானதால் ஆங்காங்கே தீப்பந்தங்கள் ஏற்றப்பட்டு எண்ணெய் ஊற்றுவார் எண்ணெய் வாளியுடன் ஆங்காங்கு தென்பட்டனர்.

அதோ கம்பீரமாக உயர்ந்து நின்ற மாளிகை வாசலில் வீரர்களின் காவல் பலப்பட்டிருந்தது. அதுதான் தென்திசைத் தண்டநாயகர் அரசுருடையான் தீரன் சென்னிப் பேரரையர் தங்கியிருக்கும் மாளிகை.

ஒரு குதிரை அம்மாளிகையை நோக்கி விரைந்து வந்து கொண்டிருந்தது. அதில் வந்துகொண்டிருந்தவன் முன்னமே நமக்கு அறிமுகமானவன்தான்.

பொன்பெருமாள்தான் புழுதி படிந்த ஆடையுடன் புயலென வந்து கொண்டிருந்தான். உடையைப்பற்றியோ, உணவைப் பற்றியோ அவனுக்குக் கவலையில்லை.

கொண்டு வரும் தகவல் ஆபத்தானது; அவசரமானது. எனவே எதைப்பற்றியும் கவலை கொள்ளாது அடுத்தடுத்து குதிரைகள் மாற்றி வந்து தண்டநாயகரைக் காண இதோ வந்து சேர்ந்து விட்டான். வில்லில் இருந்து விடுபட்ட அம்பெனப் பொன்பெருமாள் அம்மாளிகைக்குள் நுழைந்து விட்டான்.



# 5. வனமாலையின் வலையில்

பராந்தக சோழரின் தென்திசைத் தண்டநாயகர் அரசூருடையான் தீரன்சென்னிப் பேரரையர் இளவயது முதற்கொண்டே ஆதித்த சோழருடன் பழகியவர். ஒன்றாகவே காஞ்சிக் கடிகையில் கல்வி பயின்றவர்கள்.

அதனால் மட்டுமல்லாமல் பல போர்களிலும் தோளோடு தோள் நின்று போரிட்டு வெற்றி பெற்றவர்கள்.

தந்தைக்கும், மகனுக்கும் தொடர்ந்து தீரன்சென்னிப் பேரரையர் தண்டநாயகராகப் பணியாற்றும் பாக்கியம் பெற்றவர். பேரரையர் என்ற விருதும் பெற்றவர்.

அவர் நாட்டு நலனிலும் பராந்தகருடைய நலனிலும் அக்கறை கொண்ட விசுவாசி. படைத்தலைவர்கள் பலரை உருவாக்கிய பயிற்சியாளரும் அவரே!

ஆஜானுபாகர். உயர்ந்த சரீரம். முழங்கால்களைத் தொடும் கரங்கள். முறுக்கி விடப்பட்ட மீசை. வெண்மையான தலைமுடி அவர் வயதை எடுத்துக் காட்டியது.

முகத்திலும், தோள்களிலும் காணப்படும் தழும்புகள் போர் முகத்தில் பெற்ற விழுப்புண்கள்.

அவர் தங்கியிருந்த மாளிகை முன்னே படைத் தலைவர்களும், அரசு அதிகாரிகளும் வருவதும் போவதுமாக இருந்தனர்.

கலகலப்புடன் காணப்பட்ட அம்மாளிகையினுள் பொன் பெருமாள் புயலெனப் புகுந்து விட்டான்.

அவனைக் கண்டதும் காவலர்கள் அங்கிருந்த மற்ற படைத்தலைவர்களையும், அதிகாரிகளையும் கண்ஜாடைக் காட்டி அப்புறப்படுத்தினர்.

அவன் வந்த கோலத்தைக் கண்டுவிட்ட அவர்களும் மறுபேச்சுப் பேசாமல் அந்த இடத்தை விட்டு அகன்றனர்.

"வணக்கம் பெருமானே!"

"என்ன பொன்னா? ஏதேனும் செய்தி உண்டா?" பொன் பெருமாளை அவர் 'பொன்னா' என்றுதான் அழைப்பார். வேறு யாரும் அப்படி அவனை அழைக்க முடியாது. அழைக்கவும் விடமாட்டான்.

"ஆமாம்!"

"பாண்டிய மன்னர் ஈழமன்னரிடம் படை உதவி பெற்று விட்டார்!"

"அப்படியா?"

"அவர் ஈழத்தண்டநாயகர் சக்கனுடன் கப்பல்களில் ஒன்றரை இலட்சம் சிங்கள வீரர்களுடன் புறப்பட்டு வருகிறார் பெருமானே!"

"என்ன? ஒன்றரை இலட்சமா?"

வியப்பு அவர் முகத்தில் விளையாடியது! என்றாலும் அடுத்த நொடியே அவர் 'கடகட'வெனச் சிரித்தார்.

"என்ன? நாம் இங்கு பூப்பறிப்போம் என்று எண்ணி விட்டார்களா? வரட்டும்; வரட்டும்! அவர்களை ஒரு கை பார்ப்போம்! உம்!... இந்தத் தகவலை உடனே பேரரசருக்கும் மற்ற தண்ட நாயகர்களுக்கும் தெரிவிக்க வேண்டுமே!"

உள்ளேயே நடை போட்டவாறு சற்று சிந்தனை வசப்பட்டார்.

"உம்!... சரி! நீ இரவு நன்றாக ஓய்வு எடுத்துக் கொள். முன்னமே நான் செய்தி அனுப்பி விடுகிறேன். நீயும் அதிகாலை புறப்படத் தயாராக வந்து சேர்!"

"ஆகட்டும் பிரபு!"

வணங்கி விடை பெற்றுச் சென்றான்.

அதே நேரத்தில் மதுரையின் மற்றொரு பக்கத்தில் கணிகையர் வீதியில் வனமாலையின் மாளிகையில் ஓய்வில் இருந்த சோழவீரர்கள் பலர் கூடி அவளது நடனத்தைக் கண்டுகளித்துக் கொண்டிருந்தனர். மதுவைப் பணியாட்கள் ஊற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தனர்.

வனமாலை, சோழ நாட்டுக் குதிரைப் படைத் தளபதி மாதவ மகேந்திரனின் மனம் கவர்ந்தவள். அவள் நெருப்பு. அவளிடம் யாரும் வாலாட்ட முடியாது. அவள் நடனத்தைக் கண்டு களிக்கலாம். அவ்வளவுதான்.

இசை முழங்கிக் கொண்டிருந்தது. பாடகி பாடிக் கொண்டிருந்தாள். வனமாலை அதற்கேற்ப நடனம் ஆடிக் கொண்டிருந்தாள்.

(எடுப்பு)

பாண்டிய நாடு பாவுடைத்து! இங்கு
பல்வளங் காட்டும் காவுடைத்து! - செல்வப்
(பாண்டிய)

(தொடுப்பு)

வேண்டிய யாவும் தந்திடுமே! - மக்கள்
வீரமும் கல்வியும் ஓங்கிடுமே!-இன்பம்
(பாண்டிய)

(முடிப்பு)

முத்தமிழ் காத்த வழிமுறையாம்! - எங்கள்
முன்னவர் புகழ்பாட நாஇனிக்கும்.
தத்திடும் மொழியுடைத் தையலர் சொல்
தமிழொலி அமிழ்தென இனித்திடுமே!
(பாண்டிய)

படைவீரர்கள் அவள் நடனத்தை இரசித்துக் கொண்டிருக்கும்போது மாதவ மகேந்திரன் வருகை புரியவே அவள் ஆட்டமும் நின்று விட்டது.

கூடியிருந்த வீரர்கள் கையொலி எழுப்பியவாறு கலைந்து சென்றனர்.

புன்னகை முகத்தில் தவழ எட்ட நின்ற அவளது அழகைப் பருகி நின்றான்.

'சொர்க்கம் என்ன வானத்திலிருந்து இறங்கி வந்து விட்டதா?'

யாழின் நரம்புகளில் இருந்து இனிய நாதம் சுகநாதமாக இன்னும் ஒலித்துக் கொண்டே இருந்தது. தலைவனுக்காக வனமாலை மறுபடி ஆட நினைக்கலாம். இசைக்கருவிகள் எல்லாம் தயார் நிலை.

எழிலின் மொத்த வடிவமாக அன்று அவள் காட்சியளித்துக் கொண்டு நின்றாள். விளக்கின் ஒளியில் அவள் அழகு கூடியே தெரிந்தது. நமக்கு மட்டுமல்ல, அவனுக்கும்தான்!

பளபளவெனக் கருங்கூந்தல். மேலே நாகலிங்கப் பூவின் வடிவில் வாரி வனையப்பட்ட கொண்டை. அழகு அரைநிலவு நெற்றி. வில் ஒத்த புருவங்கள். காதளவு ஓடிய நீள் சேல்விழிகள். சிற்பி செதுக்கியதுபோன்ற எடுப்பான நாசி.

திருமகரம் என்ற மகரமீன் வடிவில் செவியில் அமைந்த காதணிகள் செவிகளை அலங்கரித்தன.

செம்பவளக் கனியிதழ்கள். வலம்புரிச் சங்கு ஒத்த அழகிய கழுத்தில் தாழ்வடம் என்ற பதக்கத்தோடு அணியும் முத்து மாலை.

உருண்டு திரண்ட இரு தாமரை மொக்குகளை, பீதகம் என்ற வண்ணப் பட்டாடை மூடியிருந்தாலும் அவை எட்டிப் பார்க்க ஆசைப்பட்டன போன்ற அழகு பிம்பங்கள்!

இடையில் பட்டாடை மேல் தானைத்திருப்பட்டிகை என்ற இரத்தினங்களால் அமையப்பட்ட மேகலை. கைக்காறைகள் என்ற வளையல்கள் அணிந்த வழுவழுப்பான மெல்லிய கரங்கள்.

பொற்குடம் எனப் பூரித்து நின்ற குந்துபுறங்கள்! சிவந்த மெல்லிய சீரடிகள்! அவற்றில் பாடகம் என்ற அணிகள் அழகு சேர்ந்தன!

'நாம்தான் இந்திரலோகத்தில் இறங்கி விட்டோமோ? இது கனவோ?' என்று மாதவமகேந்திரன் தன் கைகளைக் கிள்ளிப் பார்த்துக் கொண்டான்.

அதேபோல அவனது ஆடை அலங்காரத்தைக் கண்டு அவளும்தான் பிரமித்து நின்றுவிட்டாள். அழகில் மன்மதனோ? ஆற்றலில் அர்ச்சுனன்தானோ? என்று மயங்கித்தான் போய்விட்டாள்!

எப்போதும் அவன் ஒரு வீரனுக்குரிய ஆடைகள் அணிந்து வருவதில்லை. மெல்லிய பட்டாடையைச் சால்வையாகப் போர்த்தி, கால்களில் வீரக் கழல்கள் 'கலீர்' என ஒலிக்க இடுப்புக் கச்சையில் மட்டும் ஒரு கட்டாரியுடன் மட்டுமே அவன் அங்கு வருவதுண்டு.

நெஞ்சில் சந்தனக் குழம்பு கமகமக்கத் தன் சுருள் சுருளான கேசத்தைத் தடவி விட்டவாறு அவன் காலடி எடுத்து வைக்கும்போது காதில் குண்டலங்கள் 'ஆகா ஆகா' என ஆரவாரிக்கின்றனவோ என அவளும் அதிசயித்தாள்.

அவர்களுடைய முதல் சந்திப்பும் ஓர் அதிசயந்தான்.

பாண்டிய நாட்டையும், தலைநகர் மதுரையையும் சோழர்கள் கைப்பற்றிய நள்ளிரவு நேரத்தில் குதிரைப் படைத்தலைவனான அவன் சாதாரண உடையில் நகர் வலம் வந்து கொண்டிருந்தான். நகரமே அடங்கியிருந்தது.

அவளது மாளிகை அருகில் அவன் வரும்போது அலறல் சப்தம் கேட்டது. சட்டென்று குதிரையிலிருந்து இறங்கி உள்ளே ஓடிப் பார்த்தான்.

அக்காட்சியைக் கண்டு திடுக்கிட்டான். முரடன் ஒருவன் கையில் ஒரு மூட்டை. மற்றொரு கையில் அவள். இழுத்துத் தூக்கிச் செல்ல முயன்றான்.

"நில் அங்கே! அடுத்த அடி எடுத்து வைத்தால் தொலைந்தாய்!"

மாதவமகேந்திரன் கர்ஜித்தான்!

அவனுடைய உடையைக் கண்டு முரடன் சாதாரணமாக எடை போட்டு விட்டான்.

"யாரடா இவன்? நாடே கொள்ளை போச்சு! என் பங்குக்கு இவளும் இவள் நகைகளும் போதும்! நீ வேறு இடம் பார்த்துக் கொள்!"

வனமாலை அலறினாள்!

"ஐயா! என்னைக் காப்பாற்றுங்கள்!"

"பெண்ணை மதிக்காத பேடியே! தொலைந்தாய் நீ!"

ஒரே பாய்ச்சலாக அவன் முரடன்மேல் பாய்ந்தான். வனமாலையை விடுத்து இவனுடன் கட்டிப் புரண்டான். மாதவ மகேந்திரனின் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் தடுமாறி அவன் விழுந்து விட்டான்.

கோபம் கொண்ட மாதவமகேந்திரன் இடுப்பில் இருந்த கட்டாரியை எடுத்து அவனது மார்பில் பாய்ச்சினான்.

"ஆ!"

"தொலைந்து போ!"

எட்டி உதைத்தான் படிகளில்! உருண்டான் அவன்!

வனமாலை அதிர்ச்சியுடன் பார்த்துக் கொண்டிருந்தாள்!

"யார் இவன்? தெரியுமா?"

"தெரியும் ஐயா! இந்நகரத்து முரடன்! சிறையில் அடைபட்டிருந்தவன்! சமயம் பார்த்துக் கொள்ளையிட வந்த கொடூரன் இவன்! என்னைக் காப்பாற்றியதற்கு நன்றி!"

"இவனை அப்புறப்படுத்த ஆட்கள் வருவார்கள்! அது சரி, நீ யார்?"

"நான் நாட்டிய மாது! அரச சபையிலும் ஆடுவேன்! மக்களை மகிழ்விப்பதும் உண்டு! கலையால் மட்டுமே! ஆனால்?"

"என்ன?"

"என்னைத் தாழ்வாக எடை போட்டுவிடாதீர்கள்! நான் நெருப்பு!"

"பெண்ணே! நடனம் பார்க்க இரசிகனாக வரலாம் அல்லவா?"

"ஓ!... என்றும் என் மாளிகை தங்களுக்காகத் திறந்திருந் திருக்கும்! ஆபத்தில் காத்தவர் அல்லவா?"

சிரித்துக் கொண்டே புறப்பட்டான்.

"வருகிறேன்!"

"சென்று வாருங்கள்!"

அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஓடிப் பதுங்கியிருந்த சேடிகள் எல்லாரும் வெளியில் வந்தனர். விழுந்து கிடந்த முரடனைக் கண்டனர்.

"தொலைந்து போனான் பாவி! ஒழியட்டும்!" நெட்டியை முறித்தனர்.

அன்றுமுதல் மாதவமகேந்திரன் படைவீரனாக அல்லாமல் பெரிய தனவந்தன்போல வர ஆரம்பித்தான்.

இன்றும் அப்படித்தான்.

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?"

முதலில் வனமாலையே இருவர் பிரமிப்பையும் உடைத்தாள்.

"வனமாலை! கலையின் பிறப்பிடமே! கண்கொள்ளாக் காட்சியன்றோ இன்று நான் காண்பது?"

"நான் மட்டும என்னவாம்? சுந்தர புருஷனைக் கண்டதும் பேச்சிழந்து நின்று விட்டேனே?"

கடகடவெனச் சிரித்தவாறு அவளை நெருங்கிய மாதவ மகேந்திரன் இறுகக் கட்டியணைத்தான்!

"வனமாலை! வனத்திலே அன்றலர்ந்த மலர்களை எல்லாம் தேர்ந்தெடுத்து மாலையாகத் தொடுத்திட்ட அந்தப் பிரமனே உன்னைக் கண்டாலும் உன் அழகில் சொக்கி மயங்கியே விடுவான்!"

ஆடல் அழகி நாணம் வசப்பட்டாள்!

"பிரபு! மிகவும் புகழ்கிறீர்கள்! ஆமாம்! ஏன் தினம்தோறும் இப்பொழுதெல்லாம் வருவதில்லை?"

"அழகுப் பதுமையை எனக்கு உரிமையாக்கிக் கொள்ளும் வரை ஆசைக்கு அணை போட்டுக் கொண்டேன்!"

"ஏன், பெண்ணுக்கு அந்த ஆசையில்லையா?"

"கடமையை முடித்துவிட்டுக் கடுகி வந்துவிடுவேன்! கவலைப்படாதே கண்ணே!"

"கடமை கடமை என்கிறீர்களே! காதலியின் குறை தீர்க்கக் கரம் பிடிப்பதும் ஒரு கடமைதானே! அந்தக் கடமையை எப்போதுதான் நிறைவேற்றப் போகிறீர்கள்?"

அச்சமயம் வாசலில் ஆள் அரவம் கேட்டது.

இருவரும் திரும்பிப் பார்த்தனர்.

வீரன் ஒருவன் மாதவமகேந்திரனை வணங்கி நின்றான்.

அதைக் கண்ட வனமாலை அதிர்ச்சியடைந்தாள்!

"என்ன?"

"தண்டநாயகர் தங்களை அழைக்கிறார் பிரபு!" அதைக் கேட்டதும் அவள் உறைந்து போனாள்!

"வனமாலை! வருகிறேன்!" அவள் பதிலுக்குக்கூடக் காத்திராமல் மாதவமகேந்திரன் விரைந்தான்!

வனமாலை அப்படியே சிலையாக நின்றுவிட்டாள்! இசைக் குழுவினர் ஏதும் செய்ய இயலாது அவர்களும் அப்படியே இருந்தனர்!



# 6. அக்காளுக்குத் தங்கையே போட்டி!

வனமாலையின் அதிர்ச்சிக்குக் காரணம் புரிந்த சேடிகள் எழுந்து அவள் அருகில் வந்தனர்.

"அம்மணி!"

குரல் கேட்டுத் தன் சுயநினைவுக்கு வந்துவிட்டாள்.

"தாங்களா இப்படி நிலை குலைந்து போவது? நாங்கள் தயாராக இருக்கிறோம்! தாங்கள் கட்டளையிட்டால் செயலில் இறங்கச் சித்தமாயிருக்கிறோம்!"

சுய உணர்வு பெற்ற வனமாலை அவர்களை ஏறிட்டுப் பார்த்தாள்! கடமையிலேயே கண்ணும் கருத்துமாக இருப்பவர்கள் அவர்கள்தானா?

தன் கடமை என்ன என்பதையும் உணர்ந்தவள் அவளும்தான்! காதலுக்குத் தந்த மனத்தைச் சற்று ஒதுக்கி வைத்துவிட்டாள் இப்போது!

"உம்!... ஆனைமலை அருகில் சோழர் படைகள் தண்டு இறங்கியுள்ளன அல்லவா? அங்கு செல்லுங்கள்! ஆடிப் பாடி மகிழச் செய்யுங்கள்! அத்தோடு உங்கள் கடமையையும் மறக்காதீர்கள்!"

"அப்படியே ஆகட்டும் அம்மணி!"

"மதுக்குவளைகளும் மட்டின்றிப் புழங்கட்டும்!"

"எல்லாம் தயார் நிலையில் உள்ளன!"

"மதுக்குடம் வைத்திருப்பவர்களை முதலில் மயக்குவது உங்கள் முக்கிய பொறுப்பு! அதை மறந்து விடாதீர்கள்!"

"அது எங்களுக்குக் கைவந்த கலை அம்மணி!"

"வெற்றி கிடைக்கட்டும்!"

நடனப் பெண்மணிகளும், இசைக்கருவிகளுடன் அவற்றை இசைப்போரும் வண்டியில் ஏறிக் கொண்டபின் வண்டிகள் கிளம்பின.

வனமாலை வழியனுப்பி வைத்துவிட்டுத் தன் மாளிகைக்குள் நுழைந்தாள்.

மாதவமகேந்திரனைச் சற்றுமுன் அறிந்தபோது ஏற்பட்ட அதிர்ச்சியை அவளால் ஜீரணிக்க முடியவில்லை!

என்றாலும் அவனை அவளால் மறக்கவும் முடியாது; ஒதுக்கவும் முடியாது! அவளது வலையில் அவன் விழுந்தானா அல்லது அவனது அழகு, வீரத்தில், பண்பில் அவள் உள்ளம் பறிகொடுத்தாளா?

அவளுக்கே அதுவும் விளங்கவில்லை! புரியவில்லை.

இனி என்ன செய்வது? அவனை மறக்க முடியுமா?

ஊகூம்! முடியாது!...

அவனும் வேண்டும்! அவளது கடமையும் நிறைவேற வேண்டும்!

இது எப்படி இரண்டும் சாத்தியமாகும்?

'சாதித்துக் காட்டுவேன்!' என்று சபதம் பூண்டாள்! மனத்தில் ஏற்பட்டிருந்த சஞ்சலங்கள் அனைத்தையும் அதன்மூலம் துடைத்தெறிந்தாள்!

அவன் இனி எப்போது வருவான் என்று பேதை மனம் ஏங்கவும் செய்தது! அதே நேரத்தில் தன்னால் அனுப்பப்பட்ட ஆடல் மகளிர் சாதித்து வரும்போது வரவேற்கவும் காத்திருந்தாள்!

இரண்டுக்கும் இடையே அவள் ஆடும் ஊசலானாள்!

xxxxxxxxx

அதோ அந்த நகரம் விரிந்து பரந்து கோட்டை கொத்தளங்கள் கொண்டதாகத் தெரிகின்றதே அதுதான் முன்பு ஒரு காலத்தில் பழையிறை என்று அழைக்கப்பட்டது.

சமணம் தழைத்த நகரம்!

அதேபோல சைவ சமயக் குரவர்கள் காலத்தில் பழையாறை என்ற பெயரும் பெற்று புகழுடன் விளங்கியது.

பல்லவமல்லன் என்ற இரண்டாம் நந்திவர்ம பல்லவன் காலத்தில் நந்திபுரம் எனப் பெயரும் பெற்றது.

விஜயாலாய சோழனின் பழைய தலைநகரம். தஞ்சை தலைநகரானபோதும் இன்னும் அதன் மதிப்புக் குறையவில்லை. கலகலப்பான நகராகவே காட்சியளித்தது.

முடிகொண்டான் ஆற்றுக்கும் அரிசிலாற்றுக்கும் இடையே பரந்துபட்ட அந்நகரில் நந்திபுர விண்ணகரமும், நாற்புறமும் உள்ள . நான்கு சிவாலயங்களும், போர்வீரர்களின் குடியிருப்புகளான ஆரியப் படை வீடு, புதுப் படை வீடு, மணப் படை வீடு, பம்பைப் படை வீடு ஆகியவைகளும் அவற்றிற்கு நடுநாயகமாகத் திகழும் வானளாவிய ஏழ்நிலை மாடங்களாக எழுந்து நிற்கும் சோழ அரண்மனையும், ஓடைகள் மூலம் தடாகங்கள் நீர் பெற்றும் பொங்கியும் பொலிந்தன.

இளவரசர்கள், இளவரசிகள் ஒவ்வொருவருக்கும் அரசி களுக்கும் எனத் தனித்தனியாக மாளிகைகள் அரண்மனைக்குள் இருந்தன.

ஆதித்த சோழர் தஞ்சையைக் கைக்கொண்டதும் தஞ்சையைத் தலைநகராக்கிக் கொண்டார். என்றாலும், அவருடைய திருக் குமாரரான பராந்தக சோழ மன்னர் பழையாறையைப் போற்றி வந்தார்.

தன் மனைவிமார்களும், இளவரசிகளும் வாழ்வதற்காக அழகான மாளிகைகளை எழுப்பினார். அத்தனை மாளிகைகளும் எப்போதும் கலகல என்றிருக்கும்.

காரணம், ஒன்று அரசர் விஜயம் செய்வார்; அல்லது அரசிமார்கள் தங்கள் மக்களைக் காண வருவார்கள். இல்லை என்றால் இளவரசர்கள் தங்கள் நண்பர்களுடன் விஜயம் செய்வார்கள்.

அன்றும் அதேபோல மூத்த இளவரசன் இராசதித்தனும் தனது சிற்றன்னைகளையும், சகோதரிகளான இளவரசிகள் வீரமா தேவியையும், அநுபமாவையும் பார்க்கப் பழையாறை விஜயம் செய்திருந்தான்.

இளவரசனே அங்கு வந்துவிட்டதால் அவனைப் பார்க்க அமைச்சர், தளபதி, அரச தூதர் மற்றும் அதிகாரிகள் பலரும் வந்துள்ளனர்.

மேலும் அவனைப் பார்க்க அவனது தோழனும் கொடும்பாளூர் இளவரசனும், தென்திசைத் தண்டநாயகர் அரசூருடையான் தீரன் சென்னிப் பேரரையரிடம் படைத் தலைவனாக உள்ள விக்கிரமனும் வருகை தரப் போகிறான்.

அவன் வரவை எதிர்பார்த்து இளவரசனும் அரண்மனை அதிகாரி களுடன் அவனை வரவேற்கக் காத்திருந்தான்.

சோழ அரண்மனையை ஒட்டித் தென்புறத்தில் ஓர் ஓடை! அது முன்னமே ஆழப்படுத்தப்பட்டிருந்தது. அரண்மனை அந்தப்புர மகளிர் அதில் நீராடியும், படகுகள் விட்டும் மகிழ்ந்தனர்.

அழகிய பூங்காவனமும் நீரோடையை ஒட்டினாற்போல் இருந்தது. வனப்பு மிகுந்தது. வாசமிகு பூக்களை வாரி வழங்கும் மரங்களும் அதைத் தழுவிப் படரும் முல்லை, மல்லிகை, இருவாட்சிப் பூங்கொடிகளும் சேர்ந்து மணத்தை வாரி வழங்கிக் கொண்டிருந்தன.

இரு இளவரசிகளுக்கும் அவன் வரப்போகும் தகவல் எட்டியது. உடனேயே பூங்காவை விட்டு மாளிகை திரும்பினர்.

தங்களை அலங்கரித்துக் கொள்வதில் அவர்கள் இருவருமே ஆர்வம் காட்டினர்.

வரும் இளவரசன் அழகன் மட்டுமல்ல, வீராதி வீரனல்லவா? தென்திசைக் காவற்படைத் தலைவன் மட்டுமல்ல, உறவுக் காரனும் கூட.

மூத்த இளவரசி வீரமாதேவி அமைதியான குணம் உள்ளவள். சந்திர முகம். மயில்போன்ற நீண்ட கழுத்து. சீவி வளைத்த மூங்கில் ஒத்த தோள்கள். காதளவு ஓடிய கரிய விழிகள். செங்கமல மொக்கு நெஞ்சங்கள். துடி இடை. வாழைத்தண்டு ஒத்த உருண்டு திரண்ட தொடைகள். பூரித்த பின் எழில் பாகங்கள். வாழைப் பூப் பாதங்கள். இளையவள் அநுபமாவோ சற்று படபடப்பானவள். பளபளப்பான நீண்ட முகம். திரண்டு உருண்ட தாமரை மொக்கு நெஞ்சங்கள். கன்னங்கள் கனிந்த மாம்பழங்கள். தேனூறும் சிவந்த இதழ்கள். வெண்மூங்கில் தோள்கள். சிறுத்த இடை. நீண்ட வாளிப்பான கரங்கள். மெல்லிய வெண்டைக்காய் விரல்கள்.

உள்ளடங்கிய மென்மையான வயிறு. கதலித் தண்டு ஒத்த கால்கள். உருண்டு திரண்ட ஏற்றமிகு இரு குந்துபுறங்கள்.

இருவருக்குமே சுருண்டு நெளியும் சிற்றலைபோன்ற கருங்கூந்தல். வரிசைப்படுத்திய வெண்முத்துப் பற்கள். பாதங்களில் செம்பஞ்சுக் குழம்பில் சித்திரங்கள்!

மூத்தவள் சிவப்பு நிறக் கோசிகம் என்ற பட்டாடையும் நீலநிற மார்புக் கச்சையும், இளையவள் சித்திரைக் கம்பி என்ற பொன்னிழையோடு நெய்யப்பட்ட பச்சைப் பட்டாடையும் இளம்சிவப்பு மார்புக் கச்சையும் அணிந்து கொண்டனர்.

இருவரும் மிக மெல்லிய வெளிறிய மஞ்சள் பட்டாடையில் இடுப்பில் செருகி இரண்டாக வகுத்து இரு தோள்களிலும் போட்டுச் சரிய விட்டிருந்தனர்.

பணிப்பெண்கள் இளவரசிகள் விருப்பப்படி தலை யலங்காரம் செய்ய ஆரம்பித்தனர்.

வீரமாதேவிக்கு அழகாக ஐந்தடுக்குகளாகக் கொண்டை போட்டது மகுடம் சூட்டியதுபோல அமைந்தது. இளையவளுக்கு அளக பாரத்தை மூன்று பாகங்களாகப் பிரித்துத் தனித்தனியாக முறுக்கி ஒன்றுடன் ஒன்றை விட்டுப் பின்னி உச்சிமேட்டின் சரிவில் சுரைக்காயின் அடிப்பகுதி போன்ற வடிவில் கொண்டை அமைந்தது.

அவர்கள்முன் அணிகலன்கள் இருந்த அவர்களது தந்தப் பேழைகள் திறக்கப்பட்டன. அவற்றில் முழுவதும் இரத்தினங்கள், முத்துக்கள் பதித்த தங்க நகைகள் நிறைந்திருந்தன.

இரு இளவரசிகளும் தங்களுக்குப் பிடித்தமான அணிகலன் களைப் பொறுக்கி எடுக்க ஆரம்பித்தனர். ஒருத்தி அணிவதைப் போன்று மற்றொருத்தி அணியப் பிரியப்படவில்லை. அக்காளுக்கு நேரெதிர் தங்கை. குணத்தைப்போல இரசனைகளும்தான்.

வீரமாதேவி கழுத்தணியாக முத்துவடம் எடுத்தாள். அநுபமா மாணிக்க உழுத்து எடுத்தாள்.

மூத்தவள் அதற்குப் பொருத்தமாகப் பதக்கத்தோடு அணியும் முத்துமாலையான தாழ்வடம் எடுத்தாள். இளையவள் பொற்சரட்டில் இரத்தின வரிசைகளால் ஆன மாலையான பாசமாலையை எடுத்துக் கொண்டாள்.

வீரமாதேவி முத்துக் கோத்த நெற்றிச் சுட்டியும், அனுபமா இரத்தினங்கள் பதித்த நெற்றிச் சுட்டியும் எடுத்துக் கொண்டனர்.

மூத்தவள் காதணியாக முத்துச் சிடுக்கு (தோடு) எடுத்தாள். இளையவள் தொங்கல் வகையான இரத்தினங்கள் இழைத்த அரிப்புச்சரி எடுத்துக் கொண்டாள்.

இருவருமே மார்பு அணியாக பஞ்சசரி என்ற நவ ரத்தினங்களால் இழைக்கப்பட்டு ஐந்து நிலையில் அமைக்கப்பட்ட பதக்கங்களை எடுத்துக் கொண்டனர்.

வீரமாதேவி இடுப்புக்கு என்று பருமுத்துக் கோவை முப்பத்திரண்டால் ஆன விரிசிகை என்ற அணிகலனையும், அநுபமா இரத்தினங்களாலும் முத்துக்களாலும் ஆன தானைத் திருப்பட்டிகை என்ற அணிகலனையும் எடுத்துக் கொண்டனர்.

மூத்தவள் கைக்காறை என்ற முத்து வளையலையும் இளையவள் இரத்தின வளையலையும் எடுத்துக் கொண்டனர்.

விரல்களுக்கு சூடகமும், நவரத்தின மோதிரங்களும் எடுத்து வைத்துக் கொண்டனர்.

கால் அணியாக மூத்தவள் பாடகத்தையும் இளையவள் நூப்புரத்தையும் எடுத்துக் கொண்டனர்.

அவற்றை இரு இளவரசிகளுக்கும் பணிப் பெண்கள் அணிவிக்க ஆரம்பித்தனர். அவர்கள் எடுத்து வைக்க மறந்த பிருஷ்ட கண்டிகையைப் பின் எழில் வடிவங்களுக்கு அணிவித்தனர். இருவருடைய கூந்தல் அலங்காரங்களுக்கும் அழகுசேர்க்க முத்துத் தொங்கல்களை தொங்க விட்டும் பதியவைத்தும் சோடித்தனர்.

பணிப்பெண்கள் அலங்கரிக்க ஆரம்பித்தபோதே இருவரும் உரையாடத் தொடங்கி விட்டனர். இருவர் முகத்திலும் ஆனந்தக் களை தாண்டவமாடியது.

"அநுபமா! நம் சோழ வளநாடு போல வேறு நாடு ஆகுமா? ஆக முடியுமா?"

"ஆக முடியாதுதான்!"

"நீர்வளம், நிலவளம் எல்லாம் காவிரித்தாய் தந்த சீதனம் அல்லவா?"

"ஆமாம்! இவற்றை எல்லாம் எதற்காகக் கேட்கிறாய்?"

"உம்!.. நமக்கு இந்த நாட்டிலேயே சாகும்வரை வாழும் பாக்கியம் கிடைக்குமா?"

அநுபமா சிரித்தபடி கூற ஆரம்பித்தாள்.

"நாம் ஏழை வீட்டில் பிறந்திருந்தால் அது சாத்தியமாகலாம்! அரச குடும்பத்தில் அல்லவா பிறந்து விட்டோம்!"

"அதனால்?......"

"அதனால், அடுத்த நாட்டு அரசிளங்குமரனுக்குக் கழுத்தை நீட்ட வேண்டியதுதான்!"

"ஆகா, நான் மாட்டேன்! இங்கேயே வாழ நான் ஆசைப் படுகிறேன்!"

"அது எப்படிச் சாத்தியமாகும்?"

"ஏன் முடியாது? இங்குள்ள சிற்றரசர்களின் குமாரர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்களே! அவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டியதுதான்!"

"இங்கு என்ன, சுயம்வரமா நடத்தப் போகிறார்கள்? அதெல்லாம் கதைகளில்தான்! நம் பேரரசர் எங்கு கை நீட்டுகிறாரோ அவருக்கே மாலையிட வேண்டியதுதான்!"

"இன்று நம் இளவரசரைப் பார்க்கக் கொடும்பாளூர் இளவரசர் வருகிறாராமே! அவரே என் மனம் கவர்ந்தவர்! அவருக்கே மாலையிட வாய்த்தால்?"

"ஏன் நானும் அவரை மனதார விரும்புகிறேன்!"

'ஏய்!" அதட்டினாள் மூத்தவள்

"நான் உனக்குப் போட்டியாக வரக்கூடாதா?"

"என்னடி உளறுகிறாய்?"

"உண்மைதான்! அதனால்தானே நானும் உனக்குப் போட்டியாக இந்த அலங்காரத்தில் ஈடுபட்டேன்!"

"அப்படியானால்?"

அநுபமா சிரித்தாள்!

"வருத்தப்படாதே! இருவரில் அவருக்கு யாரைப் பிடிக்கிறதோ அவளுக்கே அவர் மாலையிடட்டும்!"

"எனக்கு விட்டுக் கொடடி! அக்காள் கேட்கிறேன்!"

"நீ எனக்கு விட்டுக் கொடேன்! உன் அருமைத் தங்கை நானல்லவா?"

அவள் கொஞ்சுவதுபோலக் கேட்டாள். சேடிகள் அவர்கள் பேசுவதை ரசித்து மெல்லச் சிரித்துக் கொண்டே அலங்காரத்தையும் முடித்துவிட்டனர்.

"உம்!... யார் யாருக்கு எங்கெங்கு என்று விதித்திருக்கிறதோ?... அதற்குள் நமக்குள் போட்டி எதற்கு? நடப்பது நடக்கட்டும்!"

தங்கை தத்துவம் பேச அவளை வியப்புடன் பார்த்தாள் வீரமாதேவி!

"என்ன பார்க்கிறாய்? இப்பொழுது பாரேன்! நாம் தேவலோகப் பெண்கள்போல அவர்முன் நிற்கப் போகிறோம்! ஆனால் அவர் நம்மை விட்டு வேற எந்த நாட்டு இளவரசியையாவது மனத்தில் வரித்து மாலையிட நினைத்திருந்தால் நம் பாடு என்னாவது?"

இருவரும் சேர்ந்தே சிரித்துவிட்டனர்.

பணிப்பெண் ஒருத்தி ஓடி வந்தாள்.

"நம் இளவரசருக்கு உடனே புறப்பட்டு வரும்படி நம் அரசர் பெருமான் ஓலை அனுப்பினாராம். அதனால் அவசரமாகக் கொடும்பளூர் இளவரசரும் நம் இளவரசருடன் அவசரமாசத் தஞ்சை புறப்பட்டுச் சென்று விட்டாராம்!"

"சே! நமது அலங்காரம் யாரை மயக்குமென்று நினைத்தோமோ! எல்லாமே வீண்! உஸ்!..."

"உம்! அக்கா நீ மயங்கி விழுந்துவிடாதே!"

அநுபமா சிரிக்கவும் வீரமாதேவியும் அவளைச் சேர்த்து அணைத்துக் கொண்டு சிரிக்க ஆரம்பித்தாள்!



# 7. அவசர ஆலோசனை

தஞ்சை நகரம் எப்போதும்போலப் பரபரப்புடன் காணப்பட்டது. வீதிகளில் வீரர்கள் குதிரைகளில் செல்வதும், பெருந்தரத்து அதிகாரிகள் தேர்களில் செல்வதும், வணிகர்கள், மகளிர் பல்லக்குகளில் செல்வதும், பொதுமக்கள் அங்காடிகளில் பொருட்களை வாங்கிச் செல்வதோடு அவர்களை வேடிக்கை பார்ப்பதும் எல்லாமே வாடிக்கையாக நடந்தேறிக் கொண்டிருந்தன.

பல நாட்டு வணிகர்களும், பொருட்களை வாங்குவதும் கூவி விற்பதுமாக அங்காடிகளில் பல மொழிக் கலப்பு உரையாடல்கள் விசித்திரமாகத் தோன்றின.

அதே நேரத்தில் சோழ வீரர்களில் சிலர் முன்னால் குதிரைகளில் சென்றவாறே "விலகு, விலகு! இளவரசர் வருகிறார்! வெற்றிவேல்! வீரவேல்!" என்று கோஷமிட்டுக் கொண்டே சென்றனர்.

மக்கள் தாங்கள் வந்த வேலையையே மறந்து இளவரசன் வரும் காட்சியைக் காண ஆவலாயினர்!

சுமார் நாற்பது, ஐம்பது குதிரை வீரர்கள் முன்னாலும், பின்னாலும் இடைவெளி விட்டு வர நடுவில் இரு குதிரைகளில் சோழ இளவரசன் இராசாதித்தனும், கொடும்பாளூர் இளவரசன் விக்கிரமனும் வந்து கொண்டிருந்தனர்.

இருவருமே ஆஜானுபாகர்கள்! கம்பீரம் குறையாத கட்டிளம் காளையர்கள். இளவரசன் இராசாதித்தனுக்கு முன்னமே திருக்கோவிலூர் மலையமான் மகளைச் சோழ மன்னர் மணம் முடித்துவிட்டார். எனவே, அவன் தன் மனைவியுடன் திருநாவலூரில் எல்லைப் படைத் தலைமை தாங்கி அங்கேயே தங்கி விட்டான்.

அன்னையரையும், அருமைத் தங்கைகளையும் காணப் பழையாறை சென்றிருந்த சமயம் அரசரது ஓலை வந்ததால் அவசரமாகப் புறப்பட வேண்டியதாயிற்று.

வழிநெடுகிலும் வீதிகளின் ஓரத்தில் நின்ற மக்கள், "பேரரசர் வாழ்க! இளவரசர் வாழ்க! தளபதி வாழ்க!" எனக் கோஷமிட்டவாறே இருந்தனர்.

மாமன்னர் கட்டளையைச் சிரமேற்கொண்டு இருவரும் பழையாறையிலிருந்து வந்துகொண்டிருந்தனர்.

"என்ன காரணமாயிருக்கும்?"

"தலைநகர் சென்றால் தெரிந்து விடுகிறது."

"யுத்த மேகங்கள் சூழ்ந்துள்ளன!"

"அவை ஆதவனைக் கண்ட பனிபோல இந்த இராசாதித்தனைக் கண்டால் மாயமாய் மறைந்துவிடும்!"

"அவை வார்த்தைக்கு வார்த்தை உண்மை!"

அதற்குமேல் பேசவில்லை. பேசுவதற்கு நேரமில்லை! அவசர அழைப்பு என்றால் அதை அசட்டை செய்ய முடியுமா?

அரண்மனை வாயிலை அடைந்துவிட்டனர். வெளியில் மக்கள் கோஷம் அவர்கள் வருகையை அரண்மனை வளாகம் அறிந்து கொண்டது.

அதிகாரிகளும், படைவீரர்களும் பரபரப்புடன் அங்குமிங்கும் ஓடி ஒழுங்குபடுத்தினர்.

அரண்மனை வாயிலில் அவர்கள் வருகைக்காகக் காத்திருந்த பொன்பெருமாளும் அவர்களுடன் உள்ளே நுழைந்தான்.

பொன்பெருமாள் அவர்களை வணங்கினான்.

"ஈழவிஜயம் என்னவாயிற்று?"

மெதுவாக விக்கிரமன் கேட்டான்.

"சென்று வந்து செய்தியும் கொண்டு வந்துள்ளேன்!"

"பேரரசரைப் பார்த்துவிட்டாயா?"

"முன்னமே மன்னர் பிரானைத் தரிசித்து விட்டேன்! தங்கள் இருவரின் வருகைக்காகக் கருமண்டபத்தில் பேரரசரும், அமைச்சர் குழாமும், பழுவேட்டரையரும், தண்டநாயகர் வெள்ளன் குமாரனாரும் காத்திருக்கின்றனர்!"

இதைக் கேட்டதும் மேலும் விரைந்து இருவரும் கருமண்டபத்தினுள் நுழைந்தனர். எல்லாரையும் வணங்கினர்.

வெளிவாயிலில் பொன்பெருமாள் நின்று கொண்டான். அவன் செய்தி கொண்டு வரும் முன்பே தென்திசைத் தண்டநாயகர் அரசூருடையான் தீரன் சென்னிப் பேரரையர் பேரரசருக்குத் தகவல் அனுப்பிவிட்டார்.

அதை ஊர்ஜிதம் செய்யவே பின்னால் பொன்பெருமாள் புறப்பட்டு வந்தான். பேரரசரிடம் தான் கண்ட, கேட்ட செய்திகளை அவன் உரைத்து விட்டான்.

பேரரசர் பராந்தக சோழரே முதலில் பேச ஆரம்பித்தார்.

"இராசசிம்ம பாண்டியர், ஈழ மன்னர் உதவியுடன் பெரும் படை திரட்டி, கப்பல்களில் வருவதாகச் செய்தி வந்துள்ளது!"

"அவர்கள் நம்மை என்ன செய்துவிட முடியும்? நாம் கடலிலேயே மறித்து அவர்கள் படைகளை அழித்து நிர்மூலம் செய்துவிட வேண்டும்!"

பழுவேட்டரையர் கண்டன் அமுதன் படபடத்தார். அவர் பேரரசருக்கு அடங்கிய சிற்றரசர் மட்டுமல்ல, தண்டநாயகரும்கூட. அத்தோடு பராந்தகரது அரசிகளில் ஒருவராகிய அருண்மொழி நங்கையின் சகோதரரும்கூட.

தண்டநாயகர் வெள்ளன்குமரன் மெல்ல நகைத்தார்.

"தாங்கள் கூறும் யோசனை காலங்கடந்த முயற்சி! நம் படைகள் அல்லது கப்பல்கள் கொற்கை செல்லும்முன் சிங்களப் படைகள் தரையிறங்கி விடுமே?"

இளவரசன் இராசாதித்தன் அமைச்சர் பூதூர் உடையான் நம்மாழ்வார் அடிகளைப் பார்த்தான்.

"அமைச்சர் பிரான் என்ன நினைக்கிறார்கள் என்பதை நான் அறிய விரும்புகிறேன்!"

"பாண்டிய மன்னர் இராசசிம்மர் அவ்வளவு விவேகமற்றவர் அல்லர்!"

"அப்படி என்றால்?"

விக்கிரமன் கேட்டான்.

இளவரசனும் மற்றுமொரு கேள்விக்கணை தொடுத்தான். "எதை வைத்து அப்படிக் கூறுகிறீர்கள்?"

"படை நடத்தி வந்தால் உடனே அவர் எடுத்தோம் கவிழ்த்தோம் என்று அவசரப்பட மாட்டார்! மேலும் வழி நெடுகிலும் நமது காவற்படைகள் மற்றும் நிலைப்படைகள் உள்ளன. அத்தோடு இந்நேரம் நமக்கும் தகவல் ஒற்றர்கள் மூலம் சென்றிருக்கும் என்று எண்ண மாட்டாரா?"

"அதனால்?"

"படைகளை ஒன்று சேர்த்து அதற்கான உணவுப் பொருட்கள் சேர்த்து பாண்டியர் தலைநகர் வருவதற்குக் குறைந்தது ஒரு திங்கள் ஆகலாம்...."

பேரரசர் இப்போது பேச ஆரம்பித்தார்.

"அமைச்சர்பிரான் தயங்காது முழுவதையும் உரைத்து விடுங்கள்!"

அமைச்சர் தொடர்ந்தார்.

"அதற்குள் நம் படைகளையும் தயார்ப்படுத்துவோம். சிற்றரசர்களுக்கு ஓலை அனுப்பி வைப்போம். நம் படையணிகள் பாண்டிய நாட்டில் இருக்கும் காவற்படைகளுடன் ஒன்று சேர்ந்த பின்பே நாம் அடுத்த கட்டத்திற்குச் செல்வதுபற்றி ஆலோசிப்போம்!"

இராசாதித்தன் குறுக்கிட்டான்.

"பேரரசர் பொறுத்தருள வேண்டும்! அமைச்சர் பிரான் கூறுவது விசித்திரமாக இருக்கிறது. அதுவரை பாண்டிய - ஈழப்படைகள் நம்மை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்குமா?"

அமைச்சர் பிரான் தலையசைத்து அதை ஆமோதித்தார்.

"இளவரசர் கூறுவதும் சரிதான். ஆனால் பாண்டியர் படைகள் சற்று நிதானம் காக்கலாம். நம்மிடம் அடிபட்டவர்கள். அதனால் சற்று நிதானிப்பார்கள். என்றாலும் ஈழப்படைகளின் வரவால் பாண்டிய நாடே அவதிக்குள்ளாகலாம்!"

"எப்படி - எதை வைத்துக் கூறுகிறீர்கள்?"

தண்டநாயகர் வெள்ளன் குமரன் கேட்டார்.

"அவர்களைக் கட்டுப்படுத்த பாண்டிய மன்னரால் முடியாமல் போகும்! எதிரிகளிடம் ஒற்றுமை இருக்காது என்பதே நமக்குக் கூடுதல் இலாபம்தானே!"

அமைச்சர் கூறியதைப் பேரரசர் ஏற்றுக் கொண்டதுபோல மௌனம் காத்தார். தண்ட நாயகர்களும், இளவரசனும் அதற்குமேல் எதுவும் கேட்கவில்லை; யோசனையும் கூறவில்லை.

விக்கிரமன் எழுந்து கேட்டான்.

"பேரரசர் கட்டளை என்னவோ?"

"படையணிகளைச் சித்தப்படுத்தித் தெற்கே நடத்திச் செல்லுங்கள். நம் கப்பற்படையும் நங்கூரமிட்டு இருக்கும் ஈழக் கப்பல்களை நிர்மூலம் செய்யட்டும்!"

"தங்கள் ஆணைப்படியே!" வணங்கி ஒவ்வொருவராக வெளியேறினர்.

பராந்தகசோழர் அமைச்சருக்குக் கட்டளையிட்டார்.

"கொடும்பாளூரில் நிறுத்தப்பட்டிருக்கும் நம் காவற் படையைத் தண்ட நாயகர் உடையான் காத்தான் தலைமையில் தென்திசை நோக்கி நடத்திச் செல்ல ஓலை அனுப்புங்கள்!"

“வடதிசை எல்லைக் காவற்படையை நகர்த்துவது பற்றி?....”

“வேண்டாம்! நம் இளவரசன் அங்கேயே திரும்பிச் செல்லட்டும். நம் தண்ட நாயகர்களே படை நடத்திச் சென்று வெற்றி வாகை சூடுவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது!” பேரரசரின் நம்பிக்கை அமைச்சருக்கே ஆச்சரியத்தைத் தந்தது.

“பெருமை கொள்ளத்தக்கதே!”

அமைச்சர் அப்படிக் கூற அதை ஆமோதிப்பதுபோல அரசர் பிரான் தலையசைத்துச் சிரித்தார்.

அடுத்து காரியங்கள் மளமளவென நடந்தன. அரசரின் பேரால் அமைச்சர் கட்டளைகள் பிறப்பிக்க திருமந்திர ஓலை நாயகம் மூலம் செய்திகள் ஒவ்வொரு சிற்றரசர்களுக்கும், தண்ட நாயகர்களுக்கும் பறந்தன.

அரண்மனையின் முன்றிலுக்கு இளவரசன் இராசாதித்தனும், விக்கிரமனும் வந்துகொண்டிருந்தபோது வாயிலில் இரு இரதங்கள் வந்து நின்றன.

ஒன்றிலிருந்து இளவரசர்கள் கண்டராதித்தனும், அரிகுல சேகரியும், உத்தமசீலியும் இறங்கினர். மற்றொன்றில் இருந்து அரசி அருண்மொழி நங்கையும் இளவரசிகள் வீரமாதேவியும், அநுபமாவும் இறங்கினர்.

“என்ன, இவர்கள் எல்லாருமே தலைநகர் திரும்புகின்றார்களே? பழையாறை பிடிக்கவில்லையோ?”

இராசாதித்தன் வினவ விக்கிரமன் மெல்லச் சிரித்தான். என்றாலும் அவனது கண்கள் இரு இளவரசிகளையும் நோக்கத் தவறவில்லை.

அரசி அருண்மொழி நங்கையை இருவரும் வணங்கினர்.

“அன்னையே! நீங்கள் எல்லாரும் தலைநகர் விஜயம் செய்யக் காரணம் என்னவோ? நான் அறியலாமா?”

அரசியின் முகத்தில் பொய்க் கோபம் புறப்பட்டது!

"என்ன அப்படிக் கேட்டுவிட்டாய்? திருக்கோவிலூரிலிருந்து தங்கைகளைப் பார்க்கப் பழையாறை வந்த நீ பாராமுகமாகத் திரும்பி வந்துவிட்டாயே! போர் மூளப் போகிறது என்ற செய்தி வேறு பரவ ஆரம்பித்து விட்டது. அதனால் உன்னைக் காண வேண்டுமென்று இவர்கள் பிடிவாதம் பிடித்தார்கள். சரி வாருங்கள் என்று அழைத்து வந்தேன்!"

வீரமாதேவியும், அநுபமாவும் தங்களுக்குள் பார்த்து மெல்லச் சிரித்துக் கொண்டனர்.

கொடும்பாளூர் இளவரசன் பழையாறை வந்தவன் இராசாதித் தனோடு புறப்பட்டுச் சென்று விட்டான். அவனை ஒரு முறை கண்ணாரக் காண வேண்டுமென்று வீரமாதேவி துடித்தாள். அநுபமா ஒரு யோசனை கூறினாள்.

சிறியவன் இளவரசன் உத்தமசீலியை அவள் உசுப்பி விட்டாள். அவன் அரசி அருண்மொழி நங்கையை நச்சரிக்க இரு இளவரசிகளும் ஆமாம் போட அவர்கள் தஞ்சைப் பயணம் வர முடிந்தது.

இரு இளவரசிகளையும் அவன் நோக்குவதை அறிந்து இருவருமே பரவசத்துடன் பார்த்துவிட்டு நாணித் தலை குனிந்து கொண்டனர். மற்றவர்கள் அறிய வாய்ப்பில்லை.

அரசி தொடர்ந்தாள்.

"இப்போதே சிவபக்தனாக மாறிவிட்ட கண்டராதித்தனை, போர் முனைக்குக் கூட்டிச் செல்வாய் என்றுதான் அழைத்து வந்தேன். அரிகுலகேசரி தானாகவே புறப்பட்டான். போகும்போது கூட்டிச் செல்!"

"அப்போ நான்?" உத்தமசீலி உரக்கக் கேட்டான்!

"என் செல்வமே! நீ போர்ப் பயிற்சி முடித்துப் புறப்படலாம்!" அவனை வீரமாதேவி இழுத்து அணைத்துக் கொண்டு கன்னத்தில் முத்தமிட்டாள். அதே வேளை கடைக் கண்ணால் விக்கிரமனை விழுங்கப் பார்த்தாள்!

அநுபமா குனிந்து பார்த்து விட்டாள்.

"ஏய்! என்ன திருட்டுத்தனம்?"

மெல்லிய குரலில் அதட்டினாள்!

"சரிதான், போடி! பொல்லாதவள் நீ!"

பதிலுக்கு அவளும் பகன்றாள்!

அதை அரசியும் கவனிக்கத் தவறவில்லை. காதல் பற்றி அவர் அறியாததா? இளவயதில் அவரும் பராந்தகனைக் காதலித்துக் கைப்பிடித்தவர்தானே! எல்லோருக்கும் அது தெரிந்ததுதானே!

இரு இளவரசிகளும் அலங்காரத்தில் மும்முரமாக இருந்ததும் அவர்கள் யாருக்காகப் புறப்பட்டு வந்தார்கள் என்பதும் அவருக்குத் தெரியாதா என்ன?

மகளிர் எல்லாரும் உள்ளே சென்ற பின் தன் தம்பிகளை அழைத்துக் கொண்டு இளவரசன் தன் மாளிகை சென்றான். அவர்கள் பின்னேயே விக்கிரமனும், பொன்பெருமாளும் ஏதோ உரையாடிக் கொண்டு உடன் சென்றனர்.

xxxxxxxxx

தென்திசைத் தண்டநாயகர் அரசூருடையான் தீரன் சென்னிப் பேரரையர் தனது அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடை போட்டுக் கொண்டிருந்தார்.

அவர் கோபத்துடன் இருக்கிறார் என்பதை அவர் நடை காட்டியது. கண்கள் காட்டின. அவை கோவைப் பழங்கள் எனச் சிவந்து கிடந்தன.

யார் வரவையோ அவர் எதிர்பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. காவலர்கள் கைகளைப் பிசைந்துகொண்டு நின்றனர். அவர் கோபம் தங்கள்மீது பாய்ந்துவிடுமோ எனப் பயந்தனர்.

எதிர்பார்க்கும் குதிரைப் படைத் தலைவன் மாதவமகேந்திரன் வந்துவிட்டால் நல்லதல்லவா?

'அதோ அவரும் வேகமாகப் படிகளில் ஏறி வந்து கொண்டிருக்கிறாரே! உஸ்! அப்பாடா!'

அவர்கள் நிம்மதிப் பெருமூச்சு விட்டனர்.

தண்டநாயகர் கோபத்துடன் இருப்பதும் செய்தி கொண்டு வந்த வீரன் செய்வதறியாது அவர்முன் நிற்பதும் கண்ட மாதவமகேந்திரன் ஏதோ வீபரீதம் ஒன்று நடந்திருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டான்!

'என்னவாயிருக்கும்?'

அவன் யூகித்து அறிய முற்பட்டபோது தண்டநாயகரே வெடித்துவிட்டார்!

"ஆனைமலைக் காட்டுப் பகுதியில் நம் வீரர்கள் சிலர் இறந்து கிடக்கின்றனர். வாளேந்திப் போர் புரிந்து மடியாமல் வீரமறவர்கள் இப்படி வீணே உயிர் துறக்க என்ன காரணம்? யார் காரணம்? கூடவே ஒரு பெண்மணியும் இறந்து கிடக்கிறாள்! யார் அவள்?"

இதைக் கேட்ட அவன் திடுக்கிட்டான்.

"உடனே எனக்கு விசாரித்துத் தகவல் தெரிவிக்க வேண்டும்! நயவஞ்சகமாகக் கொன்ற கயவர்களைக் கையும் களவுமாகப் பிடித்துக் கொண்டு வந்து என் முன் நிறுத்த வேண்டும்!"



# 8. மதுவில் நஞ்சு

ஆனைமலைக் காட்டுப் பகுதியில் சோழ வீரர்கள் சிலர் மாண்டு கிடந்த மர்மம்பற்றித் தென்திசைத் தண்டநாயகர் கூறியதைக் கேட்ட மாதவ மகேந்திரன் அதிர்ச்சியடைந்தான்!

காரணம் அவர்கள், அவனது படைவீரர்கள் அல்லவா? வணங்கி விடை பெற்றவன் குதிரையில் ஏறிக் காற்றினும் கடுகி விரைந்தான்.

காட்டுப்பகுதியில் அவன் கண்ட காட்சி உள்ளத்தை உறையச் செய்துவிட்டது. அங்கு நின்ற வீரர்கள் நடந்த கதையை விவரித்தனர்.

"நேற்று இரவு நடனம் நடந்தது. முடியும் நேரத்தில் மதுக்குடத்துடன் வந்த சில பெண்கள் அதை நம் வீரர்களுக்கு விநியோகித்தனர். அவர்களது மயக்கு மொழியில் மயங்கி அதை வாங்கிக் குடித்தனர். ஒருத்திக்கு நம் வீரர்களில் ஒருவனே வலுக்கட்டாயமாக ஊற்றிக் கொடுத்து அவளுடன் உல்லாசம் கொண்டான்.

"காட்டுப் பகுதிக்கு அந்தப் பெண்கள் மறைவாக அழைத்துச் சென்றபின் அவர்கள் எங்கு சென்றார்களோ தெரியாது. மதுக் குடித்த மங்கையும் நம் வீரர்களுடன் மாண்டு கிடந்தாள்!"

"மருத்துவர்கள் சோதனை செய்தார்களா?"

"ஆமாம்! அவர்களது சோதனையில் மதுவில் நஞ்சு கலந்து கொடுக்கப்பட்டது தெரிந்தது!"

மாதவ மகேந்திரன் திடுக்கிட்டான்!

"மதுவில் நஞ்சா?"

அவனால் அதை நம்ப முடியவில்லை! மது வழங்கும் ஆட்களை அழைத்து வரச் செய்து விசாரணை செய்தான்.

"நேற்று நாங்கள் வழங்கவில்லை. ஒருவன் வந்து வீரர்கள் விருந்துக்கு ஒரு மதுக்குடம் வேண்டும் என்று எங்களிடம் வாங்கிக் கொண்டு சென்றான். அவ்வளவுதான் தெரியும் எங்களுக்கு!"

"எங்களுக்கு வேறு ஒன்றும் தெரியாது!"

மற்றவனும் அப்படி மறுமொழி கூறினான்.

'அப்படியானால் மதுவில் நஞ்சு கலந்தது யார்?'

பாண்டிய ஒற்றர்களா? பெண்களும் உள்ளனரா?

அவனுக்கு வேதனையாக இருந்தது. வீராதி வீரர்கள் மதுவுக்கு, அடிமையாகி இப்படி மாண்டு போனார்களே!

'இதை எப்படிக் கண்டுபிடிப்பது?'

சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு வண்டித் தடம் வந்து சென்றது தெரிந்தது. அதைப் பின்பற்றித் தொடர்ந்து அறிந்து வர, வீரர்களுக்குக் கட்டளையிட்டான்.

தலைநகர் மதுரை வழியில் சென்றுள்ளது அறிந்து வந்து கூறினர். தனது காவல்வீரர்கள் சிலரை அழைத்துக்கொண்டு மதுரை நோக்கி விரைந்தான்.

அங்கு செல்லும் முன் அவன் தன் வீரர்களுக்கு இட்ட கட்டளை; அது அறிவுரையாகவும் அமைந்தது.

"யாரும் மதுகுடிக்கும் முன் கொடுப்பவர்களைக் குடிக்கச் செய்து ஒரு நாழிகை சென்று குடியுங்கள். மற்றும் ஒன்று; புதிய மனிதர்களைப் புறக்கணியுங்கள்!"

மதுரை மாநகரில் சந்தேகத்திற்குரிய பல இடங்களில் சோதனை போட்டான். ஒன்றும் பலனில்லாததால் வெறுத்துப் போன மாதவ மகேந்திரன் சற்று மனக்கவலையை மறக்க வனமாலையின் மாளிகை நோக்கி விரைந்ததுதான் வேடிக்கை!

அவன் மனத்தில் சொல்லவொண்ணா வேதனை. உள்ளம் கவர்ந்த வனமாலை அவன் கவலையை ஆடிப் பாடிப் போக்குவாள் என்று எதிர்பார்த்தே அங்கு நுழைந்தான்.

'வீர மறவர்கள்! தாயகத்து மன்னனின் பெருமை காக்கப் பாண்டியநாடு வந்த இளஞ்சிங்கங்கள்! மதுவுக்கும் மங்கைக்கும் மயங்கி மாய்ந்து போனார்களே!

'விழுப்புண் ஏந்தி வீரமரணம் அடைந்திருந்தால் தலைவன் விசனம் கொண்டிருக்க மாட்டான்! பரிதாப முடிவு கண்டு மனம் பதை பதைத்தான்! பாடுபட்டும் அவர்கள் மரணத்திற் குரியவர்கள் யார் என்று பார்த்து அறிய முடியவில்லையே!'

வாட்டத்துடன் அவன் வருவதைக் கண்ட வனமாலை உள்ளம் உருக வரவேற்றாள்.

"வாருங்கள் பிரபு! முகம் வாட்டத்துடன் உள்ளதே!"

விசிறி எடுத்து வீசியவாறு கேட்டாள்.

"யாரங்கே?" பணிப்பெண் ஒருத்தி ஓடி வந்தாள்.

"சுவை நீர் எடுத்து வா!" அவள் உள்ளே சென்றதும், அவன் கேசத்தைக் கோதியவாறு கேட்டாள்.

"களைப்போடு இருக்கிறீர்களே? பசியாறுகிறீர்களா?"

"பசியாறுவதா? நானா? என் வேதனை உனக்கு எங்கே புரியப் போகிறது?"

அவளால் நேற்று வழியனுப்பி வைக்கப்பட்ட சேடிகள் யாரும் அங்கு வராததால் ஒரு தகவலும் அவளுக்குத் தெரியாது.

"என் தலைவருக்கு வேதனை வரலாமா? வரத்தான் விடுவேனா? பிரபு! என்னவென்று கூறுங்கள்! அடியாள் முடிந்தால் அதைத் தீர்த்து வைக்கிறேன். இல்லை என்றால் ஆடவா? பாடவா?"

"ஆடலைப் பார்த்து ரசிக்கும் மன நிலையில் நான் இல்லை! என் மன வேதனையைத் தீர்த்து வைக்கவும் உன்னால் முடியாது!"

"என்னவென்றுதான் கூறுங்களேன்?" ஆத்திரத்துடன் வார்த்தைகளை அள்ளிக் கொட்டினாள்.

"பாவிகள் யாரோ, என் வீரர்களுக்கு நஞ்சு கொடுத்துக் கொன்று விட்டார்கள்! சோழ வீரார்களுக்கு நஞ்சூட்டிய நயவஞ்சகர்கள் யார்? அவர்களை நான் பிடித்தாக வேண்டும்?"

"என்ன! வீரர்களுக்கு நஞ்சு கொடுத்தார்களா? தாங்களும் சோழ வீரரா?"

"ஆமாம்! ஏன்? அதிர்ச்சியாக இருக்கிறதா?"

"என்னிடம் தாங்கள் சோழவீரர் என்று சொல்லவில்லையே!"

"நீயும் எதுவும் கேட்கவில்லையே! நானும் என்னை அறிமுகப்படுத்திக் கூறவேண்டிய அவசியமும் ஏற்படவில்லை! அன்று உன்னைக் காக்க முனைந்தபோது அறிந்திருப்பாய் என்று எண்ணியிருந்தேன்!"

"பிரபு!. ........ தாங்கள்!....."

"நான் யாரென்று விவரமாகக் கூறவேண்டுமா? சோழர் நாட்டுக் குதிரைப் படைத் தளபதி நான்!"

"ஆ!.. தளபதியா?"

"என்ன வனமாலை? வியப்பாக உள்ளதா?"

சமாளித்துச் சிரித்துக் கொண்டே அவன் கரம் பற்றினாள்.

"ஒன்றுமில்லை பிரபு! நான் காதலித்தது வணிகரையோ, வீரரையோ அல்ல! சோழ நாட்டுத் தளபதி என்னும்போது வியப்பாகவும் உள்ளது. பெருமையாகவும் உள்ளது!"

"கைப்பிடித்தால் கௌரவமும் கூடும்! கடமை முடியட்டும். காலம் கனியட்டும்! அதுவரை காத்திரு!"

மெல்ல நகைத்தாள். அவள் முகம் பார்த்திருந்தால் அதை உணர்ந்திருப்பான். ஆனால் அவளோ அவன் மார்பகத்தில் அல்லவா முகம் புதைத்திருந்தாள்!

"காலம் வருமுன்னே காலன் வந்துவிடுவான் பிரபு!"

"காலனுக்குப் பயந்தால் இந்த ஞாலத்தில் வாழவே முடியாது கண்ணே!"

அவள் பேச்சை மாற்றினாள்.

"ஆமாம்! சோழ வீரர்களுக்கு நஞ்சு கொடுத்து யாரோ மாய்த்து விட்டதாக சற்று முன் கூறினீர்களே!"

"உம்!.... நயவஞ்சகமாக மதுவில் நஞ்சு கலந்து கொடுத்து வஞ்சித்தவர்களை நான் இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லையே என்ற கவலை என்னை வாட்டுகிறது! அவர்கள் மட்டும் யாரென்று தெரிந்தால்!..." வார்த்தைகளை முடிக்க இயலாமல் பற்களை 'நறநற' எனக் கடித்தான். கோபத்தில் முகம் சிவந்தது.

"யாரென்று தெரிந்தால்?"

"அப்படியே கசக்கி எறிந்து விடுவேன்! கோழைகள்! நேருக்கு நேர் நின்று போரிடத் தெம்பில்லாமல் விஷம் கொடுக்கிறார்களாம், விஷம்!..."

அதைக் கேட்டதும் அவள் முகம் வாடிவிட்டது.

"என்ன மணமாலை? வாட்டம் எதற்கு?"

"உம்!.. இவ்வளவு கொடூரச் சிந்தை உள்ளவர்களா தாங்கள்? சே! கண்டுபிடிக்கும் முன்பே இவ்வளவு கோபம் காட்டும் நீங்கள் கண்டுபிடித்த பின்.... நினைக்கவே பயங்கரமாயிருக்கிறதே!..."

"உனக்கு இதை நினைக்கவே பயங்கரமாக இருக்கிறது என்கிறாயே? நஞ்சுண்டு மாய்ந்த வீரர்கள் எவ்வளவு துன்பத்துடன் துவண்டிருப்பார்கள்? உயிர் ஊசலாடும்போது என்னென்ன எண்ணினார்களோ? அதை நீ நினைத்துப் பார்த்தாயா?"

அதற்கு அவள் மறுமொழி ஒன்றும் கூறவில்லை. மாதவமகேந்திரனும் அதற்குமேல் பேச இயலாமல் இருக்கையில் சாய்ந்து கண்களை மூடி மௌனமானான்.

அவள் அவனருகில் அமர்ந்து அவனது கரத்தை மெல்ல அழுத்திப் பிடித்தாள். அந்தச் சுகத்தை அனுபவித்தவன் வாய் முணுமுணுத்தது!

"உம்!... அதைவிடக் கொடுமை என்னவென்றால் அத்தோடு நஞ்சூட்டிய ஒரு பெண்ணும் அதற்குப் பலியாகி விட்டாள்! பாவம்! அவளே அவளுக்கு எமனாக வாய்த்தாள்!"

"என்ன, ஒரு பெண்ணுமா இறந்து கிடந்தாள்?"

திடுக்கிட்டுக் கேட்ட அவளை உஷ்ணத்துடன் பார்த்தான்! சந்தேகப்படுவானோ என்று அவள் சஞ்சலம் அடைந்தாள்!

"ஒரு பெண் இறந்து கிடந்ததற்கு நீ பதற்றம் கொள்கிறாயே? ஆண்கள் உயிர்கள் என்ன அவ்வளவு மலிவானதா?"

அதற்கு அவள் எதுவும் கூறப் பயந்தாள்! அவன் தொடர்ந்தான்.

"அவர்கள் ஏறி வந்த வண்டி மதுரை நோக்கி வந்த தடத்தைப் பின்பற்றி வீரர்கள் மதுரையில் சந்தேகப்படும் இடங்களில் எல்லாம் சல்லடை போட்டுத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்!"

அவள் கண்கள் கலங்க ஆரம்பித்தன.

"நீ ஏன் கலங்குகிறாய்? உம்!... நான் சென்று வருகிறேன்! எப்படியும் அவர்களைக் கண்டுபிடிக்காமலா போய்விடுவேன்?" வேகமாக அவன் வெளியேறினான்.

வந்த அழுகையை அடக்க இயலாத வனமாலை வாயில் துணியை வைத்து மறைத்துக் கொண்டாள்!

"நான் காதலித்தது எங்கள் எதிரியில் ஒருவரைத்தானா? அதுவும் சோழர் படைத் தலைவரையா? இறைவா, இது என்ன சோதனை?... நான்தான் மதுவில் நஞ்சு கலந்து கொடுக்கக் காரணம் என்று அவருக்குத் தெரிந்தால்?..."

அவள் இருதலைக் கொள்ளி எறும்பானாள்! காதலைக் காக்கவும் வேண்டும். கடமையை நிறைவேற்றவும் வேண்டும்!

இது சாத்தியமா? அவளுக்குத்தான் தெரியும்! கண்ணீர் விட்டு அழுவதை அப்போது உள்ளே நுழைந்த சேடிகள் கண்டு ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

'சாதித்ததைச் சொல்ல சந்தோஷத்துடன் வந்தால் தலைவி இப்படி அழுகிறாளே!'

xxxxxxxxxx

நரசிங்கன் பாண்டிய ஒற்றர்களின் தலைவன். தன்னோடு வந்த புதிய நபரை பாண்டிய மன்னர் இராசசிம்மர் இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தான்.

இருவரது குதிரைகளும் காட்டுப் பாதையில் விரைந்து சென்று கொண்டிருந்தன.

தூரத்தே கடல் அலைகள் எழுப்பும் 'ஹோ' என்ற பேரிரைச்சலிலும், உடைமரங்கள் பனைமரக் காடுகள் ஊடே கடற்கரை மணலிலும் செல்வதால் கடற்கரைப் பக்கம்தான் நரசிங்கன் அழைத்துச் செல்கிறான் என்பதை அந்தப் புதிய நபர் அறிந்து கொண்டார்.

"பிரபு! நாம் சென்று அடைய வேண்டிய இடத்தை நெருங்கி விட்டோம்!"

"அப்படியா?"

"ஆமாம் பிரபு! கால் நாழிகை நேரத்திற்குள் அடைந்து விடலாம்!"

குதிரைகள் இரண்டும் மணலில் நடந்து செல்லக் கஷ்டப்பட்டன.

மெதுவாகவே அவர்கள் அவற்றை நடத்திச் சென்றதால் மனிதர் நடந்து செல்லும் வேகத்திலேயே அவை நடை போட்டன.

வெகு தூரத்திலிருந்து அவை வந்துகொண்டிருந்ததால் வாயிலிருந்து நுரை வழிந்துகொண்டிருக்க அவை மூச்சு வாங்கி நடந்தன.

தூரத்தே கூடாரங்கள் பல தென்பட்டன. ஆங்காங்கே யானைகளுக்குப் பனை ஓலைகளை வெட்டிப் போடுவாரும், உணவு உண்பதற்காக அவற்றை உணவுக் கலமாக வளைக்க வேறு சிலர் அள்ளிச் செல்வாரும் நூற்றுக்கணக்கான வீரர்கள் பணியில் ஈடுபட்டிருந்தனர்.

"பிரபு! உண்கலம் இத்தனைப் பேருக்கு என்றால் பண்ட பாத்திரங்களுக்கு என்ன செய்வது? எங்கே போவது? அதனால்தான் பனை ஓலைகள் உண்ணும் கலமாக இங்கு எங்களுக்குப் பயன்படுகிறது!"

அவற்றைப் பார்த்துக் கொண்டே சென்றவர் தன் பங்குக்குச் சில வார்த்தைகளை உரைத்தார்.

"எங்கள் பக்கமும் பதனீர், கள் குடிக்க இப்படிப் பனை ஓலைகளைப் பயன்படுத்துவதும் உண்டுதான்!"

"பிரபு! சற்று மெதுவாக வாருங்கள்! அதற்குள் மன்னர்பிரானைத் தரிசித்து, பேசி வருகிறேன்! பொறுத்தருள வேண்டும்!"

"சரி, சென்று வா!"

அங்கேயே தன் குதிரையிலிருந்து குதித்தவர் அதைத் தட்டிக் கொடுத்து ஆசுவாசப்படுத்தியவர் சுற்றுமுற்றும் பார்வையைப் படரவிட்டார்.

சற்று நேரத்திற்கெல்லாம் நரசிங்கன் விரைந்து வந்து அவரை அழைத்துச் சென்றான்.

உடைமரங்கள், பனங்கன்றுகள் நிறைந்த புதர் மறைவில் நின்று கவனித்துக் கொண்டிருந்த பொன்பெருமாள் அவரைப் பார்த்ததும் திடுக்கிட்டான்!

"இவர் ஏன் இங்கு வந்தார்? அதுவும் பாண்டிய ஒற்றனுடன் இவருக்கு என்ன வேலை? கட்சி மாறி விட்டாரா?"

மனம் பதைபதைத்தான்!



# 9. பரகேசரி முத்தரையர்

பாண்டிய ஒற்றனுடன் வந்த நபரைக் கண்ட பொன்பெருமாள் அதிர்ச்சியடைந்தான்!

'கட்சி மாறிவிட்டாரா? அரசர் பெருமான் இவருக்குப் பரகேசரி என்ற பட்டமும் வழங்கிச் சிறப்பித்ததற்கும் பரிசு இதுதானா?'

அவன் மனம் புழுங்கினான்.

"வரவேண்டும்! முத்தரையரே வரவேண்டும்!"

கூடாரவாசலில் நின்ற பாண்டிய மன்னர் இராசசிம்மர் இன்முகம் கொண்டு வரவேற்றார். அருகில் நின்ற ஈழ மன்னரின் தண்டநாயகர் சக்கனும் அவருக்கு வணக்கம் தெரிவித்தார்.

அவர் வேறு யாருமல்ல! சந்திரலேகையைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செய்யும் சிற்றரசர் முத்தரையர் சுந்தரத் தோளுடையான். பரகேசரி என்ற விருதுப் பெயரைப் பேரரசர் பராந்தகர் வழங்கியுள்ளதால் பரகேசரி முத்தரையர் என்று பலராலும் பாராட்டப் பெற்றவர். அரசியல் அதிகாரியாகவும் சோழ மன்னரிடம் பணி புரிந்து வருபவரும்கூட!

அதனால்தான் அவரை அங்கு பார்த்துவிட்ட பொன்பெருமாள் பொருமினான்!

பராந்தக சோழ மன்னரின் கீழ் சிற்றரசராக உள்ள ஒரு பெரிய மனிதரைத் தன் பக்கம் கொண்டு வந்துவிட்ட ஒற்றர் தலைவன் நரசிங்கனைப் பாராட்டித் தன் கழுத்தில் அணிந்திருந்த ஒரு முத்து மாலையைக் கழற்றி அங்கேயே பாண்டிய மன்னர் பரிசளித்தார்!

மகிழ்ச்சியுடன் வணங்கிப் பரிசை அவன் பெற்றுக்கொண்டு நகர்ந்தான்.

தோள்மேல் கைபோட்டு இராசசிம்மர் முத்தரையரை உள்ளே அழைத்துச் சென்றார்.

"அமருங்கள்!" எதிரே இருந்த ஆசனத்தைப் பாண்டிய மன்னர் காட்டத் தயக்கத்துடன் அவர் அமர்ந்தார்!

"எங்கள் பக்கம் வந்து சேர்ந்த உங்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்!"

"நான் அல்லவா உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்!" பாண்டிய மன்னர் வியப்புடன் பார்த்தார்!

"ஆமாம் அரசே! விஜயாலய சோழர் காலத்திலேயே எங்கள் தலை நகரை - தஞ்சைத் தரணியைக் கைப்பற்றிக் கொண்டனர். நாங்கள் நாட்டின் பெரும்பகுதியை இழந்து குறுகிய எல்லைக்குள் குவிந்தோம்! கூனிக் குறுகினோம்!

"அதுமுதல் எங்களை ஆதரித்த பாண்டிய மன்னரிடம் விசுவாசமாகவே இருந்தோம். ஆனால் என் தந்தையர்தான் கடைசிக் காலத்தில் ஆதித்த சோழரிடம் நட்புக் கொண்டு சோழர் பக்கம் சாய்ந்து விட்டார். வேறுவழியின்றி நானும் இவ்வளவு காலம் சகித்துக் கொண்டு இருக்க வேண்டியதாயிற்று!

"காலமும் கனிந்தது! அதனால் மறுபடி உங்கள் பக்கமே சேர முடிவு செய்துவிட்டேன்! என்றாலும் போர் மூளும்வரை நான் இதை வெளிக் காட்டிக் கொள்ள இயலாது. மன்னர் பிரானும் பொறுத்துக் கொள்ள வேண்டும!"

"ஆகா! அப்படியே செய்கிறேன். தாங்கள் அந்தப் பக்கம் இருந்து கொண்டே அவ்வப்பொழுது எனக்குத் தகவல் தந்து கொண்டிருங்கள்! நரசிங்கன் மூலம் அது தொடரட்டும். இடையில்

சந்திக்க விரும்பினால் அவனிடம் தகவல் தந்தால் அழைத்து வருவான்!"

"அப்படியே செய்கிறேன்! தற்போதும் கொற்கையில் குதிரை வாங்க வந்ததாகச் செய்தி பரவ வைத்தே புறப்பட்டு வந்தேன்!"

"மிக்க மகிழ்ச்சி! தங்களை நன்முறையில் நடத்துவேன். கவலை வேண்டாம்!"

"தங்கள் தரிசனம் கிடைத்ததே என் பாக்கியம்!"

"நரசிங்கா!" இராசசிம்மர் அழைத்த குரல் கேட்டு அவன் உள்ளே நுழைந்து அவரை வணங்கி நின்றான்.

"முத்தரையரை நன்முறையில் அழைதது்ச் சென்று வழியனுப்பி வை ஜாக்கிரதை!"

"அப்படியே செய்கிறேன் பெருமானே!" இருவரும் வணங்கி விடை பெற்றனர்.

xxxxxxxxxxx

பொன்பெருமாள் புயலெனத் தென்திசைத் தண்டநாயகர் தீரன் சென்னிப் பேரரையர் முன் சென்று வணங்கி நின்றான்.

அவனை ஏறிட்டுப் பார்த்தார்.

"என்ன சொல்கிறாய்? தகவல் என்ன கொண்டு வந்தாய்?"

"பரகேசரி முத்தரையர் மதுரை தாண்டி தெற்கே கொற்கைப் பாக்கம் கண்டேன்.!"

"அப்படியா?"

சுவாரசியமின்றி அவர் கேட்டார்.

"என்ன அப்படிச் சாதாரணமாகக் கேட்கிறீர்கள் பிரபு?..."

"குதிரைகள் வாங்கச் சென்றிருக்கலாம்!"

"இல்லை, பெருமானே இல்லை!"

"பின், என்ன?"

"பாண்டிய ஒற்றர் தலைவனுடன் சென்று பாண்டிய மன்னரைக் காணச் சென்றதை என் இரு கண்களால் கண்டேன்!"

"பிதற்றாதே!"

"உண்மைதான் பெருமானே!"

"அப்படியா? சரி! பின் என்ன கண்டாய்? படைபலம் பற்றி ஏதும் அறிந்தாயா?"

"இல்லை!"

தண்டநாயகர் எரிந்து விழுந்தார்!

"உன் வேலை என்ன? படைபலம் பற்றி அறியாமல் யாரோ எவருடன் சேர்ந்து விட்டதாக இங்கு வந்து கதை அளக்கிறாயே? முதலில் கொடுத்த வேலையைச் செய்!"

திடுக்கிட்ட பொன்பெருமாள், தன் பக்கம் உள்ள தவறை உணர்ந்தான்! உடனே வணங்கி விடை பெற்று வெளியேறினான்.

சே!... பெரிய மனிதர்களின் சுபாவமே இப்படித்தான் போல! பாராட்டுவார் என்று போனால் எரிந்து விழுகிறாரே! இரண்டையும் ஒருசேர தகவல் அறியாமல் வந்துவிட்டேனே! சே! நான் ஓர் அவசரக் குடுக்கைதான்!

தன் தலையில் அடித்துக் கொண்டான்!

xxxxxxxxxxxxx

நள்ளிரவு நேரம். முதல் சாமம் முடிந்து இரண்டாம் சாமம் ஆரம்ப வேளை. மதுரை வீதிகளில் சோழ வீரர்கள் குதிரைகளில் அங்குமிங்கும் செல்வதும், அல்அங்காடிகளில் வழக்கம்போல வியாபாரம் நடப்பதும், கடைகளின் ஓரத்திலேயே மக்கள் சுடச்சுட அப்பம் வாங்கி உண்பதும் ஏதோ சுறுசுறுப்புடன் நகரம் இயங்கிக் கொண்டிருப்பதாகவே தோன்றியது.

ஆனால் மக்களது மனத்திலே மகிழ்ச்சியில்லை. குடும்பங்களில் குதூகலமில்லை. மன்னர் எப்போது படை கொண்டு வருவார்? பாண்டியர் ஆட்சி எப்போது மலரும்? பழைய நிலை எப்போது திரும்பும்? என்ற கவலையுடன் அவர்கள் காலத்தைக் கடத்திக் கொண்டிருந்தனர். ஒருவித மன இறுக்கம் தெரிந்தது.

சோழ வீரர்களோ, அதிகாரிகளோ எந்தவிதத் தொந்தரவும் மக்களுக்குத் தரக்கூடாது என்று எச்சரிக்கை தந்திருந்தார் தென்திசைத் தண்டநாயகரான அரசூருடையான் தீரன் சென்னிப் பேரரையர். அவரிடம் பணியாற்றும் தளபதிகளும் அதைக் கண்காணித்துக் கொண்டுதான் இருந்தனர்.

மக்களுடைய இராஜ விசுவாசம்பற்றி நாடி பிடித்துப் பார்த்து, அறிந்த தண்டநாயகர், பாண்டிய அரசியல் அதிகாரிகளின் ஒத்துழைப்பைப் பெற முயற்சிகளும் எடுத்துத்தான் பார்த்தார். படிப்படியாகப் பலனும் கிடைத்துக் கொண்டுதான் இருந்தது.

ஆங்காங்கு தனது நம்பிக்கைக்குரிய ஏவலர்களை ஏவி நாட்டு நிலவரம் அறிந்து வரச் செய்து நிலைமையை மதிப்பிட்டார்.

அவ்வப்போது பொன்பெருமாள் கொண்டு வரும் செய்திகளும் அவர் மனத்தில் சஞ்சலத்தை ஊட்டி வந்தது.

மக்கள் மனம் மாறாதா?

மஞ்சத்தில் புரண்டு படுத்தவாறு அவர் யோசனையில் ஆழ்ந்து விட்டார். உறக்கம் வந்தபாடில்லை.

எப்படியும் பாண்டிய - சிங்களப் படைகள் சீக்கிரம் போருக்குத் தயாராகி விடும். அடுத்த கட்ட நடவடிக்கை எடுப்பதற்கு அவர் யார் வரவையோ எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகத் தெரிந்தது!

அந்த நள்ளிரவு நேரத்தில் பரசேகரி முத்தரையர் தன் பரிவாரத்துடன் மதுரைக் கோட்டைக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தார். அவர் பரிவாரத்துடனேயே கலந்து நரசிங்கனும் புகுந்து நகருக்குள் பிரவேசித்து விட்டான்.

அவனுக்கு எல்லையில்லா மகிழ்ச்சி. ஒன்று பரகேசரி முத்தரையரைப் பாண்டியர் பக்கம் கொண்டு வந்தது. மற்றொன்று வனமாலை தன் குழுவினருடன் தன் கடமையைக் கச்சிதமாக நிறைவேற்றி வந்தது.

அவளை நேரில் பார்த்துப் பாராட்ட வேண்டும். அந்நள்ளிரவு நேரத்தில் ஆவலுடன் அவள் மாளிகை நோக்கி விரைந்தான்.

வீதிகளில் ஆட்களின் நடமாட்டம் இன்னும் இருந்து கொண்டுதான் இருப்பதை அவன் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டான்.

அவளது மாளிகைக்குள் நுழைவதை பொன்பெருமாளின் ஆட்கள் கவனித்துக் கொண்டிருந்ததை அவன் கவனிக்கத் தவறிவிட்டான்.

அவன் யார் என்பது சோழ ஒற்றர்களுக்குத் தெரிந்ததுதான்.

"இவன் ஏன் இங்கு நுழைகிறான்?"

"மாதவ மகேந்திரன்கூட இங்கு வரவில்லையே!"

"வேறு என்ன வேலை அவனுக்கு?" அவர்களுக்குள்ளேயே குழப்பம்.

"ஒன்றும் ஒன்றும் இரண்டுதானே! இருவரும் பாண்டிய மன்னருக்கு விசுவாசமானவர்கள்! நாம்தான் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்! இச்செய்தியை எப்படிக் கொண்டு சேர்ப்பது?"

"நம் தலைவரிடம் சேர்ப்பித்து விடுவோம்! அவர் எப்படி வேண்டுமானாலும் முடிவெடுத்துக் கொள்ளட்டும்!" செய்தி பொன்பெருமாள் காதுக்கும் போனது. வனமாலை வீட்டைக் கண்காணித்த அவனது வீரன் விஷயத்தைப் போட்டு உடைத்தான்.

அவனோ அதைவிட முக்கியமாக பரகேசரி முத்தரையர் மதுரைக்குள் பிரவேசித்துள்ளார் என்பதை உரைக்க, தென்திசைத் தண்டநாயகர் மாளிகை நோக்கி விரைந்தான்!



# 10. இராஜ விசுவாசம்

நரசிங்கன் வனமாலையின் மாளிகைக்குள் நுழைந்த செய்தி பொன்பெருமாளுக்குப் போனது. அவனோ பரகேசரி முத்தரையரது மதுரை விஜயம்பற்றி தண்டநாயகருக்குத் தகவல் தர வேகமாகச் சென்றான்.

வனமாலை அன்று வனப்புடன் காட்சியளித்தாள். மாதவ மகேந்திரனை எதிர்பார்த்தவள் நரசிங்கனைக் கண்டதும் வியப்பு, அதைவிட இரட்டிப்பு மகிழ்ச்சி!

அவனும் மகிழ்ச்சியடைந்து, மரியாதை கலந்த பார்வையில் அவளை ஏறிட்டான்.

"வனமாலை! நலமா?"

"நலமே! நீங்கள் நலமா? மன்னர் பிரான் நலமா?"

"நாங்கள் நலமே! உனது கடமை உணர்வு எங்களை எல்லாம் எவ்வளவு மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்திவிட்டது தெரியுமா?"

"இது கடமை மட்டுமல்ல! நாட்டுக்கு நான் செய்யும் தொண்டு!"

"தொடரட்டும் உனது சேவை! பாராட்டுகிறேன் உனது தீரத்தை! இந்நேரத்திலும் உன்னைப் பார்த்துப் பேசிப் பாராட்டி விட்டுப் போகவே வந்தேன்!"

"மன்னர் பிரானுக்கு உங்களைப் போன்றோர் உதவிதான் இப்போது தேவை!"

"உங்களது இராஜ விசுவாசம் அவருக்குப் புதுத் தெம்பையே அளித்திருக்கிறது!"

"மக்கள் எல்லாம் மன்னர் முகம் காண எவ்வளவு ஆவலாக உள்ளார்கள் தெரியுமா?"

"தெரிந்துதான் இருக்கிறது. கூடிய விரைவில் நல்ல செய்தியை நீ கேட்பாய்! அதேபோல உன்னிடமிருந்தும் நல்ல செய்தியை நாங்கள் கேட்க ஆவலாக உள்ளோம்!"

"நிச்சயம் நல்ல செய்தி வந்து சேரும் என்று நீங்கள் நம்பலாம்! வாழ்க மன்னர்!"

"வெல்க பாண்டிய நாடு! உயரட்டும் மீனக் கொடி! வருகிறேன்!"

"சென்று வாருங்கள்! வென்று வாருங்கள்! வரவேற்க நாங்கள் ஆவலுடன் காத்திருக்கிறோம்!"

வந்த வேகத்திரேயே அவன் ளியேறினான்.

xxxxxxxxxxx

பொன்பெருமாள் தண்டநாயகர் மாளிகைக்குள் நுழைந்து விட்டான்.

"வணக்கம், பெருமானே!"

"என்ன பொன்னா?"

"தங்களைக் காண பரகேசரி முத்தரையர் வரலாம். கோட்டைக்குள் நுழைந்து விட்டார்! தாங்கள் கவனமுடன் அவர் நடவடிக்கைகளைக் கண்காணிக்க வேண்டுகிறேன்!"

அவரோ கடகடவெனச் சிரிக்க ஆரம்பித்தார். அவனுக்குக் காரணம் புரியவில்லை!

"சரி! நீ போ! நான் பார்த்துக் கொள்கிறேன்."

தன் கடமையைச் செய்து முடித்துவிட்ட திருப்தியுடன் வணங்கி விடை பெற்றான்.

அடுத்த சாமத்தில் பரகேசரி முத்தரையர் மட்டும் தனது காவல் வீரர்கள் துணையுடன் தென்திசைத் தண்டநாயகர் மாளிகைக்குள் நுழைந்தார். உடன் வந்த வீரர்கள் வெளியிலேயே நின்றுவிட்டனர்.

அரை நாழிகை நேரம் உள்ளே அவர்கள் உரையாடல் தொடர்ந்தது. மலர்ச்சியான முகத்துடன் அவரைத் தண்டநாயகர் தீரன் சென்னிப் பேரரையர் வழியனுப்பி வைத்தார்.

உடனே தனது படைத் தளபதிகளை வரவழைத்தார். ரகசிய ஆலோசனை நடந்தது.

பொன்பெருமாள் வரவழைக்கப்பட்டான். அவனிடம் ஓலைகள் இரண்டு வழங்கப்பட்டன. ஒன்று மன்னர் பிரானுக்கு. மற்றொன்று கொடும்பாளூரில் இருக்கும் விக்கிரமனுக்கு.

பொன்பெருமாள் தன் சகாக்களுடன் புயலெனத் தன் பயணத்தைத் தொடர்ந்தான்.

போர் மூளும் அபாயம் நெருங்கிவிட்டது. சில நாட்களிலேயே சோழர் எல்லைப் படை பழுவேட்டரையர் மற்றும் விக்கிரமன் இருவரது தலைமையில் கொடும்பாளூரிலிருந்து தெற்கு நோக்கி நகர ஆரம்பித்தது.

அது வெள்ளூர் (தற்போது வெள்ளலூர் என்று அழைக்கப் படுகிறது.) அருகே முகாமிட்டது. படையை அங்கிருந்து நகர்த்த வில்லை. அங்கேயே தங்கியிருக்கும்படி தண்டநாயகர் செய்தி அனுப்பியிருந்தார்.

அத்தோடு மாதவ மகேந்திரன் தலைமையில் உள்ள குதிரைப் படை ஆனை மலையிலிருந்து கிழக்கே நகர ஆரம்பித்துவிட்டது. வெள்ளூரில் முகாமிட்டுள்ள படையுடன் சேர்ந்து கொள்ள ஏற்பாடு.

விக்கிரமனுக்கு வெள்ளூர் வந்தபின்தான் தண்டநாயக்கர் தீரன் சென்னிப் பேரரையரின் ஏற்பாடு என்ன என்பது தெரிந்தது. பரகேசரி முத்தரையர் தந்த ரகசியச் செய்தி அது. பாண்டிய சிங்களப் படை மெல்ல கடற்கரையோரமாகவே நகர்ந்து இராமேசுவரம்வரை வந்துவிட்டதாகவும் அது மேலும் நகர்ந்து மதுரைக்கு வடக்கே திரும்பி சோழர் படையைத் தாக்கலாம்.

தண்டநாயகர், முத்தரையர் மூலம் தகவல் அறிந்ததால் கொடும்பாளூர் எல்லைப்படை மதுரை வராமலே வெள்ளூரிலேயே முகாமிடும்படி தடுத்து நிறுத்தி உத்தரவு பிறப்பித்திருந்தார்.

புத்திசாலித்தனமான செயலாகவே இதை விக்கிரமன் எண்ணினான்.

தாங்கள் பாண்டியர் தலைநகர் மதுரை செல்லாமலே பாதியிலே நிறுத்தப்பட்ட விவரம் தலைவர்களுக்குத்தான் தெரிவிக்கப் பட்டிருந்தது. படைவீரர்கள் அடுத்த ஆணை வரும்வரை அங்கேயே தங்கும்படி அறிவுறுத்தப்பட்டிருந்ததால் பாட்டும் கூத்துமாக ஆடிப் பாடி மகிழ்ந்தனர்.

வந்து இரண்டு நாட்கள் கடந்துவிட்டன. மூன்றாம் நாள் ஒரு மூடு வண்டியில் வனமாலைக் குழுவினர் வெள்ளூர் படைமுகாமில் இறங்கினர்.

அவளைக் கண்டதும் மாதவ மகேந்திரன் அதிர்ச்சியடைந்தான். மற்ற வீரர்கள் அவர்களைச் சூழ்ந்து கொள்ளும் முன்பு அவனே அவளை நெருங்கி விட்டான்.

"வனமாலை! என்ன இது? படைமுகாமுக்கு ஏன் வந்தாய்?"

"என் தலைவர் படைகளை உற்சாகப்படுத்தத்தான்!"

"போர்க்களம் புக இருக்கும் வீரர்கள் உன்னிடம் தகாத முறையில் நடக்க எத்தனித்தால் என்னாவது? விபரீதம் ஏதும் நிகழ்ந்து விட்டால்?"

"அதுதான் எனக்குத் துணையாக நீங்கள் இருக்கிறீர்களே! அதையும் மீறி யாரும் என்னிடம் நெருங்க எத்தனித்தால் இதோ என் இடுப்பில் எதற்குக் கட்டாரி காத்திருக்கிறது? ஒன்று பாயும்! அல்லது பாய்ச்சிக் கொண்டு நான் உயிர் விடுவேன்!"

"ஏன் இப்படி அபசகுனமாகப் பேசுகிறாய்?"

"சரி, சரி! உங்கள் வீரர்கள்முன் ஆடிப் பாட அனுமதி தருகிறீர்களா?"

"வந்து விட்டாய் சகல ஏற்பாடுகளுடன்! பிறகு என்ன அனுமதி வேண்டிக் கிடக்கிறது?"

"கண்ணாளா! கோபம் வேண்டாம்! இது இன்னும் எத்தனை நாளைக்கு?"

"என்ன, அப்படிக் கூறுகிறாய்?"

"பிறகு என் தலைவன்முன் மட்டும்தான்!" அவன் மோவாயைத் தாங்கினாள்.

அரை மனத்துடன் சம்மதித்தவன் சிற்றரசர்கள் விக்கிரமன், பழுவேட்டரையர் கண்டன் அமுதனார் இருவரிடமும் சென்று படைவீரர்கள் முன்பு அவள் ஆட அனுமதி கேட்டாள்.

பழுவேட்டரையருக்கு அதில் ஏகக் குஷி! "சபாஷ்! நம் வீரர்கள் நடனத்தைக் காணட்டும்! கேளிக்கைகள் இந்தத் தருணத்தில் தேவைதான்! நடக்கட்டும்!"

விக்கிரமன் இடையில் குறுக்கிட்டான்!

"அத்தோடு அளவோடுதான் மதுவை வீரர்களுக்கு வழங்க வேண்டும்! அதிகம் கேட்டால் மறுத்து விடு. இது என் எச்சரிக்கையாக இருக்கட்டும்!"

"அப்படியே செய்கிறேன்!"

மாதவ மகேந்திரன் அவர்களைத் தன் கூடாரத்தில் தங்க வைத்து விட்டுத்தான் அனுமதி கேட்கச் சென்றிருந்தான்.

மதுக் குடங்கள் சில அங்கு இருந்தன. வனமாலையின் கண்ஜாடை கண்ட பெண்கள் அவற்றில் ஏதோ பொருளைக் கலக்கி விட்டனர்.

உள்ளே எட்டிப் பார்த்த அக்கூடாரக் காவல் வீரன் கண்ணில் அது பட்டு விட்டது.

வனமாலை அவனைக் கைதட்டி உள்ளே அழைத்தாள். அவள் தங்கள் தலைவனின் காதலி.

"என்ன அம்மணி?"

"இதோ மதுக் கோப்பை! உனக்கே முதலில் தருகிறோம்! குடி!" ஊற்றிக் கொடுத்தாள். அவன் மகிழ்ச்சியுடன் வாங்கி அதைக் குடித்தான்.

ஆர்வக் கோளாறில் அவள் அதைச் செய்துவிட்டாள். அவள் செய்தது தவறு என்பதை அப்போது அவள் உணரவில்லை!

அங்கிருந்த மதுக் குடங்கள் தக்க பாதுகாப்புடன் இருந்தது என்று எண்ணிய மாதவ மகேந்திரன் தன் மேற்பார்வையிலேயே கலயங்களில் ஊற்றிக் கொடுக்க ஏற்பாடு செய்தான்.

உள்ளே நுழைந்தவனிடம் உரையாடினாள்.

"இன்று குதிரைப் படை வீரர்களுக்கு எனது நாட்டிய விருந்து. தலைவர் படைகளுக்குத் தனி மரியாதை!"

"அப்படியா? மிக்க மகிழ்ச்சி!"

"எங்கே, உங்கள் தளபதிகளையும், சிற்றரசர்களையும் நாட்டிய விருந்துக்கு அழைக்கவில்லயா?"

"அவர்கள் அழையா விருந்தாளிகளாக அப்போதே கிளம்பி மேடை அருகே அமர்ந்து விட்டார்களே!"

நாட்டியக் குழுவை அவனே மேடைமீது ஏற்றி பாதுகாப்பு அளித்தவன் இரு சிற்றரசர்களுக்கும் இடையே நின்று கொண்டான்.

நாட்டியம் தொடங்கியது. ஆட்டம் நேரம் ஆக ஆக வேகம் கொண்டது!

அதே நேரத்தில் மாதவ மகேந்திரன் கூடாரக் காவலன் தட்டுத் தடுமாறி மேடை அருகே வந்து விழுந்தான்!

"பிரபு! ஆபத்து! குடிக்க வேண்டாம்! மதுவில் நஞ்சு!" கூட்டத்தில் களேபரம்! வீரர்கள் கலயங்களைத் தூர எறிந்து ஆவேசம் வந்தவர்களாக மாதவ மகேந்திரன் முன் வந்து விட்டனர்!

விக்கிரமன் கோபத்துடன் எழுந்தான்.

"என்ன இது? கட்டுப்பாடற்ற நிலையில் என்ன கூச்சல்?"

மாதவ மகேந்திரன் உஷாரானான்!

"பிரபு! மன்னிக்கவும்! என் கூடாரத்தில் பாதுகாப்பாக இருந்த மதுவில் வேண்டுமென்று யாரோ நஞ்சைக் கலந்து விட்டார்கள்!"

"ஆ!...அப்படியா? யாரங்கே? மருத்துவர்களை அழைத்து வாருங்கள்!"

இத்தனை களேபரங்களையும் வனமாலைக் குழுவினர் பார்த்துக் கொண்டுதான் இருந்தனர்,

முதலில் அவள் காதலன் கூடாரக் காவலனுக்குக் கொடுத்தது தவறு என்பது இப்போதுதான் அவளுக்கு உறைத்தது!

அவன் குடித்த மதுவில் கலந்திருந்த நஞ்சு வேலை செய்யத் தொடங்கி விட்டது! மற்றவர்கள் குடிக்க நேரமானதால் மருத்துவர்கள், முனைந்து அவர்களுக்கு உப்புக் கரைசல், கடுகுக் கரைசல் கொடுத்து வாந்தி எடுக்க வைத்து விட்டனர்.

அவன் சாகப்போகும் தருவாயில் தன் தலைவனைத் தலையாட்டி அழைத்தான்! குனிந்து மாதவ மகேந்திரன் அவன் கூறுவதைக் கேட்டான்.

"பிரபு! உங்கள் காதலியின் சூதுதான் இது! கலக்கும்போது நான் பார்த்துத் தொலைத்து விட்டேன். அதனால் எனக்கு முதலில்!".....

தலை சாய்ந்துவிட்டது.



## 11. காதலுக்காக!

மாதவ மகேந்திரனின் கூடாரக் காவலன் வனமாலையின் சதிதான் அது. ஜாக்கிரதை என்று கூறி உயிரை விட்டான்.

அவனுக்கு உலகமே சுழன்றது! 'என் காதலி வனமாலையா இந்த வஞ்சகச் செயல் புரிந்தாள்?'

அவளை ஏறிட்டுப் பார்த்தான்! அதில் ஏமாற்றம், ஆதங்கம் எல்லாம் கலந்திருந்தன. ஆனால் அவளோ ஏதும் அறியாதவள் போலவே நின்றாள்!

"மாதவா!"

விக்கிரமன் கோபக் கனலுடன் அழைத்தான்.

"என்ன பிரபு?"

"இதற்கு யார் காரணம்?"

ஒரு சில வீரர்கள் முணுமுணுக்க அது அவன் காதில் விழுந்து தொலைத்தது!

"அவரது கூடாரத்தில் எப்படி நஞ்சு கலந்திருக்க முடியும்?" விக்கிரமனே மீண்டும் கேள்வியை எழுப்பினான்.

"யார் அங்கு சென்றது? உன் கூடாரக் காவல் வீரன் எங்கே?"

"இதோ இவன்தான்!" இறந்து கிடக்கும் வீரனைச் சுட்டிக் காட்டினான். விக்கிரமன் ஒருவாறு ஊகித்தறிந்தான்.

"இந்த நடனக் குழுவினர் உன் கூடாரத்திலேதானே தங்கி யிருந்தனர்?"

"ஆமாம்!" அதற்குமேல் அவன் கேள்வி கேட்க விரும்பவில்லை.

"நடனக் குழுவைச் சிறைப் பிடியுங்கள்!"

"பிரபு!"

காவலர்கள் அவர்களை நெருங்கினர்.

மாதவமகேந்திரன் சிலையானான்!

வனமாலை தனது அவசர புத்தியால் காரியம் கெட்டுவிட்டதே என்ற கவலையில் இருந்தாள்.

பழுவேட்டரையரோ 'நாட்டியம் பாதியிலேயே நின்று விட்டதே' என்ற ஏமாற்றம்!

விக்கிரமனுக்கோ சோழ வீரர்களை ஆபத்திலிருந்து காப்பாற்றி விட்டோமே என்ற நிம்மதி!

xxxxxxxxxxxx

தென்திசைத் தண்டநாயகர் உத்தரவிட்டார்.

"படைகள் புறப்படட்டும்!" மதுரையை விட்டுப் படைகள் கிளம்பின. அவை சோழ நாடு செல்வதாக மக்கள் நம்பினர்.

பாண்டிய - சிங்களப் படைகள் சோழர் படையைத் தாக்க வருவதால் கிளம்பிச் சென்றுவிட்டதாக அவர்கள் ஆனந்தக் கூத்தாடினர்.

பொன்பெருமாள் தனக்குள் சிரித்துக் கொண்டான்!

'நம் தண்ட நாயகர் என்ன பயந்தாங்கொள்ளியா? ஏளனத் துக்குரியவர் அவரல்லர் என்பதை இன்னும் சில நாட்களில் இவர்கள் உணரட்டும்!'

ஒருவாறு பரகேசரி முத்தரையர் சுந்தரத் தோளுடையான் பற்றித் தான் கொண்ட தவறான எண்ணம்பற்றி உணர்ந்து வெட்கப்பட்டான்.

அவர் கொண்டு வந்த செய்தி சாதாரணமானதா? மனதுக்குள் அவரை வாழ்த்தினான்.

xxxxxxxxxxx

நள்ளிரவு நேரம். வெள்ளூர் பாசறை முகாமில் சிறை வைக்கப்பட்டிருந்த பாண்டிய நாட்டு நாட்டியப் பெண்கள் வனமாலை உட்பட ஏழு பேருக்கும் பலமான காவல் போடப்பட்டிருந்தது.

அன்று முழுவதும் மன உளைச்சலில் தவித்த மாதவ மகேந்திரன் ஒரு முடிவுக்கு வந்தவனாகத் தன் கூடாரத்திலிருந்து வெளிவந்தான்.

தன் காதலி வனமாலையைச் சந்திக்க அவள் இருந்த கூடாரத்தை நெருங்கினான்.

வாசலில் நின்ற வீரர்கள் அவன் வருவதைக் கண்டு திகைத்தனர்.

உள்ளே செல்ல முயன்றான். வீரர்கள் தங்கள் வேல்களால் மறைத்து நின்றனர்.

"விலகி நில்லுங்கள்!"

"மன்னிக்க வேண்டும் தளபதி! கொடும்பாளூர் இளவரசர் யாரையும் உள்ளே விடக் கூடாது என்று கட்டளை இட்டுள்ளார்கள்!"

"என்னைத் தடுக்க நீங்கள் யார்?" கோபமாகக் கூறியவன் அவர்களை இருபுறமும் தள்ளிவிட்டுப் புயலென உள்ளே நுழைந்தான்!

வனமாலை கையிலோ விலங்கு பூட்டிக் கிடந்தது. அவனைக் கண்டதும் மெல்ல நகைத்தாள் அவள்.

"சோழர் படைத் தளபதியை நல்ல முறையில் இங்கு வரவேற்க இயலாதவளாக இருக்கிறேன்!"

"வனமாலை!" அவன் குரலில் தாபம், கோபம், ஏமாற்றம் எல்லாம் சேர்ந்தே ஒலித்தது!

"பிரபு!"

"நீயா இப்படி?"

அதில் ஆயிரம் அர்த்தங்கள் பொதிந்து கிடந்தன.

"ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்?" எதிர்க் கேள்வி போட்டாள் அவள்!

"என் ஆசைக் கனவில் மண்ணை அள்ளிப் போட்டு விட்டயே?" அவள் கலங்கிவிட்டாள். அது அவனுக்காகவே! தான் செய்த செயலுக்காக அல்ல! காதலனை ஏமாற்றிவிட்டோமே என்ற கழிவிரக்கம் கொண்டாள்!

"என்னை மன்னித்து விடுங்கள்!"

"பேரரசர் உனக்கு மரண தண்டனைதான் அளிப்பார். நேரத்தை வீணடிக்காமல் இப்போதே புறப்படு! உன்னை இதோ விடுவித்து விடுகிறேன்!" அவள் சலனமின்றி அப்படியே இருந்தாள்.

"பிறகு?"

"கண்காணாத இடத்துக்குச் சென்று நம் காதல் சிறக்க வாழ்வோம்!"

"இது உங்களால் முடியுமா?"

"என்னால் முடியாததா? இதோ பார்!" அவள் விலங்கைத் திறக்க முயற்சி செய்தவன் பின்னால் அரவம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான்.

கோபக் கனலுடன் விக்கிரமன் உருவிய வாளுடன் வாசலில் நின்று கொண்டிருந்தான்.

"மாதவா! என்ன காரியம் செய்யத் துணிந்துவிட்டாய்?

"பிரபு! இவளை விடுவித்து விடுங்கள்! இவள் பிழையைப் பொறுத்தருளுங்கள்! என் காதலி இவள்!"

"இந்தச் சதிகாரியால் எத்தனை வீரர்கள் சாக இருந்தனர்? அது உன் புத்திக்கு உறைக்கவில்லையா?"

"பிரபு! இவள் சதிகாரியில்லை!"

விக்கிரமன் சிரித்தான்!

"காதலுக்குக் கண் இல்லை என்பது சரியாகத்தான் உள்ளது! புத்தியுமா இப்படிப் போக வேண்டும்!" மாதவ மகேந்திரன் உஷ்ணத்துடன் எழுந்தான்.

"முடிவாக என்ன கூறுகிறீர்கள்?"

"மாதவா! என்ன மரியாதை கூடுகிறதே!"

"இவளுக்காக என் உயிரையும் கொடுப்பேன்!"

"சதிகாரிக்குச் சார்பாக மாறுகிறாயா?"

"சதிகாரி என்று மறுபடியும் கூறாதீர்கள். சாவுக்கும் பயந்தவன் நானல்ல! கிட்டே நெருங்கினால்!..." கூறிக் கொண்டே கட்டாரியை உருவி விக்கிரமன் மேல் வீசி எறிந்தான்!

கோபம் கொண்ட விக்கிரமன் வாள் கொண்டு தடுத்துவிட்டு அவனை நெருங்கினான். இருவருக்கும் வாட்போர் நடப்பதை அங்கு வனமாலை உட்பட அனைவரும் வாயடைத்துப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

உக்கிரத்துடன் மாதவ மகேந்திரன் தாக்கினான். கோபம் கொண்ட விக்கிரமன் அவனது வீச்சை இலாவகமாகத் தடுத்துக் கொண்டே வந்தவன் தன் பலங்கொண்ட மட்டும் வாளால் திருப்பித் தாக்கினான்.

மாதவ மகேந்திரனால் அதைத் தாக்குப் பிடிக்க முடியவில்லை. வாள் கீழே விழுந்து விட்டது!

"உம்! இவனையும் சிறை செய்யுங்கள்!"

காவலர்கள் அவனைக் கட்டிப் பிடித்துக் கைகளில் விலங்கு மாட்டினர்.

"மாதவா! எத்தகைய இராஜத்துரோகம் செய்துள்ளாய் என்பது உனக்குத் தெரியவில்லை! இப்பெண்ணுக்கு இருக்கும் இராஜபக்தியைப் பார்த்தாயா? நீ யாரென்று தெரிந்தும் தான் யார் என்று உன்னிடம் கூறினாளா?

"தளபதியாக இருந்தும் உன் கடமையையே மறந்து விட்டாயே! காதல் பெரிதா? கடமை பெரிதா? இதை நீ யோசித்தாயா?"

"போர் மூள இருக்கும் நேரத்தில் உன் வீரத்தைக் காட்ட வேண்டியவன் கேவலம் சதிகாரியின்மேல் கொண்ட காதலுக்காக கடமையையே மறந்து இப்போது கைதாகி நிற்கிறாயே!"

'வீராதி வீரன்! போர் முகத்தில் வீரத்தைக் காட்டிப் புகழ்பெற இருந்தவன் புத்தி தடுமாறி இப்படிப் பாழய்ப் போய் விட்டானே!' என்று கழிவிரக்கம் வேறு ஏற்பட்டது அவன்மேல்!

"உம்!" காவலர்கள் பக்கம் திரும்பினான்.

"மாஜிதளபதிக்கு உரிய மரியாதையில் குறை வைக்காமல் கண்ணியமாக நடத்துங்கள்! அவன் நம்மை மறந்தாலும் நாம் மதிப்புக் கொடுப்போம்!"

"பேரரசர் முன் கொண்டு செல்வோம். அவர் கொடுக்கும் தண்டனையைக் காதலியுடன் ஏற்கச் சித்தமாக இருக்கட்டும்! போர் முடியும் மட்டும் இவர்களை யாரும் பார்க்க அனுமதிக்க வேண்டாம்! தக்க பாதுகாப்புடன் வைத்திருங்கள்!" கோபம், இரக்கம், வெறுப்பு எல்லாம் அவன் வார்த்தைகளில் சேர்ந்தே வெளிவந்தன.

வனமாலையின் கண்கள் கலங்கின! தனக்காகப் படைத் தலைவனே சிறைப்பட்டிருப்பதைக் காண அவளுக்கு மனமில்லாமல் கண்களை மூடிக் கொண்டாள்! அக்கண்ணீருக்கு என்ன காரணம்"

"அது காதலாலா? கழிவிரக்கத்தாலா?"

XXXXXXXXX

அது கோடைக்காலம். சிங்கள வீரர்களால் வெப்பத்தைத் தாங்க முடியவில்லை. வேனற்கட்டிகள் வேறு வாட்டி எடுத்தன. வெக்கை நோய் வேறு!

அருவி நீரை அருந்தி வந்த அவர்களுக்குப் பாண்டிய நாட்டுக் குளங்களில் இருந்த நீரையே பருக வேண்டி வந்தது. அதனால் வயிற்றுப் போக்கு வேறு! மருத்துவர்களுக்கு மாயாத - ஓயாத வேலை!

ஒரு மாத காலம் தாக்குப் பிடிக்க முடியவில்லை! தண்டநாயகன் சக்கன் இராசசிம்மரைத் துரிதப்படுத்தினார்.

"சோழர் படையைத் தாக்காமல் சோம்பி இருப்பதா? வீணே காலம் கழிக்க நாங்கள் இங்கு வரவில்லை! வெற்றி அல்லது வீரமரணம்!"

அதனால் பாண்டிய சிங்கள சைன்யம் வேகமாக முன்னேறி வெள்ளூர் அருகே வந்துவிட்டது.

பக்கத்திலேயே சோழர் படை போருக்குத் தயாராக இருப்பதைப் பாண்டிய மன்னர் பார்த்தார்.

"முரசுகள் முழங்கட்டும்!" கட்டளையிட்டார். போர் முரசுகள் முழங்கின. பாண்டிய - சிங்கள வீரர்கள் சோழர்கள்மீது பாய்ந்தனர்.

போர் கடுமையாக நடைபெற ஆரம்பித்தது. பாண்டிய - சிங்களப் படையினர் எண்ணிக்கையில் அதிகம். எனவே நாம் வெற்றி பெற்றுவிடுவோம் என்று இராசசிம்மர் நம்பினார்.

வடக்கே சோழர் படையைத் துரத்திவிட எண்ணித் தன் படையை முடுக்கி விட்டார்! உற்சாகம் ஊட்டினார்!

'இது என்ன! பின்புறம் கூச்சல்! ஆரவாரம்!'

மதுரையிலிருந்து புறப்பட்டு வந்த சோழர் சைன்யம் தென்திசைத் தண்டநாயகர் அரசுருடையான் தீரன் சென்னிப் பேரரையர் தலைமையில் பாண்டியர் படையின் பின்புறம் வந்து தாக்க ஆரம்பித்தது.

'தான் அமைத்த வியூகம் ஏன் சிதறுகிறது?'

தண்டநாயகர் படை தாக்க ஆரம்பித்ததுதான் தாமதம்! விக்கிரமன் சிங்களப் படைத் தண்டநாயகர் சக்கன்மேல் பாய்ந்தான்!

'இளைஞன் ஒருவன் என் மேல் பாய்வதா? அவன் யாராக இருந்தால் என்ன?'

கோபம் கொண்ட சக்கன் விக்கிரமனுடன் மோதினார். இருவருக்கும் பலத்த வாட்போர்!

முடிவில் சிங்களத் தண்டநாயகர் சக்கன் விக்கிரமன் வாளால் வீழ்த்தப்பட்டார்!

ஒரே ஆரவாரம்! விக்கிரமன் நின்ற பக்கம், "வெற்றிவேல்! வீரவேல்! பராந்தக சோழ மன்னர் வாழ்க!" வெற்றி ஆரவாரம் விண்ணைத் தொட்டது!

சிங்களப் படை வீரர்கள் தங்கள் தண்டநாயகர் வீழ்ந்ததும் சிதறி ஓட ஆரம்பித்தனர்!

பாண்டிய மன்னர் அதிர்ச்சியடைந்தார்!



## 12. வெள்ளூர்ப் போரின் முடிவு

சிங்களத் தண்ட நாயகர் சக்கன் விக்கிரமனால் வீழ்த்தப்பட்டது கண்ட பாண்டிய மன்னர் அதிர்ச்சியடைந்தார்! சிங்கள வீரர்கள் சிதறி ஓட ஆரம்பித்தனர்.

அதே சமயம் தண்ட நாயகர் தீரன் சென்னிப் பேரரையரும், பழுவேட்டரையரும் பாண்டியர் இராசசிம்மரைத் தாக்கத் தொடங்கினர். அவர் சமாளிக்க முடியாமல் திணற ஆரம்பித்தார்.

அவர் கண்ட கனவு என்ன? பாண்டிய மண்ணில் காலடி எடுத்து வைத்து மதுரை நகரில் மீனக் கொடியைப் பறக்க விட எண்ணியது பகற்கனவாகிப் போய் விட்டதே! தன் கனவில் பேரிடி விழுந்து விட்டதே!

'சக்கன் மரணம் சிங்களப் படைகள் சிதறக் காரணமாயிற்றே! ஆகா! கணக்கற்ற யானைகள் அம்புகளுக்கு இரையாகின்றதே!' அவரால் அதைத் தாள முடியவில்லை!

அன்றையப் போரின் முடிவு அவருக்கு அளவற்ற சோகத்தை அள்ளிக் கொடுத்தது.

எஞ்சிய படையைச் சோழர் படைத் தளபதிகளிடம் காவு கொடுக்க விரும்பவில்லை!

சிங்களப் படைவீரர்கள் வந்த வழியே திரும்ப ஆரம்பித்து விட்டன என்று நரசிங்கன் வந்து கூறியதை அவர் நம்பாமல் இருக்க முடியவில்லை.

இருபக்கத் தாக்குதலால் நிலைகுலைந்த மன்னர் இராசசிம்மர் தன் படைகளுக்கு உத்தரவிட்டார்.

"இரவே நம் படை மேற்கு நோக்கிக் கிளம்பட்டும்!"

எஞ்சிய படைவீரர்களையாவது காப்பாற்ற வேண்டுமே!

வீரர்களின் உயிரை விலை மதிப்பிட முடியாது அல்லவா?

மறுநாள் காலையிலேயே போர் முடிவுக்கு வந்துவிட்டது. கணக்கற்ற யானைகள், குதிரைகள் கைப்பற்றப்பட்டன.

கண்டன் அமுதனார் குஞ்சரமல்லனின் (பராந்தக சோழரின் விருதுப் பெயர்) தோளோடு தோளாக முன்பு நின்று பாண்டிய நாட்டில் படை நடத்தியவர். அவரே இன்று சிங்கள யானைகள் பலவற்றைச் சேதாரமில்லாமல் கைப்பற்றினார்.

தண்ட நாயகர் தீரன் சென்னிப் பேரரையருக்கு அளவற்ற மகிழ்ச்சி! இருக்காதா பின்னே! தங்கள் பேரரசர் போரில் கலந்து கொள்ளாது படைத் தலைவர்களே முன்னின்று படைநடத்திப் பெற்ற மாபெரும் வெற்றியல்லவா இது!

தன் மற்றொரு படைத் தலைவன் பரதூர் உடையான் நாகன் காத்தான் தலைமையில் மீண்டும் மதுரைக்குத் தனது நிலைப்படையை அனுப்பி வைத்தார்.

வெற்றி முரசு முழங்க சோழர் படை புலிக்கொடி ஏந்தி மதுரைக் கோட்டைக்குள் நுழைந்தது.

'இது என்ன குழப்பம்? மன்னர் இராசசிம்மர் மறுபடி வருவார்; மகிழ்ச்சி தருவார் என்ற மனோரதத்தில் மண் விழுந்துவிட்டதா?'

மக்கள் தங்கள் வேதனையை - ஆதங்கத்தை மௌனமாக மென்று விழுங்கினர்!

விக்கிரமன் மற்றும் பழுவேட்டரையர் தலைமையில் வெள்ளூர் போரில் கலந்து கொண்ட சோழர் படை வெற்றி பெற்ற மகிழ்ச்சியில் திரும்ப வடக்கே பயணமாயிற்று.

வெற்றிச் செய்தியைத் தஞ்சைக்கு பொன்பெருமாள் முன்னதாக எடுத்துச் சென்றான்.

வெள்ளூர்ப் போரில் சோழர் படை வெற்றி பெற்ற செய்தியோடு, பெருவீரம் காட்டிப் போர் புரிந்து சிங்களத் தண்ட நாயகர் சக்கனைக் கொன்று சிங்களப் படையைச் சிதறடிக்கக் காரணமான விக்கிரமனின் வீரச் செயல்கள்பற்றிய செய்தியும் தஞ்சைக்குச் சென்று சேர்ந்தது.

அத்தோடு மட்டுமல்ல, அது அரண்மனைப் பெண்டிர் மத்தியிலும் பரவியது.

வீரமாதேவிக்கோ அளவற்ற ஆனந்தம்! பக்கத்தில் அமர்ந்திருந்த அநுபமாவை அர்த்தபுஷ்டியுடன் பார்த்தாள்!

'எப்படி என் மனம் கவர்ந்தவன்? வீராதி வீரன் அல்லவா அவர்' என்பதுபோல இருந்தது அந்தப் பார்வை!

"ஏன், எனக்கும் அதில் உடன்பாடுதான்! அதை உனக்கு மட்டும் சொந்தம் என்று உரிமை பாராட்டாதே!" அநுபமா அப்படிக் கூறியதும் திடுக்கிட்டாள்!

"எதை?"

"நீ கொண்ட மகிழ்ச்சிபோல எனக்கும் மகிழ்ச்சி தரும் செய்திதானே அது?"

"அதனால்?"

"இங்கே நாம் ஏன் சர்ச்சை செய்வானேன்! பூங்காவுக்குப் புறப்படுவோம்! அங்கே வைத்துக் கொள்வோம்!"

"எதை?"

"சர்ச்சையை! சண்டையை!" சிரித்தவாறு வீரமாதேவி அந்தப் புரத்திலிருந்து பின்புறமுள்ள நந்தவனத்திற்குப் புறப்பட்டாள். அநுபமா பின்தொடர்ந்தாள்!

மலர்கள் பூத்துக் குலுங்கின. பறவைகள் பாடி அவர்களை வரவேற்றன. மான்கள் உரசிச் சென்று மகிழ்ச்சியில் பங்கு கொண்டன.

செய்குளத்தின் படிக்கட்டில் அமர்ந்த வீரமாதேவியை ஓரக் கண்ணால் கண்ட அநுபமா 'களுக்' எனச் சிரித்தாள்!

"என்ன அநு, சிரிக்கிறாய்?"

"இல்லை! காதலுக்குக் கண் இல்லை என்பார்கள்! அத்தோடு வீர புருஷன் புகழ் கேட்டதும் மது குடித்த வண்டாகப் பெண்கள் கிறங்கி விடுகிறார்களே! அவரே காதலனாக மாறிவிட்டால் இறக்கை முளைத்துப் பறந்து விடுவார்களோ! அதைக் கற்பனை செய்து பார்த்தேன்! சிரிப்பு வந்துவிட்டது!"

"கற்பனை எப்படி?"

"நீ இறக்கை முளைத்த பறவையாகப் பறப்பதாகக் கற்பனை! ஆகா! இறக்கைகள் பொன்னிறத்தில் கதிரவனின் ஒளியில் பிரகாசித்து என் கண்களைக் கூசச் செய்துவிட்டது!"

"போடி! குறும்புக்காரி!"

செல்லமாகக் கோபித்துக் கொண்டு அப்படியே அவள் சொன்னபடி அன்னப் பறவையாக ஆகாயத்தில் எழுந்து பறப்பதாகக் கற்பனை விரிய அதிலேயே லயித்து விட்டாள்!

இருவருமே சில கணங்கள் தங்கள் எண்ணத்தை வெளிக்காட்டாமல் நடந்த உரையாடலின் பொருளில் லயித்து இருந்தனர்.

பிறகு, வீரமாதேவியே இப்போது தங்கையைப் பார்த்துக் கேள்வி கேட்டாள்.

"இனி என் மனோரதம் நிறைவேறுவதற்குத் தடை ஒன்றும் இருக்காது அல்லவா?"

"ஏன் அப்படிக் கேட்கிறாய்?"

"இல்லை! வெற்றியின் பரிசாக வீரமாதேவியை எனக்கு மணம் முடித்துத் தாருங்கள் என்று அவர் கேட்கலாம் அல்லவா நம் தந்தையிடம்!"

"நாம் என்ன பரிசுப் பொருட்களா? பெண்கள்! " அது போகட்டும்! அப்படிக் கேட்க அவருக்குத் தைரியம் இருக்கிறதா?"

"வீராதி வீரரடி அவர்!"

"ஓ! அப்படியா? வெளியிலே புலியாக இருப்பவர்கள் வீட்டிலே எலியாக மாறிவிடுவார்களாமே, அதுபற்றி உனக்குத் தெரியுமா?"

"அதை என்னிடம் கேட்டால், எனக்கு என்ன தெரியும்?"

"அக்கா! நீ விரும்பும் கொடும்பாளூர் இளவரசர் உன்னை விரும்ப வேண்டுமே! அது தெரியாமல் ஆகாயக் கோட்டை கட்டாதே!"

"அவருக்குக் கரும்பு தின்னக் கசக்குமா என்ன? அத்தோடு வெல்லக் கட்டியபடி இந்த வீரமாதேவி!" அவளது ஆசையைக் கேட்டு அநுபமா குலுங்கச் சிரித்தாள்!

இவ்வாறு அவர்கள் காதலைப்பற்றியும், விக்கிரமனைப்பற்றியும் சம்பந்தா சம்பந்தமில்லாமல் உரையாடித் தங்கள் உள்ளக்கிடக்கையை -மகிழ்ச்சியுடன் வெளிப்படுத்திக் கொண்டிருந்தனர்; நடக்கப் போகும் விபரீதம் அறியாமல்!

வீரமாதேவியை உற்று நோக்கினாள் அநுபமா!

"என்ன அப்படிப் பார்க்கிறாய்? நான் அன்னியப் பெண் இல்லையடி! உன் அக்காள்!"

"அது தெரிந்ததுதானே! அன்னையரின் ஆசை என்ன தெரியுமா?"

"தெரியாதே!"

"அவரது சகோதரர் பழுவேட்டரையர் அல்லவா? அவரது திருக்குமாரருக்கு மணம் முடிக்க எண்ணுகிறார்!

"அப்படியா?" வியப்பில் ஆழ்ந்தாள் வீரமாதேவி!

அரசி அருண்மொழி நங்கை பழுவேட்டரையரின் தங்கை தான். அதனால் உறவைப் பலப்படுத்த சொந்தம் விட்டுப் போகக் கூடாது என்று தனது அண்ணன் மகனுக்கு மணம் முடிக்க அவர் ஆசைப்பட்டதில் தவறில்லைதான்.

ஆனால் இளவரசி வீரமாதேவியோ தனது சகோதரன் இராசாதித்தனின் நண்பனும், கொடும்பாளூர் இளவரசனுமான விக்கிரமனை விரும்பினாள்.

ஆனால் சக்கரவர்த்தி பராந்தக சோழரோ யாருக்கு மணம் முடிக்க விரும்புகிறாரோ? அவர் மனத்தில் உள்ளதை யார் அறிவார்கள்?

மன்னர்கள் உறவைப் பலப்படுத்த பெண் கொடுத்துப் பெண் எடுக்க முனைவது சகஜமே!

தன் திருக்குமாரர்களுக்கு சிற்றரசர்களின் இராஜ குமாரிகளையே அவர் மணம் முடிக்க விரும்பிச் செயல்படுத்தியும் வந்துள்ளார். இராசாதித்தனுக்கும், கண்டராதித்தனுக்கும் சிற்றரசர்கள் குமாரத்திகளே மனைவிகளாக வந்துள்ளனர். தன் பெண் மக்களான இரு இளவரசிகளையும் மன்னர் குடும்பங்களில் மணம் முடித்துக் கொடுத்துப் புதிய உறவுகளை வரவேற்கக் காத்திருந்தார். காரணம் சுற்றிலும் பகைவர்களைப் பேரரசர் வளர்த்துக் கொள்ள விரும்பவில்லை.

xxxxxxxxxxxx

தஞ்சை நகரம் விழாக் கோலம் பூண்டிருந்தது. வெற்றி பெற்ற வீரர்களையும், வீரம் காட்டிப் போர் புரிந்த தளபதிகளையும் வரவேற்க மக்கள் தயாராகி விட்டனர்.

அத்தோடு பாண்டிய நாட்டு மகளிர் சிலர் வீரர்களுக்கு மதுவில் நஞ்சு கலந்து கொடுத்துக் கொன்ற செய்தி அங்கு எட்டிவிட்டது.!

"தாயின் சொரூபங்களா இப்படி மாறினர்?"

"எப்படிக் கண்டுபிடித்தனர்?"

"அதற்கு உடந்தையாக நம் நாட்டுத் தளபதி ஒருவரும் இருந்தாராமே?"

"அவர் பேரென்னவாம்?"

"மாதவ மகேந்திரனாம்".

"இப்படியும் அநியாயம் நடக்குமா?"

"அவர்களை எல்லாம் சிறை பிடித்துக் கொண்டு வருகிறார்களாம்!"

இவ்வாறு செய்தியும் வதந்தியும் கலந்து மக்கள் பேச ஆரம்பித்து விட்டனர்.

வெற்றி பெற்ற வீரர்களை வரவேற்பதோடு அந்தப் பெண்களையும், உடந்தையான தளபதியையும் பார்க்க வேண்டுமென்ற ஆவலும் நகர மக்களிடம் தொற்றிக் கொண்டது.

மன்னர் நிச்சயம் அவர்களுக்கு மரண தண்டனை அளிக்கப் போகிறார். அதற்குள் அவர்களைப் பார்த்துவிட வேண்டும் என்று மக்கள் நகர வீதிகளில் கூட்டமாகக் கூடிவிட்டனர். வெற்றி பெற்ற வீரர்களின் மனைவிமார்களோடு, மதுவுக்குப் பலியான வீரர்களின் குடும்பங்களும் அவர்களைச் சபித்தவாறு காத்திருந்தனர்.

விக்கிரமன் முன்னேற்பாடாக மக்கள் ஏதேனும் அசம்பாவிதமாக நடந்து அவர்களுக்கு ஏதும் ஆபத்து நேர்ந்து விடலாம் எனக் கருதி அவர்களை மூடுவண்டிகளில் ஏற்றி எது அவர்கள் ஏறிவரும் வண்டி என்பதைக் கண்டுபிடிக்க முடியாமல் தாங்கள் கைப்பற்றி வரும் பொற்குவை ஏற்றிய வண்டிகளுடன் கலந்து வரிசையில் வரும்படிச் செய்துவிட்டான்.

கைப்பற்றிய யானைகள், குதிரைகள், போர்த் தளவாடங்கள் ஆகியவையும் அவற்றோடு நகர வீதிகளில் வலம் வந்தன.

வனமாலையை, மாதவ மகேந்திரனை, மற்ற மகளிரைக் காண முடியாமல் மக்கள் ஏமாற்றம் அடைந்தனர். ஆனால் கைப்பற்றி வரும் மற்றவற்றைக் கண்டதும் மக்கள் மனதில் மகிழ்ச்சி ஆரவாரம் புரண்டது.

"மதுரை கொண்ட கோப்பரகேசரி பராந்தக சக்கரவர்த்தி வாழ்க!"

"மாதண்ட நாயகர் அரசூருடையான் தீரன் சென்னிப் பேரரரையர் வாழ்க!"

"சிங்களப் படைத் தலைவனைச் சிரம் கொய்து வெற்றி கொண்ட விக்கிரமகேசரி வாழ்க!"

"பழுவேட்டரையர் வாழ்க!" இந்த வாழ்த்தொலிகள் வானத்தைத் தொட்டன. வெற்றி வீரர்களின்மேல்மாடங்களில் நின்ற மகளிர் மலர்களை அள்ளிச் சொரிந்து தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டனர்.

அரண்மனை முன்பு மாமன்னர் பராந்தகச் சக்கரவர்த்தியே நின்று வெற்றி பெற்ற வீரர்களையும் தளபதிகளையும், தண்ட நாயகர்களையும், சிற்றரசர்களையும் வரவேற்றார்.

மாதண்ட நாயகர் ஏதோ விக்கிரமனிடம் கூறவே அவன் அதை ஏற்றுக் காரியத்தில் இறங்கினான்.



# 13. நரசிங்கனின் கதி

தஞ்சை அரண்மனை முன்பு பராந்தக மன்னரே நின்று படைத்தலைவர்களையும், சிற்றரசர்களையும் வரவேற்றார். அவர் முகத்தில் அளவற்ற மகிழ்ச்சி!

தான் அவர்கள்மேல் வைத்த நம்பிக்கைக்குத் தக்க மரியாதை தந்துவிட்டனர். மன்னரே தலைமை ஏற்றுச் செல்லாமல் படைத் தலைவர்களே முன்னின்று போர் நடத்தி வெற்றிக் கனி பறித்து வந்துள்ளார்களே!

பொன், பொருட்குவையுடன் அளவற்ற யானை, குதிரைகளின் தொகுதிகளும் கைப்பற்றி அவைகளுடன் வந்துள்ளதால் அவர் மகிழ்ச்சிக்குக் கேட்கவா வேண்டும்!

மாதண்ட நாயகர் விக்கிரமனை அருகில் அழைத்து ஏதோ கூறினார். அவன் உடனே அவர் கட்டளையை ஏற்று பொற்குவை ஏற்றி வந்த வண்டிகளுடன் கலந்து வந்த வனமாலை முதலிய மகளிர் ஏற்றி வந்த வண்டிகளையும், மாதவனை ஏற்றி வந்த வண்டியையும் அருகில் இருந்த சிறைச்சாலைக்குத் திருப்ப அவன் பொன்பெருமாளுக்கு உதவி செய்தான்.

பொன்பெருமாள் அவர்களைச் சிறையில் அடைக்கும் பொறுப்பேற்று அவ்வண்டிகளுடன் முன் சென்றான்.

அரண்மனையின் உப்பரிகையில் அரசகுலப் பெண்டிர் அக்காட்சியைக் கண்டு ஆனந்தம் கொண்டனர். இளவரசிகள் இருவரையும் கேட்க வேண்டுமா?

வீரமாதேவி அக்கூட்டத்தில் விக்கிரமனைத் தேடினாள்!

"சற்றுமுன் அவர் உருவம் தெரிந்ததே!"

"அக்கா, யாரைத் தேடுகிறாய்?"

"உம்!"

ஒன்றும் பதில் கூறாமல் 'உம்'மை மட்டும் உதிர்த்துவிட்டுக் காரியத்திலேயே கண்ணாக இருந்தாள். அநுபமா அவளைக் கவனித்துக் கொண்டே இருந்ததால் அவள் யாரைத் தேடுகிறார் என்பது தெரிந்துதான் இருந்தது.

'களுக்' எனச் சிரித்தாள் அவள்!

விக்கிரமனைக் காண முடியாத நிலையில் தங்கை சிரித்தது அவளுக்கு எரிச்சலைத் தந்தது.

"உனக்குச் சிரிப்பு வருகிறதாக்கும்?"

"அக்கா! நீ யாரைத் தேடுகிறாய் என்பது எனக்குத் தெரியும். அதோ அவர் மூடுவண்டிகள் சிலவற்றைச் சிறைச்சாலை நோக்கித் திருப்ப பொன்பெருமாளுக்கு உதவி செய்கிறார் பாரேன்!" அவள் கண்களுக்கு அவனை மூடுவண்டிகள் மறைத்து விட்டன.

ஏமாற்றம் அவள் முகத்தில் தெரிந்தது.

"நாளை அரச சபை கூடும்! அப்போது அவரைப் பார்க்கலாம்! அலட்டிக் கொள்ளாதே!"

தங்கையை அவள் உஷ்ணத்துடன் நோக்கினாள்! அநுபமா சிரித்தாள் அதைக் கண்டு!

"உனக்கு வேடிக்கையாக இருக்கிறதா?"

கண் சிமிட்டி ஆமோதித்து அவள் மேலும் சிரித்தாள்!

xxxxxxxxxxxx

**பா**ண்டிய மன்னர் இராசசிம்மர், சேர நாட்டில் அடைக்கலம் கேட்பதற்காகப் பயணப்பட்டுப் போய்க் கொண்டிருந்தார். அவருடைய பரிவாரங்களுடன் படைத்தளபதிகள், போர்வீரர்கள் காடுகள், மலைகள் தாண்டி மேற்கு நோக்கி மேற்குத் தொடர்ச்சி மலைகளின் ஊடே அவருக்குத் துணையாகச் சென்று கொண்டிருந்தனர்.

ஓர் அழகான இனிய சூழல் நிறைந்த இடம் அது. மலைகளில் இருந்து தெளிந்த நீர் ஓடி வந்துகொண்டிருந்தது. வானளாவிய மரங்களும், அதில் படர்ந்த கொடிகளும் மணத்தை வாரி வழங்கிக் கொண்டிருந்தன.

அதை இரசிப்பதற்கு ஏற்ற சூழ்நிலையில் மன்னரோ, படை வீரர்களோ இல்லை. அந்த இடத்திலேயே அன்றையப் பொழுதைக் கழிக்க மன்னர் முடிவு செய்து ஓர் பாறைமீது அமர்ந்தார்.

அவர் மனத்தில் சொல்லவொண்ணா வேதனை! மனச் சோர்வு உடலில் பரவிடச் சோர்ந்து போய் வீரர்கள் அமைத்திருந்த கூடாரத்தில் உள்ள கட்டிலில் சாய்ந்து விட்டார்.

'நான் கண்ட கனவு என்ன? தமிழகத்தையே ஒரு குடைக்கீழ்க் கொண்டு வந்துவிடலாம் என்று மனப்பால் குடித்து மதிமயங்கி விட்டேனா?

'பாண்டிய மண்டலத்தையாவது, சுதந்திர பூமியாக்க என்னால் முடியவில்லையே? என்னென்னவோ கனவுகள் கண்டேனே! அத்தனையும் கானல் நீராகிவிட்டனவே!

'தென்பகுதியில் உள்ள என் மக்களிடம் எப்படி விழிப்பேன்? விடுதலைக் கனி பறித்து விருந்து படைத்திட நான் நினைத்தது விழலுக்கிறைத்த நீராகிவிட்டதே!

'அந்தோ! வெற்றி பெற்றிருக்க வேண்டிய என் படைகள் வேதனைப்பட்டு வீழ்ச்சியடையக் காரணம் என்ன? எங்கே தவறு நடந்துவிட்டது?'

ஆம்! அப்போதுதான் அவருக்கு அந்தக் காரணம் புலப்பட்டது!

'ஆகா! நாம் இராமேசுவரம் வழியாக நேராக மேற்கே திரும்பி மதுரையைக் கைப்பற்றியிருந்தால் சோழர் படையை நிர்மூலமாக்கியிருக்க முடியுமே!

'நரசிங்கன் அழைத்து வந்த முத்தரையர் படைகள் நமக்கு உதவும், அவர் துணையும் கிட்டும் என்று வடக்கே சிறிது தூரம் சென்று மேற்கே திரும்பி வெள்ளூரில் படைமுகாமிட்டுச் சோழர் படையைத் தாக்கலாம் என்று திட்டம் தீட்டியது எவ்வளவு தவறாகப் போய்விட்டது!

'இந்தத் திட்டம் வகுத்துத் தந்தவரே முத்தரையர்! அவர் மூலமே இந்த ரகசியம் சோழர் தண்டநாயகருக்குத் தெரிந்திருக்கும். அப்படியானால்?..

'முத்தரையர் நமக்குத் துரோகம் செய்துவிட்டார்! எதிரியை நண்பனாக எண்ணிவிட்டது எவ்வளவு முட்டாள்தனம்! வெள்ளூரில் முகாமிட்டிருந்தது மட்டும்தான் சோழர் படை என்று அவர்களுடன் அங்கே மோதியது அவசரத்தில் எடுத்த முடிவா?

'மதுரையில் தங்கியிருந்த சோழர் படை பின்னால் வந்து தாக்கும் என்ற செய்தி நமக்கு எட்டவில்லையே? நரசிங்கன் அதை ஏன் கண்டுபிடிக்கவில்லை?

' இருபக்கமும் தாக்கப்பட்டோம்! சிங்களத் தண்ட நாயகர் சக்கன் கொல்லப்பட்டதும் படை சிதறி விட்டதே! படையணிகள் பறிபோய் விட்டனவே! செல்வக் குவியல் கொள்ளை போய் விட்டதே!

'வீரர்கள் வீழ்ந்துபட நாம் மட்டும் தப்பித்து என்ன பயன்? பழிக்கு ஆளாகி வாழ்வதும் ஒரு வாழ்வா?'

கட்டிலில் புரண்டு படுத்தார். உணவு தயாராகி விட்டதால் காவலன் ஒருவன் ஒரு தட்டில் எடுத்து வந்தான்.

"அரசே! உணவு!"

அச்சத்துடனேயே அவனும் கூறினான்.

"உம்! எனக்கு உணவு ஒரு கேடா? இனி ஊண், உறக்கம் ஏது? வெற்றி பெற்றுத் தலைநகரைக் கைப்பற்றும் நாள்

எந்நாளோ, அன்றுதான் எனக்கு நிம்மதி! உறக்கம்! எடுத்துப் போ இங்கிருந்து!'

கவலையும், கோபமும் கலந்து ந்தன அவரது வார்த்தையில். காவலன் தயங்கினான்.

"உம்!" என்று அவர் உறுமவே, அவன் வணங்கி எடுத்துச் சென்றுவிட்டான்.

அவர்கள் முகாமிட்டுள்ள இடம் தெரிந்து நரசிங்கன் வேகமாக மன்னர் இராசசிம்மர் தங்கியிருக்கும் கூடாரத்தை நெருங்கினான்.

உணவு எடுத்து வந்த காவலன் எச்சரித்தான்.

"உஸ்!... மன்னர் இப்போது கோபமாக இருக்கிறார். சற்று பொறுத்துப் போங்கள்!"

மெதுவாகக் கூறியதை அவன் கேட்கவில்லை. "உம்! எனக்குத் தெரியும்! போய் உன் வேலையைப் பார்!" அதட்டியவன் அவசரமாக உள்ளே நுழைந்தான். மன்னரை வணங்கியவன் மடமடவென உரைக்க ஆரம்பித்தான்.

"அரசே! மாபெரும் தவறு நடந்துவிட்டது. எதிரியை நம்பி ஏமாந்து விட்டோம்! அவரை அழைத்து வந்து நம் திட்டத்தைக் கூறி அனுப்பியது எவ்வளவு தவறு என்று இப்போது புரிகிறது எனக்கு!"

"அவரைத் தேடிக் கண்டுபிடித்துப் பழி வாங்க நாயாய் அலைந்தேன். அகப்படவில்லை. படையணிகளுடன் தஞ்சை சென்று விட்டார். அதனால்தான் தங்களைப் பின்தொடரத் தாமதமாயிற்று!"

மன்னரின் கோபம் அதிகரித்தது. அவன் அதைக் கவனியாமல் மேலும் கூற ஆரம்பித்தான்.

"வனமாலை என்ற நாட்டிய மாது சோழ வீரர்களுக்கு மதுவில் நஞ்சு கலந்து கொடுத்துக் கொல்ல எத்தனிக்கும்போது உஷாரான சோழ வீரர்களால் சிறைப் பிடிக்கப்பட்டுவிட்டாள். அவள் உதவிக்கு வந்த சோழர் படைத்தலைவன் ஒருவனும் சிறைப் பட்டான். அவர்களைத் தஞ்சை கொண்டு செல்கின்ற....."

"நிறுத்து! இதைக் கூற உனக்கு வெட்கமாக இல்லை? உதவி கேட்டதைவிட அதிகம் கொடுத்த சிங்களப் படைகளைப் பாழ்படுத்தி விட்டாயே! எவனையோ நம்பி எடுத்தேன், கவிழ்த்தேன் என்று என்னையே ஏமாறச் செய்துவிட்டாயே!"

நரசிங்கன் நடுநடுங்கிப் போய்விட்டான்.

"அரசே! நான் மனமறிந்து தவறு செய்யவில்லை. ஆனால் தவறு நடந்துவிட்டது. பிழை பொறுக்க வேண்டும்!"

"பொறுத்தது போதுமடா பாவி! தொலைந்து போ!"

வாய் இப்படிக் கூறும்போதே வாள் அவர் கைக்கு மாற, ஓரே வீச்சில் அவன் தலையைச் சீவிச் சாய்த்தார்!

கோபத்தில் ஓர் உண்மை ஊழியனை நாம் அநியாயமாகக் கொன்றுவிட்டோமே என்று உள்ளம் உடைந்து கட்டிலில் அப்படியே சாய்ந்து விட்டார்!

சே!.... மன்னருக்கு விசுவாசமாக நடந்த வீரனுக்கு இப்படியும் மரணம் நேரலாம் என்பதற்கு நரசிங்கனே ஒரு சாட்சியாக உடல் துடிக்கக் கிடந்தான். வெட்டுப்பட்டு உருண்ட தலையில் கண்கள் அகல விரியத் தலைவனைப் பார்த்தவாறு கிடந்தன!

அவை, பரிசு இதுவா எனப் பரிதாபமாக வினவினவோ? என்னவோ?

xxxxxxxxxx

**வெ**ற்றி பெற்ற சோழர் படைகள், தலைநகர் வந்து சேர்ந்த மறுநாள் தஞ்சை அரண்மனையில் கூடிய அரச சபை களை கட்டியிருந்தது.

காரணம் பரிசளிப்பு விழாவல்லவா அது!

பொன்னும், மணியும், பொருளும், கருவிகளும் போர்க்களத்தில் கைப்பற்றி வந்த வீரர்களுக்கு - படைத் தலைவர்களுக்குப் பரிசாகப் பேரரசர் பராந்தகர் வாரி வாரி வழங்கினார்.

பரகேசரி முத்தரையருக்குப் போரைத் திசை மாற்ற உதவியதற்காகப் பல பொன்னாலான ஆரங்களை அணிவித்து மகிழ்வித்தார். விக்கிரமனுக்கும் சக்கனைக் கொன்ற பராக்கிர மத்திற்கு ஏற்ற பரிசுகள் பல வழங்கினார் என்று சொல்லவும் வேண்டுமா?

உயிர் துறந்த வீரர்களின் மனைவியர்க்கு அவர்களது ஊர்களில் நிலங்களை உதிரப்பட்டி என்ற தானமாக வழங்கிக் கௌரவித்தார்.

வீரர்களின் மகிழ்ச்சிக்குக் கேட்கவா வேண்டும்!

"மதுரை கொண்ட கோப்பரகேசரி பராந்தகச் சக்கரவர்த்தி, வாழ்க, வாழ்க!" என்ற கோஷம் அரண்மனையையே கிடுகிடுக்க வைத்தது. வீரர்கள் மகிழ்ச்சியுடன் பரிசுப் பொருட்களுடன் சபை கலைந்ததும் வெளியேறினர்.

அடுத்த நாள் அரச சபை கூடியதும் சோழ வீரர்களுக்கு நஞ்சு கலந்து கொடுத்துக் கொன்ற குற்றத்துக்காகப் பாண்டிய நாட்டைச் சேர்ந்த நாட்டிய மகளிர் வனமாலை மற்றும் அவளது குழுவினர் ஆறு பேரும் விசாரணைக்காக அழைத்து வரப்பட்டிருந்தனர்.

முதல்நாளைப் போலவே அரண்மனைப் பெண்டிரும் அந்த வழக்கை அறியவும், அப்பெண்களைப் பார்க்க ஆவல் கொண்டும் உப்பரிகையில் வீற்றிருந்தனர்.

முதல் நாள் மேலிருந்து விக்கிரமனை வீரமாதேவி ஆசை தீரப் பார்த்து அவன் கம்பீரத்தில் மனம் லயித்தாள். ஆனால் இன்றோ உள்ளூர ஒரு பயம் தோன்றி மறைந்தது.

'நல்ல வேளை நான் விரும்பும் கொடும்பாளூர் இளவரசர் மது அருந்தாததால் தப்பிவிட்டார். இல்லையேல் நமது கதி என்ன ஆகியிருக்கும்?'

கற்பனையில் அதைக் கண்டு ஒரு கணம் நடுநடுங்கினாள். தன்னை அவன் மணந்துகொண்ட தலைவன்போல மடியில் அவனைப் படுக்க வைத்து அரற்றியதுபோல அவள் கற்பனை விரிந்தது. அதனால் உடல் முழுவதும் வியர்த்துவிட்டது.

பக்கத்தில் இருந்த அநுபமா அவளை இடித்த பின்னாவது சுய உணர்வுக்கு வந்தாளே!

"ஐயோ, பாவம்! அவளைப் பாரேன்!"

வனமாலையைச் சுட்டிக் காட்டினாள். அவளைக் கண்டதும் அனுபமாவுக்கு இரக்கமே மேலிட்டது.

'போர் வீரர்கள் நாட்டுக்காகப் போரிட்டு இன்னுயிர் ஈவது சரி! ஆனால் பாவம் பேதைப் பெண்கள்! ஏன் நாட்டிற்காக மன்னருக்காகத் தங்கள் உயிர் பற்றிக் கவலை கொள்ளாமல் அபாயகரமான செயல்களில் ஈடுபட்டார்கள்?'

அவளுக்கு வியப்பாகவும் இருந்தது! வேதனையாகவும் இருந்தது!



# 14. பேரரசரின் பெருந்தன்மை

வனமாலை முதலியோர் விசாரணைக்காகச் சபைக்கு அழைத்து வரப்பட்டிருந்தனர்.

அவர்களைக் கண்ட அநுபமாவுக்கு வியப்பாகவும் இருந்தது. வேதனையாகவும் இருந்தது.

இருந்தாலும் அவர்களது நாட்டுப்பற்றை எண்ணி மனதுக்குள் பாராட்டவும் செய்தாள்.

என்றாலும் இவர்கள் பிடிபடாமல் தொடர்ந்து இரு ந்தால் எத்தனையோ வீரர்கள் போரிடாமல் உயிர் றக்க நேரிட்டிருக்குமே! அதை நினைத்து அவள் அஞ்சவும் செய்தாள்.

குதிரைப் படைத் தலைவன் அப்பெண்ணைக் காதலித்த காரணத்தால் சிறைப்படவும் நேர்ந்து விட்டதே!

காதலுக்கு அவ்வளவு வலிமையா? தீவிரமா? ஆச்சரியமாகவும் இருந்தது அவளுக்கு! காதலிக்காக உயிர் துறக்கவும் காளையர்கள் காத்திருக்கிறார்களே! இதோ தன் பக்கத்தில் ஒருத்தி இளவரசன் ஒருவனை வைத்த கண் வாங்காமல் அவன் அழகை அள்ளிப் பருகிக் கொண்டிருக்கிறாளே!

லேசாக அவளை இடித்துத் தன்பக்கம் திரும்ப வைத்தாள். அவள் முறைக்க இவள் மெல்லச் சிரித்தாள்.

"உம்! விசாரணையைக் கவனி!"

பராந்தகச் சக்கரவர்த்தி தன்முன் நிறுத்தப்பட்டிருந்த பார்வையர்கள்மீது பார்வையைச் செலுத்தினார்.

'இந்தப் பெண்களா அந்தப் பாதகச் செயலைச் செய்தது?' வியப்பாக இருந்தது அவருக்கு,

'இவர்களின் தலைவியை விடுவிக்க விரும்பிய நம் குதிரைப் படைத்தலைவன் மாதவ மகேந்திரனும் அல்லவா பிறந்த நாட்டிற்கே எதிராகக் கிளர்ந்து எழ நேர்ந்து விட்டது! பாழும் சிறையை அவன் பார்க்கவும் நேர்ந்து விட்டதே!'

பேரரசரே விசாரணையைத் தொடங்கினார்.

வனமாலையைப் பார்த்து, "பெண்ணே, உன் பெயர் என்ன?" அதுவரை சபையைப் பார்க்காமல் குனிந்து கொண்டிருந்த வனமாலை சக்கரவர்த்தியை ஏறிட்டாள். பெயரையும் கூறினாள்.

"வனமாலை!"

"இவர்கள் எல்லாம் உன் குழுவினரா?"

"ஆமாம்!"

"உங்கள் தொழில் என்ன?"

"நாட்டியமாடுவது!"

"இங்கு எதற்காக அழைத்து வரப்பட்டிருக்கிறீர்கள் என்பது தெரியுமா?"

அவள் மெல்ல நகைத்தாள்!

"உம்! அழைத்து வந்தீர்களா? இழுத்து வந்தீர்கள்!"

சபையில் சலசலப்புக் கேட்டது.

"என்ன நெஞ்சழுத்தக்காரி!"

"உஷ்!" அநுபமா அடக்கினாள்.

"விசாரணையைக் கவனி!"

பேரரசர் கையமர்த்தவும் சபை மௌனமாகி விட்டது. அவர் மெல்ல நகைத்தவாறு தன் கோபத்தை அடக்கிக் கொண்டார்.

"சரி! அப்படியே வைத்துக் கொள்வோம். எதற்காக இழுத்து வந்தோம் என்றாவது தெரியுமா?"

"உங்கள் படைத் தலைவர்களே கூறியிருப்பார்களே!"

சாகத்தான் போகிறோம். பேசித்தான் பார்ப்போமே என்று துணிந்து விட்டாளோ?

விக்கிரமன் எழுந்தான்.

"பெண்ணே!. அரச சபையை அலட்சியமாக எண்ணாதே! கேட்கிற கேள்விகளுக்குப் பதிலை மட்டும் கூறு!. நீ பேரரசரையே கேள்வி கேட்க உரிமையில்லை. கவனமிருக்கட்டும்!" மறுபடியும் சபையில் சலசலப்பு எழுந்தது. சக்கரவர்த்தி உஷ்ணமாகக் கூறிக் கையமர்த்தினார்.

"விசாரணையின்போது யாரும் குறுக்கிட வேண்டாம்!" அதனால் விக்கிரமனும் உட்கார நேர்ந்தது.

"பெண்ணே, படைத்தலைவர்கள் பேரரசரிடம் கூறியிருக்கலாம். இந்தச் சபைக்குத் தெரிய வேண்டுமல்லவா?"

அவள் கூறியது அனைவரையும் திடுக்கிட வைத்தது.

"என் கடமையை நான் செய்தேன். அது குற்றம் என்று கூறி இங்கு கொண்டு வந்து நிறுத்தியுள்ளீர்கள்!"

பேரரசர் மட்டுமல்ல, கூறியிருந்த சபையே திடுக்கிடாமல் என்ன செய்யும்?

"பெண்ணே! சோழ வீரர்களை மதுவில் நஞ்சு கலந்து கொல்வதுதான் உன் கடமையா?"

"ஆமாம்!"

"என்ன உளறுகிறாய்?" பழுவேட்டரையர் கண்டன் அமுதனார் அதட்டினார்.

"நான் உளறவில்லையே! உள்ளதைத்தானே உரைத்தேன். உங்கள் படைவீரர்கள் மட்டும் போரில் எங்கள் பாண்டிய வீரர்களைக் கொல்வதும், குற்றுயிர் ஆக்குவதும் மட்டும் அது

வீரம் - கடமை என்று கதையளக்கிறீர்களே! அதேபோல என் நாட்டுக்காக நான் பிறந்த மண்ணுக்காகச் செய்யும் சேவை மட்டும் கொலையாகி விடுமா? இது என்ன நியாயம்?

"எங்கள் மன்னருக்காகக் குடிமகள் என்னால் இயன்றதைச் செய்வது, நாட்டியமாடுவதும் அதைக் காணும் எதிரிகளை மேலுலகு அனுப்புவதும்தான்!"

"அது குற்றம் என்று தெரியவில்லையா?"

"எது குற்றம்? இதுவா?.... இல்லையே?"

"இது குற்றமில்லையா?"

"இதைக் குற்றம் என்று நீங்கள் நினைத்தால் எங்கள் நாட்டின்மீது போர் தொடுத்ததும் குற்றம்தானே? வலியவன் செய்தால் அது வீரம்! எளியவன் செய்தால் அது குற்றம்! அப்படித்தானே?

"உங்கள் நாட்டிற்கு நாங்கள் என்ன தீங்கு செய்தோம்? எங்கள் மன்னரை-பாராண்ட வேந்தரைத் துரத்தியடித்தீர்களே! திரண்ட செல்வத்தைக் கொள்ளையடித்து வந்தீர்களே!"

"அது யுத்த தர்மம்! அப்படித்தானே!" அரசரும், சபையோரும் வியப்பில் ஆழ்ந்துவிட்டனர்! அவள் மேலும் தொடர்ந்தாள்.

"தோற்றவன் ஓட வேண்டியதுதான்! உங்களை விட வலியவன் ஒருவன் உங்களைத் துரத்தியடித்தால் உங்களை எங்கு, எந்தக் கூண்டில் நிறுத்தி விசாரணை செய்வது?"

"பேரரசரையே எதிர்த்துப் பேச உன்னை இங்கு நிறுத்தவில்லை! புரிகிறதா?"

"எங்களைக் குற்றவாளி என்று நிறுத்தியிருப்பது குற்றத்தை ஒப்புக் கொள் என்று கட்டளையிடத்தானோ?" பராந்தகச் சக்கரவர்த்தி அவளது துணிச்சலை இரசிக்க ஆரம்பித்துவிட்டார்!

விக்கிரமன் எழுந்தவன் வினா ஒன்றை எழுப்பினான்.

"நீ எங்கள் படைத்தலைவன் மாதவ மகேந்திரனைக் காதலித்தது உண்மையா?"

"ஆமாம்! ஏன்? அதுவும் ஒரு குற்றமா?"

"ஆமாம்! நீ காதலித்தது சோழ நாட்டுத் தளபதியை! உன்மேல் கொண்ட காதல்தானே அவனை நாட்டிற்கு எதிராக வாளெடுக்க வைத்தது! கடமையை மறக்கவும் செய்தது! அதற்குக் காரணமே நீதானே?"

அலட்சியமாகச் சிரித்தாள்!

"நல்ல வேடிக்கையாக அல்லவா இருக்கிறது இது!

"நான் அவரைக் காதலித்தேனா அல்லது அவர் என்னைக் காதலித்தாரா என்று உங்களால் கூற முடியுமா? நாங்கள் இருவருமே குற்றவாளிகளாகத்தான் உங்கள் கண்ணுக்குத் தென்படுவோம்!" தழுதழுத்த குரலில் பேச ஆரம்பித்தாள்.

"உம்! ... என் காதலர் என் பொருட்டு இப்போது சிறையில் வாடுகிறார். நான் இங்கு உங்கள் முன் குற்றவாளியாக! துன்பங்களையே சந்தித்துப் பழகிவிட்டோம்! எந்தத் தண்டனை அளித்தாலும் ஏற்றுக் கொள்ளத் தயாராகிவிட்டோம்!" கூறி முடிக்கும்போது அவளது பேச்சில் தெளிவு இருந்தது! கம்பீரம் தெரிந்தது!

பேரரசர் பராந்தகர் அவள் பேசி முடிக்கும்வரை அமைதியாகக் கேட்டுக் கொண்டுதான் இருந்தார். அவையோர் யாரையும் அவர் குறுக்கிட அனுமதிக்கவில்லை!

சக்கரவர்த்தி என்ன தீர்ப்பளிக்கப் போகிறாரோ என்று அறிய அவை அமைதி காத்தது. நிச்சயம் மரண தண்டனைதான் அளிப்பார் என நம்பியது.

"பெண்ணே?" "

பேரரசர் அவளை அழைத்த குரலில் கனிவு தெரிந்தது. அவள் வியப்புடன் அவரை ஏறிட்டாள்!

"நீ, உன் நாட்டிற்காகச் செய்த கடமையை நான் பாராட்டுகிறேன்!"

அவையும் வியப்புடன் அரசரை நோக்கியது!

"நானோ வீரப் பால் ஊட்டி வளர்த்தேன்! அவர்களையோ நஞ்சு கொடுத்துக் கொன்றவள் நீ! என்றாலும் பெண்களில்

வீராங்கனை நீதான் என்பதை இங்கு நிரூபித்து விட்டாய்! படைத்தலைவனுக்கு மனைவியாகத் தகுதியானவள்தான் என்பதை என்னையும் உணரச் செய்துவிட்டாய்!

"நீயும் இப்போது என் நாட்டைச் சேர்ந்த குடிமகள் ஆகிவிட்டாய்! எனவே உன் துணிவைப் போற்றி, செய்த தவறை மன்னித்து நான் உன்னை விடுதலை செய்கிறேன்!" சபையில் சலசலப்பு.

"ஆ!"...... என்ற வார்த்தை அவை எங்கும் எதிரொலித்தது!

பேரரசரோ கையமர்த்திப் பேச்சைத் தொடர்ந்தார்.

"அத்துடன் படைத்தலைவன் மாதவ மகேந்திரனையும் மன்னித்து விடுதலை செய்ய ஆணையிடுகிறேன்!"

வனமாலை, தன்னை மறந்து கைகுவித்து வணங்கினாள்! கண்கள் பனித்தன!

"பெருமானே! "

"கண்மணிகளே! உங்கள் காதலை நான் அங்கீகரிக்கிறேன்! உங்களுடைய வாழ்வு வளம் பெறட்டும்! உங்கள் திருமணத்திற்கு ஏற்பாடும் செய்ய உத்தரவிடுகிறேன்! என்றும் இன்பமுடன் இங்கேயே வாழுங்கள்!"

கண்ணீர் பெருக்குடன் காவலை மீறி ஓடி வந்த வனமாலை பேரரசர் முன் விழுந்து வணங்கினாள்!

"பெருமானே! உங்களுடைய பேரன்பை, பெருந் தன்மையைப் புரியாமல் இந்த ஏழை ஏதேதோ பேசி விட்டேன்! பிழை பொறுத்தருளுங்கள்! உங்களுடைய கருணைக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!"

"மகளே! வாழ வேண்டியவள் நீ! சென்று வா!"

"பண்டித வத்சலர் வாழ்க! வாழ்க!"

பேரரசரை அவை வாழ்த்த ஆரம்பித்தது.

"கொடும்பாளூர் இளவரசர் சென்று மாதவமகேந்திரனை விடுவிக்கச் செல்லலாம்!"

வணங்கிய விக்கிரமன் வனமாலையுடன் சிறைச்சாலை நோக்கிச் சென்றான்.

ஆனால் சிறைச்சாலைக்குள்ளோ?...

மாதவமகேந்திரன் குறுக்கும் நெடுக்குமாக அந்த அறைக்குள்ளே நடந்து கொண்டிருந்தான்.

"தானைத் தலைவனாகத் தலை நிமிர்ந்து வாழ வேண்டிய நான் பாழும் சிறையில்! என்னிடம் அடிபணிந்து நடந்தவர்களே சிறைப்பிடித்து விட்டார்களே!

ஏன்?

'நான் செய்த குற்றம் சாதாரணமானதா? மன்னிக்கத் தக்கதா? இல்லவே இல்லை! இது இராஜத் துரோகம்! கிடைக்கும் தண்டனையோ மரணதண்டனை!

'காதலியைக் காப்பாற்ற முடியவில்லையே! அவளுக்கு இந்நேரம் மரண தண்டனை கிடைத்திருக்கும்! தண்டனை எப்படி இருக்கும்?

'யானைக் காலால் இடறச் செய்வார்களோ?

'தூக்குக் கயிற்றால் தொங்க விடுவார்களோ? அவள் பொன்னுடல் என்ன பாடுபடுமோ?'

'பாவம் அவள்! வனமாலை ! நான் பாவி! உன்னைக் காப்பாற்ற வழி தெரியாமல் பாழும் சிறையில் அடைபட்டுத் தவிக்கிறேனே!

'உன் உயிரைக் காப்பாற்றவும் இயலவில்லை! நாட்டுக்கும் நல்ல பெயர் எடுக்கவில்லை! இனி நான் வாழ்ந்துதான் என்ன பயன்?

'கடமைக்கும், காதலுக்கும் முடிவு காண முடியாத எனக்குத்தான் ஒரு முடிவைத் தேடிக் கொள்ள வேண்டும்! மன்னர் முகத்தில் எப்படி விழிப்பேன்! நம்மையும் இன்னும் சற்று நேரத்தில் இழுத்துச் சென்று விடுவர்! பலபேர் முன்னிலையில் பாவி நான் எப்படிச் செல்வேன்!

'அதற்குள்! ...... அதுதான் சரியான வழி!'

தன் கையில் அணிந்திருந்த வைர மோதிரத்தைக் கழற்றினான்.



# 15. அண்ணனும், தம்பியும்!

பேரரசர் பராந்தகர் பெருந்தன்மையுடன் வனமாலை குழுவினரையும், மாதவமகேந்திரனையும் விடுதலை செய்தார். ஆனால், சிறைச்சாலையில் இருந்த மாதவ மகேந்திரன் அதற்குள் தற்கொலை செய்துகொள்ள முடிவு செய்து தன் கையிலிருந்த வைர மோதிரத்தைக் கழற்றினான்.

இரு சம்பங்களுக்கும் இடையே அரை நாழிகை சென்றிருக்கும். அப்போதுதான் விக்கிரமனும், வனமாலையுடன் விடுதலைச் செய்தியைச் சிறைக்குக் கொண்டு வந்தான்.

மாதவ மகேந்திரன் அடைபட்டிருந்த சிறை அறைக் கதவைத் திறந்துவிட்டான் காவலன்.

"மாதவ மகேந்திரா! பேரரசர் பேரன்பு கொண்டு உன்னை விடுதலை செய்ய உத்தரவிட்டுள்ளார். இதோ உன் காதலிக்கும் விடுதலைதான்! "

"ஆ! ஐயோ! நான் மோசம் போனேனே!"

மாதவ மகேந்திரன் அலறினான்!

இருவரும் திடுக்கிட்டு அவன் அருகில் விரைந்தனர்.

"என்ன? என்ன?" ஏககாலத்தில் கூவினர்!

"வனமாலை! உன் காதலனது உயிர் ஊசலாடுகிறதே! வைரத்தை அல்லவா பொடி செய்து தின்று விட்டேனே!"

அரற்ற ஆரம்பித்து விட்டான்!

"ஆ! வைரத்தைத் தின்றுவிட்டாயா! பாவி! ... யாரங்கே? சீக்கிரம் அரண்மனை மருத்துவரை ஓடிப் போய் அழைத்து வாருங்கள்!"

காவலர்கள் ஓடினர்!

"ஆ! .... என்ன காரியம் செய்துவிட்டீர்கள்?"

வனமாலை படபடத்து அவன் முகத்தை ஏந்தினாள்!

அவன் வாயிலிருந்து இரத்தம் வனமாலை கைகளில் வழிய ஆரம்பித்து விட்டது!

"என்னை யாரும் இனிக் காப்பாற்ற முடியாது!"

"ஐயோ! வைரத்தைத் தின்ன எப்படி மனம் வந்தது?" வனமாலை அவன் மார்பில் சாய்ந்து கட்டிப் பிடித்து அலற ஆரம்பித்து விட்டாள்.

"ஐயோ! கண்மணி! இப்போது உன்னுடன் வாழ அல்லவா ஆசைப்படுகிறேன்! உன்னைக் கைப்பிடித்து வாழ முடியாமல் போய்விடுமோ?"

"ஐயோ! இதுதானா நாம் வாழ்ந்த வாழ்வு?" அழுதவாறே குருதி வடியும் கன்னத்தில் ஆவேசமாக முத்தமிட்டாள்!

"வனமாலை! பேரரசர் என் பிழை பொறுத்து விட்டார் அல்லவா? நான் வாழ முடியாவிட்டாலும் பழிச் சொல் ஏற்படாது உயிர் விடுகிறேனே! அது போதும்!"

விக்கிரமன் அக்காட்சியைக் காண முடியாமல் துடித்தான்.

"மாதவா! சிறிது நேரத்திற்குள் அவசரப்பட்டு உன் வாழ்வையே அழித்துக் கொண்டாயே!"

"பிரபு!"

மாதவ மகேந்திரன் கண்களில் கண்ணீர் பெருகியது. அவன் விக்கிரமன் கரங்களைப் பற்றினான்.

"இது, என் வினைப்பயன் பிரபு! நாட்டுக்குத் துரோகம் செய்துவிட்ட இந்த உடம்பை வைரம் அறுத்து வதை செய்கிறதே! ஏதும் நான் பிழை செய்திருந்தால் பொறுத்தருள வேண்டுகிறேன்!"

வாள் எடுத்துத் தலைவனுடன் மோதிய சம்பவம் நினைவுக்கு வந்ததுபோல!

"ஐயோ! என் தலைவா! என் கண்ணாளா! இந்தப் பாவியால்தானே உங்களுக்கு இந்தக் கதி நேர்ந்தது! நான் என் செய்வேன்! ஐயகோ!"

வனமாலை அழுது புரண்டாள் அவன் மார்பில்! ஆவேசமாகக் கத்தினாள்!

விக்கிரமனோ அவளுக்கு எப்படி ஆறுதல் கூறுவது என்று புரியாமல் தவித்தான்.

"வனமாலை! .... நான் கோழையா?... இல்லை! வீரன்தான்! நீ வீரன் காதலி! ... வேதனைப்படலாமா?"

மாதவ மகேந்திரன் பிதற்ற ஆரம்பித்து விட்டான்! வயிற்றைப் பிடித்துக் கொண்டு புரள ஆரம்பித்ததும் வாயிலிருந்து குருதி கொட்ட ஆரம்பித்து விட்டது.!

அரண்மனை மருத்துவர் ஓடோடி வந்தார். அவருக்குக் காவலர்கள் உதவி செய்தனர்!

ஆனால் பாவம்! அவரால் அவனைப் பிழைக்க வைக்க முடியவில்லை!

"ஐயோ! என் கண்ணாளா! இப்படி நீங்கள் மோசம் செய்து விட்டீர்களே! பிரபு! என்னைப் பார்க்க மாட்டீர்களா?" வனமாலை அழுது புரண்டாள்! அவனைக் கட்டிப் பிடித்துக் கொஞ்சினாள்! ஆவேசத்துடன் முத்தமாரி மொழிந்தாள்! அவன் கன்னத்தில் அடித்தாள்!

இக்காட்சியைக் காண முடியாமலும், மன்னருக்குச் செய்தி தெரிவிக்கவும் விக்கிரமன் வெளியேறினான்.

"ஆகா! ஆற்றல் மிக்க வீரன்! அவனியே புகழும் அளவுக்கு உயரவேண்டியவன்! அமரனாகி விட்டானே!" முணுமுணுத்தவாறு விக்கிரமன் விரைந்தான்!

XXXXXXXXXXX

என் இனிய தமிழ் நெஞ்சங்களே! பாண்டிய நாட்டையும், சோழ நாட்டையும் ஒருசேரப் பார்த்துவிட்டோம். இக்கதை தொடர்பான வேறொரு நாட்டிற்கும் வாசகர்களாகிய உங்களை அழைத்துச் செல்கிறேன். வாருங்கள்!

அக்காலத்தில் ஒவ்வொரு நாட்டின் தலைநகரமும் ஏதாவது ஒரு விதத்தில் பெருமை பெற்றுத்தான் விளங்கியுள்ளது.

பாரத வர்ஷத்தின் (நாட்டின்) ஒட்டியாணம் எனப் புலவர்களால் பாராட்டப் பெற்ற நகரம் மானியகேட நகரம், அது இராஷ்டிரகூட நாட்டின் தலைநகரம்!

அந்தச் செல்வச் சிறப்புடைய நகரத்தை அறுபத்தாறு ஆண்டுகள் ஆட்சி புரிந்த அமோகவர்ஷர்தான் நிர்மாணித்துக் கட்டினார்.

விரிந்து பரந்த அரண்மனை, அழகிய குளம், பூங்காக்கள் அத்தனையும் அவரே நிர்மாணித்தவைதான். அந்த மாமன்னரும் கடைசிக் காலத்தில் உலக வாழ்வை வெறுத்து ஆட்சிப் பொறுப்பை மகனிடம் ஒப்படைத்துவிட்டுச் சமணத் துறவியாகிச் சென்று விட்டார் என்று வரலாறு கூறுகின்றது.

அவர் காலத்தில் சமண மதம் அங்கு அரச மதமாகக் கோலோச்சியது; ஆட்சியை அலங்கரித்தது.

அதோ கருடக் கொடி சிறகுகளை விரித்துப் பறப்பதுபோல மானியகேட நகரக் கோட்டை முகப்பில் கம்பீரமாகப் பறந்து கொண்டிருக்க, மக்களும், அதிகாரிகளும், சிற்றரசர்கள் பலரும் நகரிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்தனரே? என்ன காரணம்?

மன்னர் இந்திரர் தன் மகன் கோவிந்தனுக்கு இளவரசுப் பட்டம் சூடிய நாள் அல்லவா! நிகழ்ச்சி முடிந்ததும் அவர்கள் வெளியேறிக் கொண்டிருந்தனர்போல.

மன்னர் மனத்திலோ கவலை சூழ்ந்திருந்தாலும், மன்னரின் தம்பியும், பாட்டனின் பெயரையே தரித்தவருமான அமோகவர்ஷனே சகல ஏற்பாடுகளையும் செய்து அண்ணன் மகனுக்கு அவசர அவசரமாக இளவரசுப் பட்டம் கட்ட ஏற்பாடு செய்து விட்டார். அவர் அமைச்சரும் கூட!

காரணம் இல்லாமல் இல்லை. நாட்டில் இளவரசன் கோவிந்தன் மேல் நல்ல எண்ணம் இல்லை. அதற்குப் பதில் அமோகவர்ஷனின் மகனான இளவரசன் கிருஷ்ணன்மேல் மக்கள் கவனமெல்லாம் திரும்புவதைக் கண்ணால் கண்டுவிட்ட பின் அவரால் அதைப் பொறுத்துக் கொண்டு, இனியும் காலம் கடத்தக் கூடாதே என்றுதான் அவசர அவசரமாக இந்த ஏற்பாட்டைச் செய்தார்.

எல்லாம் நல்ல விதமாகவே நடந்து முடிந்துவிட்டது.

உள்ளம் நெகிழ்ந்த மன்னர் இந்திரர், தன் தம்பியும், நாட்டின் தலைமை அமைச்சருமான அமோகவர்ஷனின் கரங்களைப் பற்றிக் கொண்டார்!

"அமோகவர்ஷா! எனக்கு உன்னை எப்படிப் பாராட்டுவது என்றே புரியவில்லை! ஒரு பெரிய காரியத்தை இந்த நாட்டின் வருங்கால மன்னன் கோவிந்தன்தான் என்பதை நாட்டுக்குத் தெரியப்படுத்தச் செய்த செயலை நான் மறக்கவே முடியாது. உன்னைப் பாராட்டாமல் இருக்கவும் என்னால் முடியாது!"

"அரசே! அண்ணன் தம்பி என்ற உறவுமுறை இருக்கட்டும். இந்த நாட்டின் வருங்கால மன்னன் கோவிந்தன்தான் என்பதை நாட்டு மக்களும் உணர வேண்டுமென்ற காரணத்தால்தான் இந்த இளவரசுப் பட்டம் சூடும் விழா நடத்த முனைந்தேன்!

"இராஜ விசுவாசம் நம் மக்கள் மனத்தில் உள்ளதோ இல்லையோ எனக்குத் தெரியாது. ஆனால் எனக்கு உள்ளது. என் உயிர் பிரியும்வரை மன்னருக்காகவும் இளவரசனுக்காகவும் உழைப்பேன்! பெருமை காப்பேன்! நாட்டையும் கட்டிக் காப்பேன்!"

"அது போதும் அமோகவர்ஷா!"

மன்னர் தன் மகனைப்பற்றி அறிந்தவர்தான். அத்தோடு நாட்டு மக்களின் நாடி பிடித்துப் பார்த்த ஒற்றர்கள் கொண்டு வந்த செய்தி அவரை அதிர்ச்சியுறச் செய்துவிட்டது. தன் தம்பியும், அமைச்சருமான அமோகவர்ஷனின் மகன் கிருஷ்ணன் மேல்தான் மக்கள் மதிப்பு கொண்டுள்ளனர்; மரியாதை வைத்துள்ளனர் என்ற செய்திதான் அது! அவர் மனத்தை வாட்டாமல் என்ன செய்யும்?

இந்நிலையில்தான் சிறப்பாக இளவரசுப் பட்டம் கோவிந்தனுக்குச் சூட்டப்பட்டு விட்டது. இந்தச் சூட்டோடு சூடாக அவனுக்கு மணம் முடித்து வைத்துவிட்டால் தன் கடமையும் முடிந்தது போல என எண்ணினார்.

எங்கு பெண் எடுப்பது?

மன்னர் குறுக்கும் நெடுக்குமாக நடை போடுவதைக் கண்ட அமோகவர்ஷன், தன் தமையனின் உள்ளத்தில் ஏதோ திட்டம் ஒன்று உள்ளது, அதை எப்படி நிறைவேற்றுவது என்று யோசித்துக் கொண்டிருக்கிறார் என்பதும் புரிந்து விட்டது.

இருவரும் இப்போது தனிமையில்; அதுவும் அரண் மனையின் உப்பரிகையில் உள்ள நிலா முற்றத்தில்.

மனம் விட்டுப் பேச அது வசதியாகவும் இருந்தது. நிலவு வேறு ஏற்றப்பட்ட தீப்பந்தங்களின் ஜோதியைவிட அதிகமாக ஒளி வீசிப் போட்டி போட ஆரம்பித்து விட்டது.

"அரசே! உங்கள் மனத்தில் ஏதோ ஒரு திட்டம் உருவாகிக் கொண்டிருக்கிறது என்பதை நான் அறிகிறேன்!"

"ஆமாம்!"

"என்ன என்று நான் அறியலாமா?"

"அடுத்து கோவிந்தனுக்கு மணம் முடித்து வைக்கலாம் என்ற எண்ணம்தான். இளவரசனுக்கு ஏற்ற மணமகள் எந்த நாட்டில் உள்ளாள்? எந்த நாட்டு இளவரசி இவனுக்குப் பொருத்தமானவள் என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்!"

"ஆமாம்! இளவரசனுக்கும் சீக்கிரமே ஓர் இளவரசியைத் தேர்ந்தெடுத்து மணம் முடித்துவிட வேண்டியதுதான்!"

"கங்க மன்னன் பூதுகனின் தங்கை ஒருத்தி இருந்தாளே, அவளை நம் இளவரசனுக்கு மணம் முடித்து வைத்தால் என்ன?"

"கங்க மன்னருக்குத்தான் என் மகளைத் திருமணம் செய்து கொடுத்துள்ளோம் அல்லவா? அதனால் அவர் நம் உறவினர் ஆகிவிட்டார். மேலும் பெண் கொடுத்துப் பெண் எடுப்பது அவ்வளவு உசிதமல்ல! ஏதாவது பிணக்கு வந்தால் இருபக்கமும் சங்கடம்தான்!"

"பிறகு எங்கு பெண் பேசலாம்?"

"நமக்கு உறவும் வேண்டும், உதவியும் வேண்டும் அல்லவா?"

'தான் கேட்ட கேள்விக்குப் பதிலாகக் கேள்வியே கேட்கிறானே தம்பி' என்று திரும்பிப் பார்த்தார் ஒருகணம்.

"ஆமாம்! அதற்கு என்ன?"

"நமது நாட்டிற்குத் தொல்லை தரும் எதிரி சாளுக்கியன் பக்கத்தில் உள்ளான். அவனுக்குச் சமமான பலமுள்ள ஒரு நாட்டில் தான் நாமும் உறவு ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்! அப்படி உள்ள நாடு சோழ நாடு ஒன்றுதான்! அதுதான் நமக்கு ஏற்றது."

"சோழ நாடா?"

"ஆமாம்!"

மன்னர் அதற்குப் பிறகு ஏதும் கூறவில்லை. அவர் மனத்தில் ஆயிரம் எண்ணங்கள்!

இது நடக்கக் கூடிய காரியமா? கடந்த காலக் கசப்பான சம்பவங்கள் நினைவுக்கு வந்தன.

இரட்டை மண்டலத்திற்கும் சோழ நாட்டிற்கும் ஒரு காலத்தில் உறவும் ஏற்பட்டது! பெருமையாகவும் அது இருந்தது. அதுவே கடைசியில் பகையாக முற்றி வளரும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லையே!

அதற்கு யார் காரணம்!

இன்று தங்கள் நாட்டில் அடைக்கலம் புகுந்துள்ள சோழ அரசி இளங்கோப்பிச்சிதானே!

அவர் தன் தந்தையின் உடன்பிறந்தவரான அத்தையார் அல்லவா?

பட்ட மகிஷியாகிப் பவனி வந்தவர் நாடு விட்டு நாடு வந்து சேர்ந்து அதனால் இரு நாடுகளுக்கும் போர் மூண்டதே!

அந்தக் கசப்பான சம்பவங்களை எப்படி மறப்பது? எப்படிப் பெண் கேட்பது?

அந்தக் காலத்தைப்பற்றிய நினைவுகள் அவர் மனத்தில் ஓட ஆரம்பித்தன!



# 16. இளங்கோப்பிச்சி

அமைச்சர் அமோக வர்ஷன் தங்கள் இளவரசன் கோவிந்தனுக்குச் சோழ நாட்டில் பெண் எடுத்தால் நல்லது என்று கூற, அரசர் இந்திரர் பழைய சம்பவங்களை அசை போட ஆரம்பித்தார்.

இரு நாடுகளும் உறவும் கொண்டன. போர் மூண்டு பகையும் கொண்டன.

அதற்குக் காரணம் யார்?

அத்தை இளங்கோப்பிச்சி!

அவர் காலஞ்சென்ற பேரரசர் அமோகவர்ஷனின் பேத்தி. தங்கள் பாட்டன் கிருஷ்ணனின் மகளும்கூட. போரில் பெரும் வீரம் காட்டிப் போர் புரிந்து சரித்திரத்தையே மாற்றிக் காட்டிய இளவரசர் ஆதித்தர் மேல் ஆறாத காதல் கொண்டார். சிற்றரசன்மேல் காதல் கொண்டவளை அங்கு மணம் முடித்துக் கொடுக்க மன்னர் விரும்பவில்லை.

ஆனால் அவளோ தன் தந்தையிடம் வாதாடித் தன் பெயரையே மாற்றி, இளங்கோமேல் காதல் கொண்டதால் இளங்கோப்பிச்சி என்று பெயர் சூடி ஆதித்த சோழரைக் கைப்பிடித்தார். அத்தோடு மாத்திரமல்ல; இரண்டாவது அரசியாகச் சென்ற இளங்கோப்பிச்சி பட்டத்து அரசியாகவும் பதவி உயர்வு பெற்றாள்.

முதலில் வந்தவளும் பல்லவ இராஜகுமாரியுமான திரிபுவனமாதேவி பட்டத்தரசியாகப் பட்டமேற்க வழியில்லாமல் ஆதித்த சோழர் மனத்தையும் மாற்றிவிட்டார்.

சோழ நாட்டையே சுதந்திர பூமியாக விட்டுக் கொடுத்ததோடு தன் தங்கையை ஆதித்தருக்கு மணம் முடித்து வைத்துப் பெருமைப் படுத்திய பல்லவப் பேரரசன் அபராஜிதன் அதனால் கோபம் கொண்டார்.

வெடித்தது போர்!

ஆதித்த சோழரின் அதிர்ஷ்டம் போரில் அவரே வெற்றி கொள்ள, பல்லவ இராஜ்யமும் அவர் கைக்குப் பரிசாகக் கிடைத்தது. ஆனாலும் சோழ - இராஷ்டிரகூட உறவும் நெடுநாள் நீடிக்க இயலாமல் போய்விட்டது.

காரணம் சோழ இளவரசர்களில் யார் அரியணையில் அமர்வது என்ற பிரச்சனை எழுந்ததால்தான்.

பல்லவ இளவரசி திரிபுவன மாதேவிக்குப் பிறந்தவன் பராந்தகன். அவனே மூத்தவன். இராஷ்டிரகூட இளவரசியும் சோழ மகாராணியுமான இளங்கோப்பிச்சிக்குப் பிறந்தவன் கன்னரதேவன். அவனோ இளையவன்!

பட்டத்தரசியின் மகனே பட்டம் சூட்டிக் கொள்ள வேண்டும் என்று தன் மகனுக்காக ஆதித்த சோழரிடம் வாதாடினாள் அரசி இளங்கோப்பிச்சி.

ஆனால் அரசரும், மற்றும் சிற்றரசர்கள், படைத்தலைவர்களும் அதற்கு உடன்படவில்லை. மூத்தவன் இருக்க இளையவன் எப்படி அரசுரிமை பெறுவது? மறுப்புக் கண்டு அரசி மனம் தளரவில்லை. காலம் கருதி இருந்தாள்.

ஆதித்தர் இறந்ததும் பராந்தகன் பட்டமேற்றதுதான் தாமதம்! இளங்கோப்பிச்சியின் தூண்டுதலால் இராஷ்டிரகூட மன்னர் தன் பேரனுக்காகப் படை திரட்டி வந்தார். பராந்தகனோடு போரும் நடத்திட்டார்.

ஆனால் போரில் கன்னரதேவன் கொல்லப்பட்டதோடு, இராஷ்டிரகூடர் படையும் தோற்றுத் திரும்பியது.

அதுநாள் முதல் இரு நாடுகளுக்கும் ஒட்டும் இல்லை. உறவும் இல்லை!

மகனுக்காகப் போர் புரியத் தூண்டியவரும் முன்னரே ஆதித்த சோழரால் நாடு கடத்தப்பட்டவருமான அரசி இளங்கோப்பிச்சி அதுமுதல் மானியகேட நகரில் அவர்கள் ஆதரவில்தான் வாழ்ந்து வந்தார்.

அரசர் இந்திரர் தங்கள் அத்தையான அவரைக் கௌரவத்துடனே நடத்தி வந்தார்.

எல்லாம் அவர் மனத்திரையில் வரிசையாக வலம் வந்தன.

அமோகவர்ஷன் கூறியது நடக்கக் கூடியதா? பழைய உறவுதான் துண்டித்து இங்கு துவண்டு கிடக்கிறதே?

தமிழ் நாட்டு நிலையும் அவ்வளவாகச் சிறப்புடன் அமைதியுடன் இல்லை. இன்று பாண்டியநாடு சோழர் கைக்குக் கிடைத்திருக்கலாம். நாளையே அங்கு புரட்சி கிளம்பலாம் அல்லவா?

அதனால் இரு பேரரசர்களும் இணைவது சாத்திய மாகலாம்தான்!

நெடுநேரம் அரசர் இந்திரர் குறுக்கும் நெடுக்குமாக அசை போட்டு ஆராய்ந்தார். அவர் தயக்கத்தை அமோகவர்ஷனும் புரிந்து கொண்டார். எனவே, அவரே முதலில் மௌனத்தைக் கலைத்தார்.

"அரசர் தயங்குவது புரிகிறது. நம் அத்தையாரும் சோழ இராஜமாதாவுமான இளங்கோப்பிச்சியாரிடமே இதுபற்றிக் கேட்டுப் பார்ப்போமே?"

"அதுவும் சரிதான்!" அரசரும் ஆமோதித்தார்.

அதே நேரத்தில் அவர்கள் மனநிலைக்கு ஏற்ப எண்ணங்கள் பிரதிபலித்தாற்போல சோழ அரசி இளங்கோப்பிச்சியும் அங்கு வந்துவிட்டார்.

தன் சகோதரரின் மக்கள் தன்னை ஏதோ கேட்க விரும்புவது மட்டும் அவர் காதில் விழுந்தது உப்பரிகை ஏறி வரும்போது.

"அரசே! என்னவோ என்னிடம் கேட்க விரும்புகிறீர்கள் என்பது மட்டும் என் காதில் விழுந்தது! என்ன கேட்க விரும்புகிறீர்கள்? கேளுங்கள்!"

தங்கள் அத்தையாரை அவர் ஏறிட்டுப் பார்த்தார். 'குந்தளாதேவி என்ற இயற்பெயர் பெற்றவர்; ஆதித்த சோழர்மேல் காதல் கொண்டு அவர் கரமும் பற்றிப் பெயரை இழந்து அவருக்கே பிச்சியானவர்; அதனால் இளங்கோப்பிச்சி என்ற பெயரையும் சூட்டிக் கொண்டவர்!

'அன்புக் கணவருடன் ஆனந்தமாகவே வாழ்ந்து பேரரசி என்ற பெருவாழ்வும் பெற்றவர்; தன் மகனுக்காக மன்னரிடம் வாதாடித் தோற்றவர்; தன் தந்தை சொல் கேட்டு, புத்தி தடுமாறி, சோழ அரசரின் சீற்றத்துக்கு ஆளாகி நாடு விட்டு நாடு வந்து அடைக்கலமானவர்; பராந்தகனுக்கு எதிராக மகனைப் போட்டியிட வைத்துப் போரில் மகனையும் பறிகொடுத்தவர்!

'இன்றோ நாடிழந்து, பிறந்து வளர்ந்த நாட்டிலே வாழுகின்ற பேதை அவர்! தனது புகுந்த இடத்தின் பெருமையை எண்ணிப் புலம்ப ஆரம்பித்தவரை அன்புடன் பாராட்டிச் சீராட்டி வைத்துள்ளோம்!'

'இவரிடம் எப்படி இந்த விஷயத்தை உரைப்பது?'

களை இழந்த முகமானாலும் ஆதித்தரைக் கவர்ந்த அதே ஒளி பொருந்திய கண்கள்! முழுவதும் நரைத்துவிட்ட தலை. அதற்கு ஏற்றாற்போல வெண்பட்டாடையையே உடுத்தி வருபவர்.

நெற்றி பாழாகவே இருந்தது. அவள் பிறந்த குடும்பமோ சமண சமயத்தைச் சார்ந்தது. வாழச் சென்ற இடம் சைவத்தைப் போற்றுபவர்கள். (பாகைநாடன் எழுதிய 'சிநேகவல்லி' வரலாற்று நவீனத்தில் காண்க.) ஆனால் அவர் விரும்பியதோ கண்ணனின் மேல் ஆறாத பற்றுக் கொண்ட வைணவத்தை!

இன்று எல்லாம் இழந்துவிட்டதால் நெற்றியை வெறுமையாக வைத்துக் கொண்டவர். அது தன் வாழ்வைப் பறை சாட்டட்டும் என்று எண்ணிக் கொண்டாரோ என்னவோ?

"அரசே, என்ன யோசனை?"

"தங்கள் நிலையைக் கண்டு கேட்கத் தயக்கமாக உள்ளது!"

"என் நிலைமை எப்படியோ போகட்டும்! கேளுங்கள்!"

"பெருமாட்டி! தாங்கள் விரும்பி வாழ்க்கைப்பட்ட சோழ நாட்டில் நம் இளவரசனுக்குப் பெண் எடுக்கலாமா? உங்கள் அபிப்பிராயம் என்ன?"

இளங்கோப்பிச்சி ஒரு கணம் திடுக்கிட்டார்! உடல் சிலிர்த்தது! தான் வாழ்ந்த நாடு! அது ஒரு புண்ணிய பூமியல்லவா? அன்புக் கணவரின் கரம் பற்றிய வேளை அரசர், பேரரசரானார்! தன் அன்புக்கு அடிபணிந்து பேரரசியாக்கிப் பரவசப்பட்டவர்! பட்டத்தரசியாக்கிப் பவனி வரச் செய்தவர்!

அவரது மூத்த மைந்தர் பராந்தக சோழரே இன்று ஆட்சி நடத்தி வரும் பேரரசர்! அவருடைய பெண்ணையா இங்கு மணமகளாகக் கொண்டு வர விரும்புகின்றனர்? அவருக்கு எல்லையற்ற மகிழ்ச்சி!

ஒரு கணம்தான் அதுவும்!

பிறகு சோகம் சொந்தம் கொண்டாடியது!

'பேரரசர் பராந்தகன் இதற்கு இசைவானா? தன்னை நினைப்பானா? பார்க்க இசைவானா? பாராமுகமாக இருந்து விட்டால்?'

இப்போது தஞ்சை செல்ல வேண்டும் என்ற தணியாத தாகம் அவருக்கு!

"நானும் பெண் கேட்கச் செல்பவர்களுடன் வரலாமா? அழைத்துச் செல்வீர்களா?"

'அவருடைய விதியை எண்ணி நொந்து கொள்வதா? அவரல்லவா அங்கிருந்து இவர்களை வரவேற்க வேண்டும்?'

அமோகவர்ஷன் அதை எண்ணி மறுகினார்.

"பெருமாட்டி! அமோகவர்ஷன்தான் தூது செல்ல இருக்கிறான்! இந்த உறவு மலர்ந்தால் பழைய விரோதங்கள் மறைந்து போகலாம்! உங்களுக்கு இதில் சம்மதம்தானே?"

"எனக்குப் பூரண சம்மதம்! நானும் உடன் செல்கிறேனே?"

அவரது ஆசையை இருவரும் அங்கீகரித்தனர்; அதை நிறைவேற்றி வைக்கவும் முனைந்தனர்.

அவரது மூத்தாள் புதல்வரான பேரரசர் பராந்தகருக்கு ஆறு மனைவியர் என்பதும், நான்கு ஆண் மக்கள் என்பதும், இரண்டு பெண்மக்கள் என்பதும் அவ்வப்போது அவருக்கு அங்கிருந்து செய்திகள் வந்து சேரும்.

அதைக் கேட்பதோடு சரி. பிறகு நாடு கடந்து வாழும் தன்னை ஒருவரும் நினைக்கவில்லையே என்ற கவலையும் அவ்வப்போது அவரை வாட்டத்தான் செய்தது.

'எப்படி உன்னத புகழுடன் வாழ்ந்தேன்! நிறைவேற்ற முடியாத ஆசையை மனத்தில் வளர்த்து அன்புக் கணவரை - நாட்டு மக்களை எதிர்த்துத் தன் மகனுக்காகப் போர்கூட நடத்திக் கடைசியில் மகனையும் இழந்தேன்? கட்டிக் கொண்ட மன்னரையும் இழந்து தனிமரமாக நாடு விட்டு நாடு வந்து வாழவேண்டிய அவலம் எனக்கு நேர்ந்துவிட்டதே!'

அதை நினைத்துக் கலங்கினார் அவர்.

xxxxxxxxxxx

அந்தி மயங்கும் நேரம். காவலர்களும், பணிப் பெண்களும் இளவரசன் கோவிந்தன் மாளிகையில் விளக்குகள் ஏற்றி எண்ணெய் ஊற்றியும், திரிகளைத் தூண்டிவிட்டு எரிகிறதா என்பதைத் சோதனையிட்டும் சென்று கொண்டிருந்தனர்.

அப்போதுதான் கோவிந்தன் கண் விழித்தான்.

'இது இரவுதானா? அல்லது அதிகாலைப் பொழுதா?' ஊர்ஜிதம் செய்து கொள்ள இயலவில்லை அவனால்!

இரவைப் பகலாக்க விளக்குகள் ஏற்றப்பட்டு அவை ஜொலிப்பதைப் பார்த்துத்தான் அவனுக்கு இரவு நேரம் நெருங்குகிறது என்பது புலப்பட்டது.!

நேரம் புலப்படாத அளவு போதையேறிக் கட்டிலில் கிடந்தவன் விழித்தபோது விடிந்துவிட்டதோ என்ற கவலை அவனுக்கு,

மறுபடி போதை ஏற்றிக் கொள்ள வேண்டும்! பேதை ஒருத்தியும் சில சமயங்களில் கட்டிலை அலங்கரிக்கவும் வேண்டும்!

'கட்டுப்பாடுகள் சில நாட்களாக அதிகம் விதிக்கப்பட்டு விட்டன. இளவரசனாக முடி சூட்டப்பட்ட பின் எல்லாமே தலைகீழாக மாறிவிட்டன.

'இனி நாட்டை ஆளப் போகிறவனாம்! மக்களிடம் நேசமாகப் பழக வேண்டுமாம்!

'பதவி சுகம் அனுபவிக்க வேண்டுமானால் இவற்றை எல்லாம் பழகித் தொலைக்கத்தான் வேண்டும்!

'அமோகவர்ஷனின் மகன் கிருஷ்ணனிடம் அப்படி என்ன அதிசயத்தைக் கண்டுவிட்டனர்! மக்கள் ஆட்டு மந்தைகள்போல!

'அவன் வந்தால் போதும், 'வாழ்க' கோஷம் வானைப் பிளக்கிறதே! எப்படியாவது நம்மை மாற்றிக் கொண்டால்தான் வாழ முடியும் போலிருக்கிறது!'

நெட்டி முறித்துக் கட்டிலிலிருந்து எழுந்தான். பணிப் பெண்கள் தண்ணீருடனும், துண்டுடனும் தயாராகவே நின்று கொண்டிருந்தனர்.

"உம்!"

முகம் கழுவ ஒருத்தி தண்ணீர் ஊற்றினாள்! ஒருத்தி சாமரம் விசிறினாள்! ஒருத்தி சால்வையை எடுத்து நீட்டினாள்!

வீரன் ஒருவன் அவர்களுக்கு கண் ஜாடை காட்ட, அவர்கள் அனைவரும் நகர்ந்து சென்று விட்டனர்.

கட்டிலில் போய் அமர்ந்ததுதான் தாமதம்! வீரன் தின்பண்டங்களை மேசைமீது பரப்பினான்.

"எங்கே அது?" மதுதான் அது! புரிந்துகொண்ட காவலன் ஒரு ஒரு தங்கக் கோப்பையில் ஊற்றிக் கொடுத்தான்!

"தூ! தூ!" வாயில் உறிஞ்சிய அடுத்த கணமே அவ்வளவையும் அந்த வீரன் முகத்திலேயே துப்பினான்!



# 17. தந்தையும் மகனும்

இளவரசன் கோவிந்தன், காவலன் ஊற்றிக் கொடுத்த மதுவை உறிஞ்சிய வேகத்திலேயே அவன் முகத்தில் அவ்வளவையும் துப்பியதும் தடுமாறினான்.

'இளவரசன் அடுத்து என்ன கூறுவானோ? ஏது செய்வானோ?' அஞ்சினான் அவன்.

"யவன மது எங்கே? கொண்டு வா அதை!"

காவலன் முடுக்கிவிட்ட எந்திரம்போல வேறு ஒரு ஜாடியில் இருந்த மதுவை மற்றொரு தங்கக் கோப்பையில் ஊற்றிக் கொடுத்தான்! இளவசரன் கோபம் மேலும் அதிகரித்தது.

"உம்! முகத்தில் வடிவதைத் துடைக்கக்கூட உனக்கு உணர்ச்சியில்லையா?" அதட்டினான் அவனை!

பதறிய காவலன் இடுப்பில் கட்டியிருந்த துண்டை அவிழ்த்துத் துடைத்துக் கொண்டான்.

"உம்! அடுத்தது எங்கே?" கேள்வி கேட்ட இளவரசன் மேசையில் பரப்பி வைத்திருந்த பண்டங்களைக் கொறிக்க ஆரம்பித்தான்.

அடுத்தது எது என்பது காவலனுக்குத் தெரிந்ததுதானே! வணங்கி விடை பெற்றுச் சென்றான்.

'உம்! அரசர் பெருமானுக்கு இப்படி ஒரு பிள்ளை! நாடு உருப்பட்டாற் போலத்தான்! மதுவும் மாதுவும் இருந்தால் போதும்! மணிமுடி தரித்த பிறகு இவர் எப்படியோ? மக்கள்தான் எப்படி மாறப் போகிறார்களோ?'

'இப்படி இருந்தால் எப்படி அபிமானம் கொள்வார்கள்? அமைச்சரின் மகன் எவ்வளவோ தேவலை! இது ஒரு மனித மிருகம்! என்றைக்கு இதுக்கு ஒரு முடிவு வருமோ தெரியலையே!'

'உம்!... நான் ஒரு மானங்கெட்ட பய! இவனுக்கு வந்து வாய்த்தேனே வீரனாக! இந்தப் பிள்ளையைப் பெற அரசர் என்ன தவஞ் செஞ்சாரோ? ஆகா! நாடு உருப்பட்டாற்போலத்தான்! இது கெட்ட கேட்டுக்குச் சோழ நாட்டு இராசகுமாரியையாமுல்ல பெண் கேட்டு முடிக்கப் போறாங்களாம்?

'உம்! நாடு என்றைக்குப் பொங்கி எழப் போகுதோ? உம்! போறேன் நான் ஒரு போக்கத்த பய! என்ன பண்றது? வயிறு இருக்குதே! விடவும் முடியலே! இங்கே இருக்கவும் முடியலே! என்னத்தே செய்ய! உம்! எதற்கும் ஒரு முடிவு வந்துதானே ஆகணும்! வரும்! வரும்!'

முணுமுணுத்தவாறே அவன் சென்றான்! அவன் முனகிக் கொண்டு சென்றதைக் கண்ட காவல் காத்த வீரன் மெல்லச் சிரித்துக் கொண்டான்! அதற்குமேல் அவனும் செய்ய இயலாது!

XXXXXXXXXXXX

அமோகவர்ஷன் தன் மாளிகையின் முன்பு ஏதோ ஆரவாரம் கேட்கவே உப்பரிகையிலிருந்து கீழே எட்டிப் பார்த்தார்.

தன் மாளிகை வாசலில் அவர் மகன் கிருஷ்ணன் குதிரையிலிருந்து இறங்குவதும், வீரர்களும், கூடி நின்ற மக்களும் 'வாழ்க' கோஷம் போடுவதும் தெரிந்தது.

'உம்!...'

தனக்குள் அவர் முணுமுணுத்துக் கொண்டார்.

குதிரையிலிருந்து குதித்தவன் வில்லிலிருந்து புறப்பட்ட அம்புபோல தந்தை இருந்த மேல்மாடம் சென்றான்.

சுற்றி நின்ற வீரர்களும், அரசியல் அதிகாரிகளும் மெல்ல வெளியேறினர். அவன் கண் ஜாடை காட்டியிருப்பான் என்பதை அமோகவர்ஷன் உணர்ந்து கொண்டார்! அமைச்சருக்கு இதுகூடவா தெரியாது?

"தந்தையே!"

அழைத்த குரலில் கோபமும், வருத்தமும் கூடியே இருந்தன. மகனை ஏறிட்டுப் பார்த்தார்.

"என்ன, கிருஷ்ணா?"

எப்படி ஆரம்பிப்பது என்பது புரியாமல் கிருஷ்ணன் சில கணங்கள் யோசித்துவிட்டுத் தன்னைத் தயார்படுத்திக் கொண்டு பேச ஆரம்பித்தான்.

"தாங்கள் சோழ நாடு புறப்படப் போவதாகக் கேள்விப்பட்டேன். உண்மைதானா?"

"ஆமாம்! ஏன்?"

"அது நமது எதிரி நாடு என்பது தங்களுக்கு மறந்திருக்காது என்று எண்ணுகிறேன்!" எகத்தாளமாக வெளிவந்தன வார்த்தைகள்.

அதில் தொனித்த ஏளனத்தை அவர் புரிந்து கொண்டார்.

"கிருஷ்ணா! அரசியலில் எதிரி என்பது இல்லவே இல்லை! உறவும்கூட அப்படியே!

"கால இடைவெளிகளில் இரண்டும் மாறி மாறி வருபவை என்பது உனக்குத் தெரியுமா?"

"அது போகட்டும்! கோவிந்தனுக்கு அங்கு பெண் கேட்டு முடிக்க இருப்பதாகவும் அறிந்தேன்!"

"ஆமாம். கூடாதா?"

"உம்! மதியிலிக்கு மணமா?"

"கிருஷ்ணா!"

அவர் குரலில் உஷ்ணம் கூடியது!

"என்ன பேச்சுப் பேசுகிறாய்? அவன் மதியிலியாக இருக்கலாம்! ஆனால் மன்னரின் மகன்! என் அண்ணனின் மகனும்கூட! இளவரசனைப்பற்றி அப்படிப் பேச உனக்கு வெட்கமாயில்லை?"

"வெட்கப்பட வேண்டியவன் நானல்ல."

"அப்படி என்றால்?" பதில் சொல்ல அவன் தயங்கினான்.

"இளவரசன் எக்கேடு கெட்டும் போகட்டும்! நீங்கள் பெண் கேட்டுச் செல்லுமிடம் நமக்கு மட்டுமல்ல எதிரி! சோழன் உங்கள் மருமகன் கங்க நாட்டு மன்னர் பூதுகனுக்கும் எதிரி!

"அதனால்?"

"அதுமட்டுமல்ல! சோழனுக்கு நமது நட்பும் உறவும் கிடைத்தால் அவன் என் தமக்கையின் கணவரை எதிர்க்க அல்லவா நினைப்பான்!"

"கிருஷ்ணா! அரச குலத்தவரை ஒருமையில் பேசாதே! சோழ மன்னர் என் மருமகனுடைய எதிரியாக இருக்கலாம். இருவரும் நட்புக் கொள்ள இந்தத் திருமணம் உதவியாக இருக்குமல்லவா?"

"அதுதான் போகட்டும். உங்களுடைய அத்தையாரும் என் பாட்டியாருமான சோழப் பேரரசி நாடு விட்டு நாடு வந்து வாழ்கிறார்களே! அவர்களுக்கு நேர்ந்த கதியை நினைத்தாவது பார்த்தீர்களா?"

அமோகவர்ஷன் மெல்ல நகைத்தார்.

"கிருஷ்ணா! உன் கோபம் எனக்குப் புரிகிறது! உன் பாட்டியார் சம்மதத்துடன்தானே இந்தத் திருமணப் பேச்சு எழுந்தது! நாளை அவர்களும்தான் என்னோடு தஞ்சைக்குப் புறப்படப் போகிறார்கள்!"

கிருஷ்ணன் திடுக்கிட்டான்!

"என்ன பாட்டியாருமா? அங்கு அவருக்கு நல்ல வரவேற்புக் கிடைக்கும் என்றா எதிர்பார்க்கிறீர்கள்?"

"உன் கவலையும் நியாயம்தான்! காலம் எத்தனையோ கோபதாபங்களை - காயங்களை ஆற்றிவிடும்! - மாற்றிவிடும்! பார்த்தாயா? இருபத்தைந்து ஆண்டுகளுக்குமுன் நடந்த நிகழ்ச்சி அது! தன் மகனுக்காக மூத்தாள் மகன்மீது போர் தொடுக்கத் தன் தந்தையுடன் போருக்கு மகனையும் அனுப்பியவர். கடைசியில் பெற்ற மகனையும் போரில் பறிகொடுத்தவர்! அவரே இன்று மனம் நெகிழ்ந்து தான், வாழ்ந்த நாட்டை இதன் மூலமாவது பார்க்க இயலுமா என்று ஏங்குகிறார்! மூத்தவள் பேத்தியையே இங்கு மணமகளாக ஆக்கிக் கொள்ள ஆவல் கொண்டு அந்த மூதாட்டியே ஒப்புதல் தந்தபின் நமக்குள் ஏன் வாக்குவாதம்?"

இளங்கோப்பிச்சிமீது அவனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது!

'கிழவிக்கு ஏன் கடைசியில் இந்த ஆசை? எவர் எக்கேடும் கெட்டுப் போகட்டும்! நம் தந்தை ஏன் நமக்கு மகுடம் வரும்போல் இருப்பதை மறுக்கிறார்? மக்கள் கிளர்ந்து எழுந்தால் என்னாவது? கொஞ்சமும் அசைந்து கொடுக்க மாட்டேன் என்கிறாரே?'

அவன் தன் கோபத்தை எல்லாம் கொட்ட ஆரம்பித்தான்.

"தந்தையே! காமுகனான - குடியனான கோவிந்தனுக்கு எதிரி நாட்டில் பெண் எடுக்க முனைவதைக் கண்டு மக்கள் மன்னர்மேல் வெறுப்புக் கொண்டுள்ளனர்! என்னையே அவர்கள் விரும்புகின்றனர்! நாளை எதுவும் புரட்சி வெடித்தாலும் ஆச்சரியமில்லை!"

அமோகவர்ஷன் கோபத்தின் உச்சிக்கே போய்விட்டார்!

"கிருஷ்ணா! நிறுத்து! நான் இருக்கும்வரை எதுவும் அசம்பாவிதம் நடக்கவிட மாட்டேன்! இளவரசன் கோவிந்தன் மதுவும் மங்கையும்தான் உலகம் என்று இன்று இருக்கலாம்! அவனை நல்வழிப்படுத்தித் திருத்த எனக்குத் திறமை உண்டு. தைரியமும் உண்டு! ஒன்றை மட்டும் நீ நினைவில் வைத்துக் கொள்! மன்னனாகி விடலாம் என்று மனப்பால் குடிக்காதே! ஏதும்

புரட்சி நடந்து அதற்குக் காரணம் நீதான் என்று தெரிந்தால் மகன் என்றும் பார்க்கமாட்டேன்! பாசத்தை மறந்து நானே உன்னைச் சிறைப்பிடிப்பேன். அதை மறந்துவிடாதே!"

கிருஷ்ணன் திடுக்கிட்டான்!

"தந்தையே!"

"ஆமாம்! இளவரசன் கோவிந்தனுக்கு நானே சாகும்வரை உறுதுணையாக நின்று நாட்டையும் அவனையும் காப்பேன். அவனையும் நல்வழிப்படுத்துவேன். சோழ மன்னரின் உதவியோடும், கங்கமன்னரான என் மருமகன் பூதுகன் உதவியோடும் நாட்டை நன்கு பரிபாலிப்பேன்!"

சில கணங்கள் அங்கு அமைதி நிலவியது.

"தந்தையே! நாட்டின்மேல் இவ்வளவு பற்றும் பாசமும் வைத்துள்ள நீங்கள் அமைச்சராகவே இருக்கக் கூடாது!"

"என்ன கூறுகிறாய்?"

"ஏன் அரசராகக் கூடாது?"

அமோகவர்ஷன் கடகடவெனச் சிரித்தார்.

"எனக்கு ஆசை வார்த்தைகளை அள்ளி வீசுகிறாயா? அதற்கெல்லாம் மயங்குபவன் நானல்ல!"

"இல்லை தந்தையே! நீங்களும் பேரரசரின் பிள்ளைதானே! மன்னரின் மகனான உங்களுக்கு நாட்டின் ஒரு பகுதியைப் பிரித்துக் கொடுத்தால் அவர்கள் குறைந்தா போய்விடுவார்கள்? அப்படி ஏன் செய்ய அவர்களுக்கு மனம் வரவில்லை? நல்லெண்ணம் இல்லா அரசருக்கு நலம் தேட நாட்டம் கொள்கிறீர்களே! இது தகுமா?"

"கிருஷ்ணா! எனக்கு நீ புத்திமதி கூற வேண்டாம்! நல்ல பிள்ளையாக நடந்து கொண்டால் அதுவே போதும்!"

"தந்தையே! அரசபீடம் என்பது அலங்கார மேடையல்ல! பிணங்கள் என்ற செங்கற்களால் குருதி என்னும் சுண்ணக் கலவையுடன் சேர்த்துக் கட்டி எழுப்பப்படும் மேடைதான் அது! மக்களோ நம்மீது மதிப்பும், மரியாதையும் வைத்துள்ளனர்! அன்பு பாராட்டுகின்றனர்! குருதி சிந்தவேண்டாம்! கொற்றம் நம் கையில் தானே வந்து விழும்!"

அமோகவர்ஷனால் அவன் கூறுவதைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருக்க இயலவில்லை. கோபத்தின் எல்லைக்கே சென்றுவிட்டார்!

"கிருஷ்ணா! போய்விடு இங்கிருந்து! நாட்டை ஆள எனக்கு விருப்பமும் இல்லை! விரும்புபவர்களை வேரறுக்க என் வாள் இதோ உறையை விட்டுக் கிளம்பவும் தயாராகிவிட்டது!"

வாளின் மேல் கை வைத்து விட்டார்! அவன் வந்த வேகத்திலேயே வெளியேறினான்!

"ஆண்டவா! நல்ல பிள்ளையாக வளர்ந்தவன் நாடாள விரும்புகிறானே! விஷவித்தை விதைத்தது யார்! நீதான் காப்பாற்ற வேண்டும்!"

கை கூப்பித் தொழ ஆரம்பித்தார்!

xxxxxxxxxxxx

தஞ்சை அரண்மனையின் கருமண்டபத்தில் பராந்தக சக்கரவர்த்தி கையில் ஓர் ஓலையுடன் சிந்தனைவசப்பட்டவராக அமர்ந்திருந்தார்.

அந்த ஓலையையே சற்று நேரம் உற்றுப் பார்த்தவாறும் இருந்தார். அவர் அப்படிச் சிந்தனை வயப்பட அதில் என்னதான் இருந்தது?

அது அவர் எதிர்பாராத இடத்தில் இருந்து அல்லவா வந்திருந்தது! எதிரியான இராஷ்டிரகூட மன்னர் இந்திரரிடமிருந்து வந்ததால் அவர் சற்று திகைத்துத்தான் போய்விட்டார்!

"உறவைப் புதுப்பிக்க சோழ இராஜமாதாவும், சோழப் பேரரசரின் சிற்றன்மையுமான இளங்கோப்பிச்சியும், இராஷ்டிரகூட மன்னரின் தம்பியும், நாட்டின் அமைச்சருமான அமோகவர்ஷனும் தஞ்சைக்குப் புறப்பட்டு வருகிறார்கள்! இன்முகம் கொண்டு வரவேற்கவும்!"

கொண்டு வந்தவன் சற்று அச்சத்துடன் நின்றான்!



# 18. இலக்கிய சர்ச்சை

ஓலை கொண்டு வந்த வீரன் எதிரி நாடான இராஷ்டிரகூட நாட்டுக் காவலனானதால் சோழப் பேரரசர் சீற்றத்திற்குத் தான் ஆளாகி விடுவோமோ என அவன் அஞ்சியே நின்றான். சுற்றிலும் காவல் வீரர்கள் வேறு!

எதிரி நாட்டு மன்னரே இப்படி ஓலை அனுப்பி இருப்பதால் என்ன முடிவு எடுப்பது?

'உம்! வரட்டும்! வரவேற்போம்!'

கல்வரத்துடன் நின்ற காவலனுக்கு அப்போதுதான் உயிர் வந்தது. வணங்கி விடை பெற்றுச் சென்று விட்டான்.

பின்னால் வந்துகொண்டிருந்த இராஜ்ஜியத் தூதுவர்களை அவன் சந்தித்து சக்கரவர்த்தியின் பதிலைக் கூறிவிடுவான்.

அதற்குள் பேரரசர் தன் நிலையை - கடந்த காலச் சம்பவங்களை அசை போட்டுப் பார்க்கச் சற்று அவகாசமும் தேவை என்பதை உணர்ந்தார்!

இரட்டைமண்டலம் எப்படி எதிரி நாடாக மாறிற்று? உறவைப் புதுப்பிக்க என்றால் என்ன பொருள்? வரப்போகும் தன் சிற்றன்னை சோழ இராஜமாதா என்ற அந்தஸ்திலா உள்ளார்?

நீண்ட பெருமூச்சு ஒன்று வெளிப்பட்டது. காலம் சென்ற அவர் தந்தை ஆதித்த சோழர் அவரை அப்போதே நாடு கடத்தி விட்டாரே! அவர் தன் சிற்றன்னைதான்! ஆதித்தர் காலத்துச் சோழ நாட்டின் பட்டத்தரசிதான் !

'ஆனால் இப்போது?'

கடந்த இருபத்தைந்தாண்டுகளுக்கு முன் நடந்த - மறந்து போயிருந்த பழைய சம்பவங்கள் அவர் மனத்தில் நிழலாடின!

தான் இராஷ்டிரப் பேரரசரின் மகள் என்பதாலும், சோழ அரசின் பட்டத்தரசி என்பதாலும், தன் மகனுக்கே சோழ மகுடம் உரியது என்று வாதிட்டவர் அவர்.

பல்லவர் அரச குமாரியும், மூத்தவளுமான திரிபுவன மாதேவிக்குப் பிறந்தவன் பராந்தகன். அவனுக்கே அரசாள உரிமை என்பதை நாட்டின் சிற்றரசர்களும், அரசியல் அதிகாரிகளும், ஏன் பேரரசர் ஆதித்த சோழருமே முடிவு செய்து பராந்தகனுக்கே இளவரசுப் பட்டம் கட்டியாகிவிட்டது.

அப்படியிருந்தும் தன் மகன் கன்னரதேவனுக்காகப் பல சூழ்ச்சிகள் செய்தார் அவர். எல்லாம் கடைசியில் முறியடிக்கப்பட்டன. அவைகளுக்குக் காரணமான தாயையும் மகனையுமே நாடு கடத்த உத்தரவிட்டார் மன்னர்.

ஆதித்த சோழர் இறந்ததும், பராந்தகர் பட்டமேற்றது பொறுக்காமல் தன் தந்தையிடம் வேண்டி மகனுடன் பெரும் படை ஒன்றையும் பராந்தகனுக்கு எதிராக அனுப்பி வைத்தார். போரும் நடந்தது. அதில் கன்னரதேவன் மடிய, படையும் தோல்வியுடன் திரும்பி விட்டது. பிறகு உறவும் அற்றுப் போய்விட்டது.

'அவர் இங்கு பட்டத்தரசியாகவே வாழ்ந்திருந்தால் இராஜமாதாவாக சோழ நாட்டில் பவனி வந்திருப்பார். ஆனால் இன்றோ நாடு கடந்து வாழ்கிறார். அது காலத்தின் கட்டாயம்போலும்!

'அவர் இப்போது எப்படி இருப்பார்? பழைய குணங்கள் எல்லாம் மாறியிருக்குமா? தான் பிறந்த இடத்திலே அதிகாரம் செலுத்த முடியாமல் அவமானத்துடன்தான் வாழ்ந்திருப்பாரோ?'

அவர்மீது பராந்தகருக்கு அனுதாபமே ஏற்பட்டது.

'எப்படிப்பட்ட பதவி, பவிசுடன் இங்கு வாழ்ந்தவர்! இன்றோ சோழப் பேரரசரைப் பார்க்க அனுமதி கேட்க வேண்டிய அவல நிலையல்லவா ஏற்பட்டு விட்டது!

'எதற்காக வருகிறார்? கூடவே இரட்டை மண்டல அரசரின் தம்பியும், அமைச்சருமான அமோகவர்ஷனும் அல்லவா வருகிறார்? என்னவாக இருக்கும்?' பட்டத்தரசி கோக்கிழானடியும், அரசி அருண்மொழி நங்கையும் அரசர் கருமண்டபத்தில் இருக்கிறார்; அதுவும் ஏதோ யோசனையில் ஆழ்ந்து இருக்கிறார் என்பதறிந்து இருவருமே அவரைக் காண அங்கே நுழைந்தனர்.

அவர் கையிலே ஓர் ஓலைச் சுருள். ஏதோ ஆழ்ந்த சிந்தனை வயப்பட்டவராகக் கண்களை மூடி அவர் இருந்தார். அதைக் கலைக்க விரும்பாமல் சற்று தயங்கினர்.

அரசிகள் அணிந்திருந்த நூபுரங்களும், கை வளையல்கள் அதிர்ந்ததாலும், அவர்கள் பூசியிருந்த வாசனைத் திரவியங்கள் பரப்பிய இனிய சுகந்தமும் அவர் சிந்தனையைக் கலைத்து விட்டன.

தன்னை நாடிவந்த அரசிகளைத் தன்னிடம் வருமாறு சைகை செய்தார். பட்டத்தரசியான கோக்கிழானடியிடம் அந்த ஓலையை நீட்டினார்.

"தேவி! சோழ இராஜமாதா இங்கு வருகிறார்களாம்?"

இதைக் கேட்டதும் இருவருமே திகைத்து விட்டனர்.

"என்ன, சோழ இராஜமாதாவா? யார் அவர்?" ஏககாலத்தில் இருவருமே கேட்டனர்.

"படித்துப் பாருங்கள்!"

அரசமாதேவி படித்துவிட்டு அந்த ஓலையை, அரசி அருண்மொழி நங்கையிடம் நீட்டினாள்.

அவளும் அதைப் படித்துவிட்டு மூத்தவளை நோக்கினாள்.

"சோழ இராஜமாதா யார் என்று இப்போது புரிந்திருக்குமே?"

அவர்களும் இருபத்தைந்தாண்டுகளுக்கு முந்தைய நிகழ்ச்சிகளை நினைவூட்டிப் பார்த்தனர்.

எத்தகைய சம்பவங்கள்? அதிர்ச்சியூட்டும் வகையில் நடந்தவை அத்தனையும் அவர்கள் இருவருக்குமே தெரிந்தவைதான்.

"இப்போது தாங்கள் என்ன செய்தி அனுப்பியுள்ளீர்கள் என்பதை நாங்கள் அறியலாமா?" அருண்மொழி நங்கை வினவினாள்.

"வரவேற்கச் சித்தமாயிருக்கிறேன் என்று!"

இதைக் கேட்டதும் இருவருமே அதிர்ந்தனர்.

"காலஞ்சென்ற பேரரசர் நாடு கடத்திய அவரைத்தானா தாங்கள் வரவேற்கப் போகிறீர்கள்? முன்பு இங்கு நடந்தவைகளை எல்லாம் பேரரசர் மறந்திருக்க மாட்டீர்கள் என்று நம்புகிறோம்!"

"உம்!"....

பராந்தகரிடம் பெருமூச்சு ஒன்று வெளிப்பட்டது.

"பாவம் அவர்! நாட்டை இழந்து, பெற்ற மகனையும் போரில் பறிகொடுத்தவர். அந்நிய மண்ணில் அவர் எத்தகைய அரச போகத்தில் வாழ்ந்தாலும் அநாதை போலத்தானே! அதை நினைத்துத்தான் வரட்டும் என சம்மதம் தெரிவித்தேன். பழையதை மறந்துவிடுவோம்!"

அதற்கு மேல் அரசிகளால் ஒன்றும் கூறத் தோன்றவில்லை.

"எதற்காக அரசரின் தம்பியையும் உடன் அழைத்து வருகிறார்?"

'உறவைப் புதுப்பிக்க' என்று ஓலையில் வேறு இருக்கிறதே?"

"ஆமாம்!"

"அதன் பொருள்?" பேரரசர் மெல்ல நகைத்தார்.

"வந்தபின் அது என்ன என்று தெரிந்து விடுமல்லவா?" அவர்களது ஆர்வத்திற்குத் தடை போட்டுவிட்டார். இருவரும் தத்தமது மாளிகைக்குத் திரும்பினர். அரசி அருண்மொழி நங்கையின் மாளிகையில் ஓர் அறையில் இளவரசிகள் வீரமா தேவியும், அநுபமாவும் இலக்கிய சர்ச்சையில் ஈடுபட்டு விவாதித்துக் கொண்டிருப்பதைக் கண்ட அவள், வாயிலில் நின்று அதை இரசித்துக் கொண்டு நின்று விட்டாள்.

'இவர்கள் எங்கெங்கு வாழப் போகின்றார்களோ? அதுவரை ஆனந்தமாக வாழ்க்கையை இன்பமாக இங்கு அனுபவிக்கட்டுமே! இலக்கிய நுகர்ச்சியில்- சர்ச்சையில் ஈடுபடட்டுமே! இதை நாம் ஏன் தடுக்க வேண்டும்?'

'இப்போது இவர்களுடைய சிறிய பாட்டியார் இளங்கோப்பிச்சியார் வருகையைக் கூறி இலக்கியச் சிந்தனையைக் குலைக்க வேண்டாம்' என்று வாயில் அருகே நின்றுவிட்டாள்.

இளவரசிகள் நாவினில் புறநானூறும் குறளும் புகுந்து விளையாடின. பாண்டிய மன்னன் அறிவுடை நம்பியின் பாடலை வீரமாதேவி பாடினாள்.

"படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும்
உடைப்பெரும் செல்வராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத்தாம் வாழும் நாளே!"

என்று பாண்டியன் அறிவுடைநம்பி பாடிய பாடலைப் பார்த்தாயா?" வீரமாதேவி வினாத் தொடுத்தாள்.

"ஆமாம். பார்த்தேன்; படித்தேன்; நீ பாடியபோது இரசித்தேன்; ஆனால்,"

"என்ன ஆனால்?"

"நீ கூற வந்ததைக் கூறி முடி. பிறகு நான் கூறுகிறேன்!"

"சரி! அவன் நல்ல அறிவு உடைய நம்பி. அவன் தான் பெற்ற இன்பத்தைப் பிறர்க்கும் காட்ட எண்ணி இப்பாடலைத் தந்துள்ளான். ஆகா!..

"குழந்தைகள் செய்யும் இன்பச் சிறு தொழில்களை எப்படி வரிசையிட்டுக் கூறுகிறான் தெரியுமா!

"செல்வ வாழ்வு என்பது தான்மட்டும் உண்பதல்ல. விருந்தினரோடு உண்ணும்போதுதான் அது இன்பம் தரும். அவ்வின்பமும் சிறுகுழந்தைகள் தம்முடைய அழகிய சிறு கை நீட்டித் தள்ளாடி கிட்ட அடி எடுத்து நடந்து வந்து தன் தந்தை உண்ணுகின்ற கலத்தில் உள்ள நெய் பெய்த உணவில் இரு கைகளையும் இட்டும், அவற்றை அள்ளித் தரையினில் சிதறி இட்டும், கூடப் பிசைந்தும், தோண்டியும், கவ்வியும், துளாவியும், தம் உடம்பெங்கும் சிதறியும் இன்பச் சிறு தொழில் புரிய, அவர்கள் சிதைத்துச் சிதறிய உணவைத் தந்தை உண்ணும்போது - உண்டாகும்போது மேலும் இன்பம் பெரிதாகும் என்று தான் அனுபவித்த அழகிய சம்பவத்தை எவ்வளவு அழகாக - அற்புதமாக இந்தப் பாடலில் அரசன் விவரித்துள்ளான் பார்த்தாயா?

"குழந்தையின் மழலைச் சொல்லும், செய்யும் சிறு குறும்புச் செயலும் கண்ணுக்கு மட்டுமல்ல, செவிக்கும் ஏன் உடம்புக்கும் இன்பம் தந்து அறிவை மயக்குகின்றது!

"இப்படிப்பட்ட மக்களைப் பெறாதவர்க்கு வாழ்க்கையில் முடிக்கக் கூடிய - சாதிக்கக் கூடிய பொருளே இல்லை என எடுத்துக்

காட்டவே அவன் இப்பாட்டைப் பாடியுள்ளான்! நீ என்ன நினைக்கிறாய் இதைப்பற்றி?"

அவள் கூறும்வரை பொறுமையாகக் கேட்ட இளையவள் கூறத் தொடங்கினாள்.

"ஆகா! அருமைதான்! மன்னன் அல்லவா? அதனால் அவன் நெய்யுடை அடிசிலைப்பற்றிப் பாடித் தன் செல்வச் செருக்கைப் புலப்படுத்தியுள்ளான். இதைவிட மக்கள் மனத்தில் வாழும் வள்ளுவன் பாடியிருக்கிறானே? அதுவும் இரண்டே வரிகளில்!

"அமிழ்தினும் ஆற்ற இனிதே தம்மக்கள்

சிறுகை அளாவிய கூழ்!"

"கருத்தைக் கேள்! தேவர்கள் கடைந்தெடுத்த அமுதம் எப்படிப்பட்டது? அதைவிட தம் மக்கள் அளாவிய கூழ் இருக்கிறதே அது இனிமையானது என்று ஒரு தந்தை நிலையில் அனுபவித்துப் பாடியுள்ளானே! இதைவிட மன்னன் பாடிய பாடல் அருமையோ? அவனோ அரசன்! தன் செல்வச் செருக்கைப் பாடலில் காட்டினான். இவனோ மக்கள் கவிஞன். இரண்டே வரிகளில் தான் உணர்ந்த இன்பத்தை எவ்வளவு அழகாக நமக்கு உணர்த்திப் பாடியுள்ளான். அவன் குடித்த கூழ்கூட நமக்கும் அமுதமாகப் படுகிறது! ஆகா!"

அநுபமா கண்களை மூடிக் கற்பனையில் இலயித்தாள்! வீரமாதேவி வெடித்தாள்!

"நான் ஒன்று கூறினால் எதிர்ப் பாட்டுப் பாட நன்றாகக் கற்று வைத்துள்ளாய் நீ!"

"உள்ளதைத்தானே நான் உரைத்தேன்!"

வீரமாதேவி 'உம்' என்று முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்ளவே, அவள் தோள் பற்றிக் 'கலகல'வெனச் சிரித்தவாறே அநுபமா அவள் முகம் திருப்பினாள்.

அந்நேரமே அருண்மொழிநங்கை அங்கேயே நிற்காமல் உள்ளே நுழைந்தாள்!

"உங்கள் இலக்கியச் சர்ச்சை முடிந்ததா? இன்னும் இருக்கிறதா?"

"இன்னும் தொடரலாம். ஆனால் அது என் அக்காளுக்கு சங்கடத்தை அல்லவா தருகிறது?"

"என்ன?"

"அக்காளுக்குத் தான் கூறுவதே சரி என்று மற்றவர்களும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றால் எப்படி?"

"நீங்கள் ஏன் சண்டை போட்டுக் கொள்கிறீர்கள்? இரு புலவர்களும் தாங்கள் அனுபவித்த நிலையில் அந்த அனுபவத்தை அப்படியே பாடி நமக்குப் பாடலாகத் தந்துள்ளார்கள்! இருவர் நிலையிலும் அவை இரண்டும் சரியே!"

"நீங்கள் எங்கள் விவாதத்தைக் கேட்டுக் கொண்டுதான் இருந்தீர்களா?"

"ஆமாம்! உங்கள் சர்ச்சையில் குறுக்கிட விரும்பாத தால்தான் ஒதுங்கி நின்றேன்."

"சரி! தாங்கள் வந்த விவரம்பற்றி நாங்கள் அறியலாமா?"

"உங்கள் சிறிய பாட்டியார் சோழ இராஜமாதா இங்கு வர இருக்கிறார்கள் தெரியுமா?"

"சோழ இராஜமாதவா? யார் அவர்?" * இருபத்தைந்தாண்டு களுக்கு முன் நடைபெற்ற அவளுக்குத் தெரிந்த சம்பவங்களை அரசி அருண்மொழி நங்கை விவரித்தாள். அதைக் கேட்ட இளவரசிகள் அதிர்ந்தனர்.

"இப்படியும் ஒரு பெண்மகளா?"

"அவர்களா இங்கு வருகிறார்கள்?"

"ஆமாம்!"



# 19. நவரத்தின நகைகள்

இளங்கோப்பிச்சி தஞ்சை வருகிறார் என்ற தகவல் கேட்டதும், இரு இளவரசிகளுமே அதிர்ச்சியடைந்தனர்.

அவரது கடந்த கால வரலாற்றைக் கேட்டறிந்ததே அந்த அதிர்ச்சிக்குக் காரணம்.

"அவர்கள் எதற்காக வருகிறார்கள்?" அருண்மொழி நங்கையின் மகள் அநுபமா கேட்டாள்.

"உறவைப் புதுப்பிக்க!"

"அப்படி என்றால்?"

"வந்த பிறகு தெரியுமல்லவா?"

"அவர்கள் இங்கு இருந்தபோது எப்படி இருப்பார்கள்?"

"அப்போதே அவர் அழகிதான்! அவரது இளம் வயதில் நம் மன்னர் ஆதித்த சோழரையே மயக்கி மணந்தவர் அல்லவா? அப்படியானால் இளம்வயதில் எப்படி இருந்திருப்பார்கள் என்பதைக் கற்பனை செய்து கொள்ளுங்கள்!"

"இன்னும் பேரழகியாக இருந்திருப்பார்கள்!"

"இப்போது எப்படியோ?"

"உம்!... எதற்கு வருகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள ஆவலாக இருக்கிறது!"

"உடன் அமைச்சர் பெருமானும் வருகிறாராம்! இருவரும் நம்மிடம் பெண் கேட்டு வருகிறார்களோ என்னவோ?"

"பெண் கேட்டா?" வீரமாதேவி அதிர்ச்சியடைந்தாள்!

"இருக்கலாம்! இராஷ்டிர மன்னருக்கு அழகான இளவரசன் ஒருவர் இருப்பதாக நாங்களும் மன்னர்பிரான் மூலம் கேட்டிருக் கிறோம்!" அநுபமா அதற்கு அலட்சியமாகவே இப்படிக் கூறினாள்.

"வரும்போது தெரிந்து கொண்டால் போகிறது!"

ஆனால் வீரமாதேவிக்கோ அருண்மொழிநங்கை கூறிய வார்த்தைகள் அவள் அடிவயிற்றையும் சேர்த்துக் கலக்கியது. எழுந்தவள் பேரரசியின் மாளிகைக்குச் சென்றாள் ஒன்றும் கூறாமலே. பேரரசியின் மகள் அவள். அவள் போவதைப் பார்த்து அரசியும், அனுபமாவும் திகைத்து நின்றனர்.

இரட்டை மண்டலத்திலிருந்து ஓலை வந்ததும் இராஜமாதா இளங்கோப்பிச்சி வரப் போவதும், அரண்மனை முழுவதும் அச்செய்தி பரவி அதுவே எங்கும் பேச்சாக இருந்தது.

அவர் காலத்தில் அவருக்கு அதிகாரிச்சியாக இருந்தவளும், பேரரசி கோக்கிழானடிக்கு அதிகாரிச்சியாகப் பணியாற்றி வந்தவளுமான கடம்பாவைச் சுற்றிப் பணிப் பெண்களும் மற்றவர்களும் அவரைப் பற்றியே கேள்விகள் கேட்டு அவளைத் துளைத்தெடுத்து விட்டனர்.

அவளும் அலுக்காமல் சலிக்காமல் அக்காலத்தில் நடந்த சம்பவங்களை எல்லாருக்கும் விளக்கமாகக் கூறிவிட்டாள்.

அதனால் எல்லாரும் அவரைப் பார்ப்பதற்கும் வரவேற்பதற்கும் ஆர்வம் கொண்டிருந்தனர்.

பேரரசர் பராந்தகரின் முதல், இரண்டு மனைவியரான கோக்கிழானடிக்கும், அருண்மொழி நங்கைக்கும் மட்டுமே இளங்கோப்பிச்சியைத் தெரியும். மற்றவர்களுக்கு அவரைப்பற்றி அணுவளவும் தெரியாது.

அவர்களும்கூட கடம்பாவை வரவழைத்து ஆதித்தர் காலத்து விவரங்களைத் தெரிந்து கொண்டனர்.

முன்பு ஒற்றர் படைத் தலைவனாக விளங்கிய விக்கி யண்ணன் என்ற விக்கிரமனே கடம்பாவின் கணவன் .

சில ஆண்டுகளுக்கு முன்புதான் அவன் மரணமடைந்தான். கடம்பாவும் தன் பணியை விட்டுவிட்டு விலகித் தனியே வாழ்ந்து வந்தாள்.

அவள் பெற்ற பிள்ளைதான் பொன்பெருமாள். தந்தையின் பணியைச் செவ்வனே செய்து வந்தான்.

கடம்பாவும் அடிக்கடி அரண்மனைக்குச் சென்று வருவாள். தன் காலத்தில் கடமையாற்றியபடி நடக்க பணிப்பெண்களுக்கும் அரசியரின் அணுக்கப் பெண்டிருக்கும் அறிவுரையும் கூறி வருவாள்.

அவள் பேரரசியின் அபிமானம் பெற்றவள். அதனால் அவளுக்கு அந்தப்புரம் சென்று வர எந்தத் தடையும் இருந்ததில்லை.

அவளையே வரவழைத்து இளவரசிகள் இருவரும் அவளுடைய அனுபவங்களைக் கேட்டு வியப்படைந்தனர்.

தங்கள் தந்தையின் வளர்ப்புத் தாயாகவும் அறங்காவல்துறைப் பெருந்தரத்து அதிகாரிச்சியாகவும் இருந்த சிநேகவல்லிபற்றியும் கேட்டு அறிந்தவர்கள், அவள் ஆதித்த சோழர்மேல் கொண்டிருந்த காதல், பக்தி, விசுவாசம், அவர் மரணமடையும்போதும் கூடவே இருந்த உயிர் துறந்த அந்த மாதரசிபற்றியும் அவள் கூறக் கேட்டு இருவரும் வியப்படைந்தனர்!

அப்படிப்பட்ட ஒரு பெண்ணா பேரரசரை வளர்த்தவள் என்று கேட்டறிந்ததோடு, இளங்கோப்பிச்சி திட்டமிடும் ஒவ்வொரு நடவடிக்கையையும் எப்படி அறிந்து அவற்றை எல்லாம் தகர்த் தெறிந்தாள் என்பதையும் கேட்டு அவர்கள் மூக்கின்மேல் விரல் வைத்தனர்!

பேரரசரிடமும் தங்கள் அன்னையரிடமும் அவள்பற்றிக் கேட்டறியவும் ஆவல் கொண்டனர்.

எல்லோரும் எதிர்பார்த்த இளங்கோப்பிச்சியும், அமோக வர்ஷரும் அவர்களது பரிவாரமும் தஞ்சை அரண்மனையை அடைந்து விட்டனர்.

பேரரசர் பராந்தகரும் அரண்மனை வாயிலில் நின்று தன் சிற்றன்னையான இளங்கோப்பிச்சியையும், அமோகவர்ஷனையும் இன்முகம் கொண்டு வரவேற்றார்.

அப்போது அங்கே அரசியல் அதிகாரிகளும் பழுவேட்டரையர், பொடும்பாளூர் இளவரசன் விக்கிரமன் முதலானோரும் அரசர் பெருமானுடன் அவர்களை வரவேற்கக் கூடி நின்றனர்.

தன் சிறிய தாயாரைப் பேரரசர் இரு கை கூப்பி வணங்கினார். இருவரது கண்களும் கலங்கிவிட்டன. இக்காட்சியைக் கண்டு எல்லோருமே பிரமித்து நின்றனர்.

"அரசே, நலமா?"

"தாயே! தாங்களும் நலமா?"

'எப்படிப்பட்ட பேரழகி! சகல அதிகாரங்களும் பெற்று அரண்மனையை வலம் வந்தவர். இன்றோ அனாதைபோல, அண்டை நாட்டில் அடைக்கலமாகவன்றோ வாழவேண்டிய நிர்ப்பந்தம்!'

மன்னர் மனம் கலங்கியது.

'அவர் மட்டும் பேரரசியாகவே இருந்து சகல சம்பிர தாயங்களையும் மதித்திருந்தால், இந்த நாடே போற்றும் இராஜமாதாவாக அல்லவா இன்று பவனி வந்திருப்பார்! பெரிய பிராட்டி என்றும் பெயர் எடுத்திருப்பார்!'

இரு அரசிகளும், இளவரசிகளும் வந்து வணங்கினர்.

இளவரசர்கள் இராசாதித்தனும், அரிகுலகேசரியும் வடதிசைக் காவல் படைமுகாமில் இருந்தார்கள். கண்டராதித்தனோ தங்கள் பாட்டன் ஆதித்தசோழர் கட்டுவித்த கோவில்களைக் கண்டு வழிபடச் சென்று விட்டான். இளையவன் உத்தமசீலியோ மற்ற அரசிமார்களுடன் பழையாறையில் தங்கியிருந்தான். எனவே, இளவரசர்களை அவர் பார்க்க இயலவில்லை.

இளவரசிகளுக்கோ அவரைக் கண்டு பிரமிப்பு அடங்கவில்லை.

'இந்த வயதிலும் இவ்வளவு அழகியாக இருக்கிறாரே? இளவயதில் தங்கள் பாட்டனைக் காதலித்தது உண்மையானால் அவர் பாக்கியம் செய்தவரே!'

'இவரா நம் தந்தைக்கு எதிராகச் சதி செய்தவர்? இவரா நாடு கடத்தப்பட்ட பேரரசி?'

அரசி அருண்மொழி நங்கைக்குப் பேரரசர் கண்ஜாடை காட்ட அவள் இளங்கோப்பிச்சியை அழைத்துக் கொண்டு அரண்மனைப் பெண்டிர் உடன்வர உள்ளே நுழைந்தாள்.

பராந்தகர் விக்கிரமனைப் பார்த்ததும் அவர் மனம் அறிந்து அவர்முன் வணங்கி நின்றான்.

"இராஷ்டிரக்கூடத்து அமைச்சர் பெருமானை நம் விருந்தினர் மாளிகையில் சகல வசதிகளுடன் தங்க வையுங்கள். கூட இருந்து உதவிகளையும் செய்யவும்."

விக்கிரமன் தலையசைத்தான்.

அரண்மனைப் பணிப்பெண்கள் எல்லோரும் பய பக்தியுடனும், பிரமிப்புடனும் பார்த்து இளங்கோப்பிச்சியை வணங்கினர்.

அவர் வந்த செய்தியறிந்த கடம்பாவும் வந்து வணங்கினாள். அவளைக் கண்டதும் கட்டியணைத்துக் கொண்டு அவர் கண் கலங்கினார்.

அவர்கள் எல்லோரும் மகாராணி கோக்கிழனடி மாளிகைக்குச் சென்றனர். அது முன்னர் அவர் வாழ்ந்த இராஜமாளிகையல்லவா?

வியப்புடன் அந்த மாளிகையைச் சுற்றி நோட்டமிட்டாள். புதிய மெருகுடன் அது விளங்கியது.

பணிப்பெண்கள் ரகசியக் குரலில், "இதுதான் இவர் வாழ்ந்த மாளிகைபோல!" என்று தங்களுக்குள் பேசிக் கொண்டு கடம்பாவை நோக்கினார். அவளும் 'ஆமாம்' என்பதுபோலத் தலையசைத்தாள்.

அவருக்கு வேண்டிய வசதிகள் அனைத்தையும் செய்யக் கோக்கிழானடி உத்தரவிட்டாள். அவர்களும் சுறுசுறுப்புடன் இயங்கினர்.

"கண்மணிகளே! நீங்கள் நலமா?" இரு அரசிகளையும் கேட்டார்.

"நலமாகவே இருக்கிறோம்!"

இருவரும் ஏககாலத்தில் கூறினர்.

அருண்மொழி நங்கை, பக்கத்தில் நின்றுகொண்டிருந்த இரு இளவர்சிகளையும் அவர்முன் நிறுத்தினாள்.

"இவர்கள் நம் இளவரசிகளா!"

"நம் இளவரசிகளா?"

இளங்கோப்பிச்சி முகத்தில் வியப்பு, மகிழ்ச்சி! அவர்களது அழகு உருவங்களை அளவெடுத்தார்!

"உங்கள் பெயர்கள் என்ன?"

அநுபமாவே கூறத் தொடங்கினாள்.

"என் தமக்கை இவள்! பெயர் வீரமாதேவி! என் பெயர் அநுபமா!"

"இளவரசர்கள் எங்கே? காணவில்லையே?"

"இருவர் வடதிசை எல்லைக் காவற் படைமுகாமில் தங்கியுள்ளனர். ஒருவன் பாட்டன் கட்டிய கோயில்களில் தரிசனம் செய்யப் புறப்பட்டுச் சென்றுள்ளான். இளையவன் மற்ற நான்கு அன்னையருடன் பழையாறையில் உள்ளான்!"

அருண்மொழி நங்கையே பதில் அளித்தாள்!

இளவரசிகள் இருவரும் அவரிடம் வணங்கி விடை பெற்றுச் சென்றுவிட்டனர்.

"பக்கத்தில் வந்து அமருங்களேன்!"

அரசிகள் இருவரையும் அழைத்ததும், அவர்கள் பவ்யமுடன் அவர் அருகில் அமர்ந்தனர். மூவர் உள்ளத்திலும் பழைய சம்பவங்கள் நினைவுக்கு வர, சற்று நேரம் அங்கு அமைதி நிலவியது.

இளங்கோப்பிச்சியுடன் வந்த பணிப் பெண் அங்கு ஓரத்தில் நின்று கொண்டிருந்தாள். அவளை நோக்கியவுடன் நினைவுக்கு வந்தவராக அவளைப் பக்கம் அழைத்தார்.

"அந்தப் பேழையை இங்கு முன் வை!" அவள் எடுத்த வந்து, இளங்கோப்பிச்சி முன் வைத்தாள்.

என்னவோ ஏதோ என்று இரு அரசிகளும் வைத்த கண் வாங்காமல் அந்தப் பேழையை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தனர்.

இராஜமாதா மெல்ல அந்தப் பேழையைத் திறந்தாள். அதில் அவருடைய ஆடை அணிகலன்கள் இருந்தன. மேலே ஒரு சுருள் பெட்டி ஒன்றும் இருந்தது.

"இதோ இந்த அணிகலன்கள் பேரரசர் எனக்கு அணிவித்தவை. இனி இவை நம் இளவரசிகள் இருவருக்கும் சொந்தமாகட்டும்!"

மூவர் கண்களும் கலங்கின. ஆதித்த சோழர் ஆசையுடன் அணிவித்த அழகழகான நவரத்தினங்களாலான அணிகலன்கள் அவை. ஆதித்தர் இறந்த செய்தி கேட்டதும் அவர் பூவிழந்து, பொட்டிழந்து அணிகலன்கள் அணிவதையும் இழந்துவிட்டார்.

இவைகள் இனி யாருக்குச் சொந்தம்? அவரது பேத்திகளுக்காவது போய்ச் சேரட்டும் என்றே அவர் மானியகோட நகரிலிருந்து புறப்படும்போது மறக்காமல் எடுத்து வைத்துக் கொண்டார்.

நாடு கடத்தப்பட்ட பேரரசி தங்கள் பெண் குழந்தைகளுக்கு ஞாபகத்துடன் கொண்டு வந்த சீதனப் பொருட்களைக் கண்டு இரு அரசிகளுக்கும் ஆனந்தக் கண்ணீர் பெருகாமல் இருக்குமா?





# 20. வீரமாதேவியின் கலக்கம்

இளங்கோப்பிச்சி தன் பணிப்பெண்ணுக்குச் சைகை காட்ட, அவள் நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட பதக்கங்கள், பாசமாலை, இரத்தின வளையல்கள் என அத்தனை அணிகலன்களையும் மெதுவாகப் பேழையிலிருந்து எடுத்து அடுத்துள்ள பீடத்தில் பரப்பி வைத்தாள்.

அடுத்து அதில் இருந்த சுருள் பெட்டியை அவர் எடுத்தார். அதைத் திறந்து அதற்குள் இருந்த ஒரு துணிச் சுருளை மெதுவாக எடுத்துப் பிரித்தார்.

அதில் இராஷ்டிரகூட இளவரசன் கோவிந்தனுடைய உருவம் ஓவியமாகத் தீட்டப்பட்டிருந்தது.

"இதைப் பார்த்தீர்களா? இவன்தான் இரட்டை மண்டல இளவரசன். வருங்கால மன்னன். பெயர் கோவிந்தன்.

"இவனுக்கு நம் சோழ இளவரசியை மணம் முடித்து வைக்கலாம் என்ற எண்ணத்தில் நம் பேரரசரைப் பார்க்க நாங்கள் புறப்பட்டு வந்தோம். இந்த ஓவியத்தைப் பாருங்கள்!"

அந்த ஓவியச் சுருளை அரசிகளிடம் நீட்டினார். இருவரும் ஏககாலத்தில் கை நீட்டி அதை வாங்கிப் பார்த்தனர்.

"ஆண் அழகன் அவன்! ஓவியத்தில் வரையப்பட்டிருப்பதை விட நேரில் இன்னும் அழகாக இருப்பான். இவனை ஒத்த அழகன் உலகில் வேறு யாரும் இருக்க முடியாது! உயர்த்திப் பேசுகிறேன் என்று எண்ணி விடாதீர்கள்!

"மன்மதனுக்கு ஒப்பானவன் என்றும், முருகனுடைய அழகுக்கு ஈடானவன் என்றும் மக்கள் பேசிக் கொள்கிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!"

அரசிகள் வியப்புடன் அந்த ஓவியச் சுருளில் பார்வையைப் பதித்தனர். அவர் அவனைப்பற்றி அப்படிக் கூறியதில் தவறு ஒன்றும் இல்லை. உண்மைதான். அக்காலத்தில் அவனைப் போன்ற ஆண் அழகன் உலகில் யாருமில்லையாம்! ஆனால் அவன் குணத்தைப்பற்றி அவர் வாய் திறக்கவே இல்லை.

அரசிகளுக்கு, அவனை வீரமாதேவிக்கு மாப்பிள்ளை யாக்கலாம் - அவனுக்கே மணம் முடிக்கலாம் என்ற எண்ணம் தோன்றுமளவுக்கு அவர்களிடம் இளங்கோப்பிச்சி புகழ்ந்துரைத்தார்.

"இளவரசன் ஓவியம் பார்த்தீர்களே? எப்படி? நம் இளவரசிக்கு ஏற்ற மணமகன்தானே ?"

"ஆமாம்!"

அரசிகள் இருவரும் தலையசைத்தனர்.

"நம் பேரரசரிடம் காட்டலாமா?"

"காட்டலாம்!"

ஆனால், அருண்மொழிநங்கைக்கு ஒரு நப்பாசை! பழுவேட்டரையர் கண்டன்அமுதன் அவளுடைய அண்ணன். அவர் மகனுக்கும், கொடும்பாளூர் இளவரசன் விக்கிரமனுக்கும் இந்த இரு இளவரசிகளையும் மணம் முடித்து வைத்துவிட வேண்டும் என்று ஆரம்பத்திலேயே எண்ணிக் கொண்டிருந்தவள் அவள்.

திடுதிப்பென்று இப்படி ஒரு திருமணப் பேச்சு வந்தால் இதைத் திசை திருப்புவது எப்படி?

இரு இளவரசிகளையும் அவள்தான் பாசமுடன் வளர்த்தவள்! இருவரையும் இங்கேயே மணம் முடித்துப் பக்கத்தில் வைத்துக் கொள்ள இருக்காதா அவளுக்கு ஆசை? என்ன செய்வது?

எனவே மாற்று உபாயத்தைக் கடைப்பிடிக்க அவள் முடிவு செய்தாள் !

"அருண்மொழி, என்ன யோசனை?"

இளங்கோப்பிச்சி கேட்டார்.

"முதலில் நம் இளவரசிகளிடம் இந்த ஓவியத்தைக் காட்டி, மாப்பிள்ளை பிடித்திருக்கிறதா என்று கேட்போமே?"

ஆனால் மூத்தவளும், பெற்றவளுமான பேரரசி கோக்கிழானடி இதற்கு மறுப்புக் கூறும் விதமாகக் கூறத் தொடங்கினாள்.

"இந்த இளவரசனுக்கு என்ன குறைச்சல்? நல்ல அழகன்! கட்டிக் கொள்ள நம் இளவரசிக்குக் கசக்கவா செய்யும்? உம்! இருந்தாலும் எதற்கும் அவர்களிடம் முதலில் அனுப்பித்தான் பார்ப்போமே?"

இப்படிக் கூறி அவள் முடித்ததால் அது அருண்மொழி நங்கையைச் சற்று மன நிம்மதியடையச் செய்தது. அந்தப் படச் சுருளைக் கையில் வாங்கிய அவள் சுருட்டியவாறு தன் பணிப்பெண்ணை அழைத்தாள்.

அவள் ஓடி வந்து வணங்கி நின்றாள்.

"இதை நம் மாளிகையில் இருக்கும் இளவரசிகளிடம் காட்டு. இவர்தான் இராஷ்டிரகூட இளவரசர். நம் மூத்த இளவரசிக்கு மாப்பிள்ளையாக்க எண்ணம் கொண்ட இராஜமாதா இந்த ஓவியத்தை எடுத்து வந்துள்ளதாகக் கூறு. பிடித்திருக்கிறதா என்று பார்ப்போம்!"

அருண்மொழிநங்கை அந்த ஓவியச் சுருளை இளவரசிகள் பார்வைக்கு அனுப்பி வைத்தாள்.

XXXXXXXXX

அமோகவர்ஷனை விருந்தினர் மாளிகைக்கு அழைத்துச் சென்ற விக்கிரமன் அவருக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்யுமாறு அங்கிருந்த பணியாட்களுக்கு உத்தரவிட்டான்.

"இளைஞனே! நீ யார் என்று அறியலாமா?"

"பெருமானே! கொடும்பாளூர் இளவரசன் நான். பெயர் விக்கிரமன். தென்திசைப் படைத் தலைவர்களில் ஒருவன்."

"அப்படியா? பூதிமாதவி உங்கள் குடும்பத்தில் பிறந்த இளவரசி தானே?"

"ஆமாம் ! என் தந்தையுடன் பிறந்தவர்!"

இருவரும் சற்று உணர்ச்சிக் கடலில் தத்தளிக்கலாயினர். பூதிமாதவி தியாகத்தின் திரு உருவம்! அவளை இளங்கோப்பிச்சியின் மகனான இளவரசன் கன்னதேவனுக்கு மணமுடித்துக் கொடுத்திருந்தனர்.

மன்னர் ஆதித்தசோழரைக் காப்பதற்காகத் தன் இன்னுயிரை இழந்தவள். அதுவும் கணவன் கையினாலேதான்! தன் தந்தைமூலம் அவன் அறிந்த கதை அது!

இந்த விவரம் எல்லாம் அமோகவர்ஷனும் அறிந்ததால் அவனை அப்படிக் கேட்டார்.

"இளைஞனே! சோழ நாட்டிற்காக உங்கள் சிற்றரசு அரிய சேவை புரிந்து வருகிறது என்பதை நான் அறிவேன். உங்கள் பரம்பரையே இந்த நாட்டுக்காக இன்னுயிர் ஈந்துள்ளதை நான் அறிந்தும் இருக்கிறேன். தொடரட்டும்!"

*அமோகவர்ஷன் அவனுடைய குடும்பத்தை வானளாவப் புகழ்ந்தார். அதைக் கேட்டு விக்கிரமன் புகழ்மழையில் நனைந்து நெளிந்தான். பெருமிதமும் கொண்டான்.

அடுத்து அவர் கூறிய விவரம்தான் அவனை அதிர்ச்சியடையச் செய்துவிட்டது.

"நாங்கள் எதற்காக இங்கு விஜயம் செய்திருக்கிறோம் என்பது உனக்குத் தெரியுமா?"

"தெரியாது!"

"எங்கள் இளவரசனுக்கு சோழ இளவரசியைப் பெண் கேட்டு வந்துள்ளோம்."

வந்துள்ள காரணத்தைப் போட்டு உடைத்தால் அவன் அதிர்ச்சியடையாமல் என்ன செய்வான்?

"சிநேகவல்லியில் காண்க."

அப்போது, வீரமாதேவியைத் தான் கைப்பிடிக்க நினைப்பது எட்டாக் கனியா?

இளவரசி நம்மை விரும்புகிறாள். போரில் வெ ற்றி பெற்ற சாதனைக்குப் பரிசாக அவளை மணமுடித்துத் தருமாறு மன்னரை வேண்டலாம் என்று எதிர்பார்த்துக் காத்திருந்தது எல்லா ம் வீணா?

அவன் முகபாவத்தைக் கண்ட அவர் ஒருவாறு ஊகித்தறிந்தார்!

'இளவரசியை மணம் முடித்துக் கொள்ள இவன் விரும்புகிறான் போல!'

"வீரனே! என்ன திகைத்து விட்டாய்? நாங்கள் வந்தது உனக்கு அதிர்ச்சியாக உள்ளதா?"

"இல்லை பெருமானே! மன்னரே உங்களை மனமுவந்து வரவேற்றாரே! எனக்கும் மகிழ்ச்சிதான்!"

தன் மனக் கிளர்ச்சியை அவன் மறைக்க வேண்டியதாயிற்று!

xxxxxxxxxxx

இராஷ்டிரகூட இளவரசன் கோவிந்தனது ஓவியச் சுருளைப் பணிப்பெண் அருண்மொழி நங்கையின் மாளிகைக்கு எடுத்துச் சென்றவள் அதை இரு இளவரசிகளிடமும் சமர்ப்பித்தாள்.

அநுபமாவே அதை வாங்கிப் பிரித்துப் பார்த்தவள் அதில் ஓர் ஆடவன் ஓவியம் உள்ளதை அறிந்து வியந்தாள்!

"என்ன இது? யாருடைய ஓவியம்? எதற்கு இதை இங்கு கொண்டு வந்தாய்? யார் அனுப்பியது?"

அவள் படபடவெனப் பொரிந்தாள். வீரமாதேவியும் அதனை வாங்கிப் பார்த்தாள்.

"இதை அரசியார்தான் தங்களிடம் காட்டச் சொல்லி என்னிடம் கொடுத்து அனுப்பினார்கள். இந்த ஓவியச் சுருளை நம் இராஜமாதாதான் கொண்டு வந்தார்களாம். இரட்டை மண்டல இராஜகுமாரராம்! இவருக்கே நம் இளவரசியைப் பெண் கேட்டு வந்துள்ளார்களாம்!"

"என்ன, பெண் கேட்டா?"

வீரமாதேவி அதிர்ச்சியுடன் கேட்டாள்!

"ஆமாம்!"

அநுபமாவுக்குச் சற்று ஆறுதல், 'தனக்கு வழி ஒன்று திறந்து விடப்படுகிறது!'

'அது என்ன வழி?'

கொடும்பாளூர் இளவரசனை மணப்பதற்கு அவளுக்கும் ஆசை. வீரமாதேவி அவனை விரும்புவதால் தன் ஆசைக்கு அணை போட்டிருந்தாள்.

இப்போது வீரமாதேவியைப் பெண் கேட்டு வந்துள்ளனர். அது முடிவாகி விட்டால் தனக்கு வழி பிறந்தது மாதிரிதானே! உள்ளப் பூரிப்பு!

என்றாலும் அதை அவள் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. ஆனால் இதைக் கேட்டதும் வீரமாதேவி அப்படியே ஆடிப் போய் விட்டாள்!

'தான் ஆசைப்பட்டபடி கொடும்பாளூர் இளவரசனை மணக்க முடியாதோ?'

'இதை எப்படித் தடுப்பது? முதலில் யாரைக் கொண்டு தன் மனத்தில் உள்ள ஆசையை வெளியிடுவது?'

கண்கள் கலங்க ஆரம்பித்துவிட்டன. இதுநாள்வரை துன்பம் என்பதையே அறியாத அவள் மனத்தில் கவலை குடி கொண்டு விட்டது! கண்ணீரும் வெளிவர ஆரம்பித்துவிட்டது!

அதைக் கண்ட அநுபமா பதறிவிட்டாள்!

"அக்கா, ஏன் நீ அழுகிறாய்? உனக்கு என்ன வந்தது?"

தங்கையை ஏறிட்டாள்.

"உனக்குத் தெரியாதா?"

பொங்கிவரும் அழுகையைக் கட்டுப்படுத்த முயன்று, பற்களைக் கடித்துக் கேவலை விழுங்க முயற்சி செய்தாள்.

"நான் கொடும்பாளூர் இளவரசரை விரும்புவது உனக்குத் தெரியுமல்லவா?"

"ஆமாம்!"

அநுபமா தலை ஆட்டினாள்.

"பிறகு இந்தச் செய்தி எனக்குத் தேனாகவா இனிக்கும்?"

இதற்கு அநுபமாவால் பதில் ஒன்றும் சொல்ல இயலவில்லை. மூத்தவள் கட்டிலில் சாய்ந்து குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்து விட்டாள்!

அதைக் கண்டு அநுபமாவுக்கு இரக்கமே மேலிட்டது. மெதுவாக அவள் தோளைத் தட்டிக் கொடுத்து அவள் முகத்தைத் திருப்பினாள்.

"அன்னையிடம் கூறிப் பார்ப்போம். அதைவிட நீ ஒன்று செய்ய வேண்டும்?"

"என்ன?"

"முதலில் நீ விரும்பும் இளவரசர் உன்னை மணக்க விருப்பமா என்பதை அறிய வேண்டாமா?"

கேள்வி கேட்ட அவள் ஓர் உபாயமும் கூறினாள்!



# 21. மடல் வரைந்தாள்!

"நீ விரும்பும் கொடும்பாளூர் இளவரசர் உன்னை மணக்க விரும்புகிறாரா என்பதை அறியவேண்டாமா?"

இதைக் கேட்ட வீரமாதேவியின் உள்ளம் மகிழ்ந்தது. கண்ணீரைத் துடைத்துக் கொண்டு தங்கையை ஏறிட்டாள்.

"ஆமாம் !"

"என்ன செய்யப் போகிறாய்?"

"என்ன செய்யலாம்?"

"மடல் ஒன்று எழுது. உத்தியான வனத்தில் உன்னைச் சந்திக்கக் கேட்டுக் கொள். மடலை உன் பணிப்பெண் மூலம் கொடுத்தனுப்பு."

மகிழ்ச்சியுடன் தலையாட்டினாள்.

"அதுவும் சரிதான்!"

உடனே எழுந்தாள்; தன் மாளிகைக்கு விரைந்தாள்; தன் அறைக்குள் மெதுவாகப் புகுந்தாள்.

காரணம், அடுத்திருந்த மண்டபத்தில்தானே அரசிகள் இருவரும் இராஜமாதா இளங்கோப்பிச்சிபுடன் உரையாடிக் கொண்டிருந்தனர்!

வேகமாக மடல் எழுதினாள். அதை எழுதி முடித்தபின், தன் பணிப்பெண்ணை மெல்ல அழைத்தாள்.

"இதைக் கொண்டுபோய்க் கொடும்பாளூர் இளவரசர் மாளிகை சென்று அவரிடம் நேரில் சமர்ப்பித்துவிடு."

அவளும் பணிந்து வாங்கிச் சென்று விட்டாள்.

மனத்திற்கு ஓர் ஆறுதல்.

மண்டபத்தில் உரையாடிக் கொண்டிருந்த அரசி அருண்மொழிநங்கை. இளங்கோப்பிச்சியைத் தன்னுடைய மாளிகைக்கு வரும்படி அழைத்தாள்.

அவரும் ஒப்புக்கொள்ளவே இருவரும் அங்கு சென்றனர்.

"வீரமாதேவி அங்குதான் இருப்பாள். அவளிடம் நேரே பேசி அவள் சம்மதத்தைப் பெற்றுவிடலாம்!"

அவள் நம்பினாள்.

ஆனால் அவளோ அங்கில்லை. முன்னமே பேரரசி மாளிகைக்கு அல்லவா மடல் எழுதச் சென்று விட்டாள்!

அநுபமாவைப் பார்த்தார்.

"குழந்தாய், இங்கு வா!"

பவ்யத்துடன் அவள் வந்து வணங்கினாள்.

"நீ அருண்மொழிநங்கையின் புதல்வியா?"

"ஆமாம் !"

அருண்மொழிநங்கை அதற்குள் இராஜமாதா நீராடுவதற்கு ஏற்பாடு செய்துவிட்டாள்.

பணிப்பெண் வந்து வணங்கினாள்.

"நீராடுவதற்கு எல்லாம் தயார் நிலையில் உள்ளது!"

உடன் வந்த பணிப்பெண்ணோடு அவர் குளிக்கச் சென்றுவிட்டார். அவர் சென்றபின் அநுபமா மெல்லிய குரலில் தன் அன்னையிடம் உரையாட ஆரம்பித்தாள்.

"அக்காளுக்கு இது பிடிக்கவில்லை!"

"என்ன? பிடிக்கவில்லையா?"

"ஆமாம்!"

"அப்போ, உனக்குச் சம்மதமா?"

சிரித்தபடிக் கேட்டாள்!

"ஊஹூம்!.... அக்காவுக்கே பிடிக்காதபோது எனக்கு மட்டும் பிடிக்குமாக்கும்!"

இருவரும் மெல்ல நகைத்துக் கொண்டனர்.

"பேரரசிடம் பேசுவோம் ! அவர் என்ன சொல்கிறார் என்று பார்ப்போம் !"

"இராஜமாதாவே வந்து கேட்பதால் தந்தை அதை மறுக்க மாட்டாரே ?"

"ஆமாம் !"

"அப்படியானால் என்ன செய்வது?"

இருவரும் சிந்தனையில் ஆழ்ந்தனர்.

xxxxxxxxxxx

மடலை எடுத்துச் சென்ற பணிப்பெண் கொடும்பாளூர் இளவரசன் மாளிகை நோக்கி நடந்தாள்.

அங்கேயோ..............

விக்கிரமன் மனம் நொந்து கிடந்தான்.

"நான் பேரரசன் மகள்மேல் காதல் கொண்டது பிழையோ? முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்ட கதைதானோ?"

"என் உள்ளக் கிடக்கையை இளவரசியிடம் எடுத்துரைக்க வழியில்லாமல் போய்விட்டதே ! சோழ இளவரசர் இராசாதித்தர் இந்நேரம் தலைநகரில் இருந்திருந்தால் தனக்காகப் பரிந்து பேசலாம். ஒரு தடவை நம்மிடம் இதுபற்றிக்கூடப் பேசினாரே ! இப்போது அதற்கும் வழியில்லாமல் போய்விட்டதே !"

சோகமே உருவாக அமோகவர்ஷன் மூலம் செய்தியறிந்து தன் மாளிகை வந்தவன் தன் சயன அறைக்குள் சென்று கட்டிலில் சாய்ந்து விட்டான்.

தன்னை யாரும் பார்க்க வந்தால் பார்க்க அனுமதிக்க வேண்டாம் என்று காவலர்க்கு உத்தரவு வேறு!

வீரமாதேவியின் பணிப்பெண் மடலுடன் வாசலில் காத்திருந்தும் காவலன் அவளை உள்ளே செல்ல அனுமதிக்க மறுத்து விட்டான்.

"என்ன செய்வது?"

பணிப்பெண் குழம்பினாள்.

நல்ல வேளையாக அந்நேரத்தில் பொன்பெருமாள் வடதிசைப் பயணம் செல்ல இருந்தவன், மரியாதை நிமித்தம் விக்கிரமனைக் காண விரும்பி அம்மாளிகை வந்தான்.

காவலன் அவனை எப்படித் தடுப்பது என்று தவித்தான். அங்கே வீரமாதேவியின் பணிப்பெண் வாயிலில் காத்திருப்பதைப் பொன் பெருமாள் கண்டு வியந்தான்.

"இங்கு வந்து காத்திருக்கிறாயே? என்ன விஷயம்?"

"நம் இளவரசியின் மடலைக் கொடும்பாளூர் இளவரசரிடம் சமர்ப்பிக்க..."

கூறத் தயங்கினாள் அவள்.

அவனுக்கு அது ஆச்சரியமாயிருந்தது.

"இளவரசியா ? மடலா ?"

"ஆமாம் ! அவசரம் ! காவலர் தடுத்து நிறுத்திவிட்டனர் !"

"அப்படியா ! சரி ! வா என்னுடனே !"

உள்ளே அழைத்துச் சென்றான். காவலர்கள் தடுக்க இயலாது தவித்து நின்றனர்.

சயன அறையை இருவரும் எட்டிப் பார்த்தனர். இருவரையும் கண்ட விக்கிரமன் வியப்படைந்தான்.

"வணக்கம் இளவரசே ! சேதி ஒன்று கொண்டு வந்தோம்!"

"என்ன சேதி !"

எழுந்து அவன் அமர்ந்தான்.

"நம் இளவரசியின் மடல் ஒன்று !"

துள்ளி எழுந்தான்!

"என்ன ! இளவரசியின் மடலா?"

"ஆமாம் !"

ஆவலுடன் அதை வாங்கினான். அவசரமாகப் படித்தான் !

மனத்திற்குச் சற்று நிம்மதி !

"என்ன சேதி என்று நான் அறியலாமா? மேலும் இன்று நான் நம் இளவரசரைப் பார்க்க வடதிசைப் பயணம் செல்ல இருக்கிறேன்!"

அமைச்சர் பூதூர் உடையான் நம்மாழ்வார் அடிகள் அவனை, மானியகேட நகரிலிருந்து பெண் கேட்டு வந்துள்ள சேதி அறிந்து, கோவிந்தனைப்பற்றியும், நாட்டின் நிலவரம்பற்றியும் விவரம் அறிந்துவர ரகசியமாக அவனை அனுப்பி வைப்பதை அவன் கூறவில்லை.

இளவரசன் விக்கிரமன் முகத்தில் வெட்கத்தின் சாயல் படர்ந்தது. பொன்பெருமாள் ஒருவாறு யூகித்து அறிந்து கொண்டான். மேற்கொண்டு அவன் ஒன்றும் கேட்க விரும்பவில்லை.

பணிப்பெண்ணுக்கு விடைகொடுத்து அனுப்பி வைத்தான். பிறகு அவனே கூறினான்.

"அமோகவர்ஷனும், சோழ இராஜமாதாவும் வந்துள்ள காரணம் தெரிந்து விட்டது."

"என்னவாம் இளவரசே ?"

"தங்கள் இளவரசனுக்குப் பெண் கேட்டு வந்துள்ளார்கள்."

"உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"அமோகவர்ஷனே என்னிடம் கூறினார்."

பொன்பெருமாள் அமைச்சர் பூதூர் அடிகள் முன்யோசனையுடன் தன்னை அனுப்பி வைப்பதை மனதுக்குள் பாராட்டினான்.

"நீங்கள் என்ன செய்வதாக உத்தேசம் ?"

"அதுதான் நம் இளவரசியும் எனக்கு ஓலை ஒன்றை அனுப்பியுள்ளார்கள்!"

"நல்ல விஷயம்தான் ! சந்தியுங்கள். நம் இளவரசருக்கு என்ன தகவல் கூறவேண்டும்?"

ஒரு கணம் சிந்தித்தான்.

'இவனிடம் கூறுவதா? காரியம் நடக்க வேண்டுமே?'

"நீ இங்குள்ள நிலவரத்தைக் கூறு. இளவரசர் தலைநகர் திரும்பினால் எனக்காகப் பரிந்து பேசலாம். என்னை நண்பராகப் பாவிப்பவர். அதனால் வேண்டுகோளாகக் கூறு. தலைநகர் திரும்பும்படி அழைத்ததாகக் கூறு!"

பொன்பெருமாள் புறப்பட்டுச் சென்றான்.

உடனே இளவரசியைக் காண்பதற்காக அவள் குறிப்பிட்ட இடத்திற்கு, குறிப்பிட்ட நேரத்திற்குப் புறப்பட்டுச் சென்றான்.

'இளவரசி என்னை விரும்புகிறார். நானும் விரும்புகிறேன். உள்ளக்கிடக்கையை அப்படியே கொட்டிவிட வேண்டும்.'

'எப்படி நடந்துகொள்வது ?'

ஒருமுறை தனக்குள் ஒத்திகை பார்த்துக் கொண்டான்.

இவை எல்லாம் இளவரசி வீரமாதேவியைப் பார்க்கும் வரைதான்.

உத்தியானவனத்தில் அவள் விக்கிரமனுக்காகக் காத்திருப்பதைப் பார்த்ததும், அவன் பேச நினைத்திருந்ததை எல்லாம் மறந்துவிட்டான்!

அவன் வந்துகொண்டிருப்பதைப் பார்த்த வீரமாதேவியும் என்ன பேசுவது? எப்படி நம் ஆசையைக் கூறுவது ? எப்படி நடந்துகொள்வது என்பது எல்லாம் அவளுக்கு மறந்துவிட்டதால் அவளும்கூடத் தவித்தாள்!

ஆனால் ஒருவர் தவிப்பதை மற்றவர் புரிந்துகொண்டனர். ஒருவருக்காகவே மற்றவர் பிறந்திருப்பதாக எண்ணினர்.

காலம் காலமாகக் காத்திருந்து பார்ப்பதுபோல உள்ளம் பொங்கவே, வார்த்தைகள் வெளிவர மறுத்துவிட்டன!

தூரத்தே இவர்கள் நடத்தும் நாடகத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த அநுபமாவும் தனக்குள் சிரித்துக் கொண்டாள்!

வீராதி வீரர் ஆனாலும் காதல் வயப்படும்போது ஊமையாகி விடுகின்ற விந்தையைக் கண்டவள் அவனைப்பற்றிப் பெருமிதமும் கொண்டாள்!

இப்படிப்பட்ட வீரபுருஷன் தனக்கே மணவாளன் ஆனால் ?

கற்பனையை வளர்த்துக் கனவும் கண்டாள் !

அந்த நேரம் பார்த்துத்தானா பேரரசர் அந்தப்புரம் வரவேண்டும் ?

அரசமாதேவி அவரிடம் இராஜமாதா வந்துள்ள விவரம்பற்றிக் கூறினாள்.

"நம் இளவரசியைப் பெண் கேட்டு வந்துள்ளார்கள் அந்நாட்டு இளவரசருக்கு !"

ஒருகணம் மலைத்து விட்டார். பிறகு அதுவும் நல்லதாகவே பட்டது அவருக்கு. என்றாலும் இளவரசியைக் கேட்போம் என்று எண்ணினார்.

"வீரமாதேவி எங்கே?"

"உத்தியானவனத்திற்குள் சென்றிருக்கிறாள். ஏதோ பரபரப்புடன் காணப்பட்டாள். கூடவே அநுபமாவும் உடன் சென்றிருக்கிறாள்!"

"நல்லதாகப் போயிற்று. இருவரையும் தனிமையில் வைத்துப் பேசலாம் - கேட்கலாம் !"

உத்தியானவனத்திற்குள் அரசர் நுழைந்தார். அங்கே தனியாக நின்றுகொண்டிருந்த அநுபமா பேரரசர் வருவதைப் பார்த்துத் திடுக்கிட்டாள் !

"வீரமாதேவி எங்கே, மகளே?"

அவள் என்ன சொல்வது என்று தயங்கினாள் !

தூரத்தே அப்போதுதான் இருவரும் ஆசையாக ஓரிரண்டு வார்த்தைகள் பேசி இருப்பார்கள்.

அவர்களைக் கண்டுவிட்ட பேரரசர் கடும் கோபத்துடன் அநுபமாவை எரித்துவிடுபவர்போல பார்த்துத் திரும்பி விட்டார்.

அவரைக் கண்டுவிட்ட வீரமாதேவியும் விருட்டென்று அந்தப்புரம் திரும்பிவிட்டாள் அநுபமாவுடன்!

விக்கிரமனும் அதிர்ச்சியடைந்தான்.

'காரியம் கெட்டுவிட்டதே ! பேரரசரின் கோபம் தனக்குப் பேரிடியாய்த் தாக்கும் !' விக்கிரமன் கலங்கிய உள்ளத்துடன் தன் மாளிகை திரும்பி விட்டான் !



# 22. அரசரின் கேள்வி

பேரரசர் கடும் கோபத்தில் செல்கிறார் என்று அறிந்த இரு இளவரசிகளும் தங்கள் அன்னையரிடம் தஞ்சமடைந்தனர்.

அவர்களுக்கும் என்ன செய்வது என்றே புலப்படவில்லை.

"நேரே மன்னர் பெருமானிடமே தஞ்சமடைவதே சாலச் சிறந்தது! அவர் நம் தந்தை ! இதில் என்ன தயக்கம் ?"

அநுபமாவே இந்த யோசனையைக் கூறினாள்.

"அதுவும் சரிதான் !"

வீரமாதேவியும் அந்த முடிவுக்கு வந்தாள். இருவருமே மன்னருடைய சயன அறைக்குள் பிரவேசித்தனர்.

அவர் கட்டிலில் சாய்ந்து கண்களை மூடியவாறு படுத்திருந்தார். இரு பணிப்பெண்கள் அவருக்குச் சாமரம் வீசிக் கொண்டிருந்தனர்.

இருவரும் அவற்றை வாங்கி வீசியவாறு பணிப்பெண்களைக் கண் ஜாடை காட்டி வெளியேறச் செய்தனர்.

விசிறி வீசும் காற்றின் மாறுபாட்டை உணர்ந்த மன்னர் விழித்துப் பார்த்தார்.

'இளவரசிகள்!'

தன் மக்களே விசிறி எடுத்து வீசுவதைக் கண்ட அவர் திடுக்கிட்டார்! அவர் கோபம் பறந்துவிட்டது. பச்சாதாபம் பிறந்து விட்டது.

"என்ன இந்தக் கோலம்? வீச வேண்டாம்! என் பக்கலில் அமருங்கள்!"

அவர்களைக் கட்டிலில் அமரச் செய்தார். எதற்காக அவர்கள் வந்திருப்பார்கள் என்பதையும் அவர் உணர்ந்து கொண்டார்.

"தந்தையே! பாட்டியார் வந்துள்ள காரணம் எங்களுக்குத் தெரிந்து விட்டது. நாங்கள் இந்தச் சோழ பூமியிலேயே வாழ ஆசைப்படுகிறோம் !"

பெண் மக்களுடைய பேராசையைக் கண்டு மன்னர் மெல்ல நகைத்துக் கொண்டார்.

"உம் ! பார்ப்போம் ! இப்பொழுது அதற்கு என்ன? உம்! உணவு எடுத்துக் கொண்டீர்களா?"

"இல்லை!"

"உங்கள் அன்னைமார்களைக் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வருவோம்.! நிம்மதியாகச் செல்லுங்கள் !..... உம் ! வீரமாதேவி !"

எழுந்து சென்ற இருவரும் தயக்கத்துடன் தங்கள் தந்தையைத் திரும்பிப் பார்த்தனர்.

"மன்னர் குடும்பத்தின் கௌரவத்திற்கு ஏதும் மாசு ஏற்படுத்தி விடாதே !"

அது எச்சரிக்கை போலவும் இருந்தது! உபதேசம் போலவும் இருந்தது !

கண்டிப்பா - கருணையா அதில் கலந்திருந்தது என்ற பேதம் உணர முடியவில்லை அவர் பேச்சில்.

கண்கள் கலங்க அவள் ஒன்றும் கூறாமல் வெளியேறினாள்.

'நான் என்ன தவறு செய்துவிட்டேன். என் மனம் கவர்ந்தவரைப் பார்த்தது தவறா? பெண் கேளுங்கள் என்று பேசியதுதான் தவறா?'

ஆனால், அவர் உள்ளத்திலும் தன்னை மணம் புரிந்துகொள்ள மட்டற்ற ஆசை உண்டு என்பதை அறிந்து கொண்டதால், சற்று தெம்புடன் தன் அறைக்குள் நுழைந்தாள்! உணவு எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற உணர்வு கூட அவளுக்கு ஏற்படவில்லை.

அது காதல் மயக்கத்திலா ? அல்லது காவலர் கண்டிப்பிலா?

ஆனால் ?

நேராகச் சென்ற அநுபமா தன் அன்னை அரசி அருண்மொழி நங்கையின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

அரசமாதா தனியறையில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்ததால், தன் அன்னையிடம் அவள் அளவளாவ முடிந்தது.

"என்ன நம் அரசர் இப்படி?"

"என்ன நடந்தது?"

அன்னையிடம் எல்லா விவரங்களையும் அவள் கூறினாள்.

"அரசர் வீரமாதேவியை அப்படிக் கேட்டிருக்கக் கூடாது ! அவரது கடின மொழி என்னையே காயப்படுத்தி விட்டதே ! அக்காள் மனம் என்ன பாடுபட்டிருக்கும் ? அவள் தன்னைப் பெண் கேட்டு வாருங்கள் என்று கொடும்பாளூர் இளவரசரிடம் கூறியது தவறா? சந்தித்தது குற்றமா? பேசியது தப்பா? உறவுமுறைதானே ?"

மகள் பொரிந்து தள்ளியதை அருண்மொழிநங்கை வியப்புடன் நோக்கினாள்!

"நாளை நான் மன்னர் பெருமானிடம் இதுபற்றிப் பேசுகிறேன். போதுமா? உணவு எடுத்துக் கொண்டு நித்திரை செய்!"

அனுப்பி வைத்தாள் அவளை.

XXXXXXXXXX

மறுநாள் கருமண்டபத்தில் பராந்தகச் சக்கரவர்த்தி முன்னிலையில் அமைச்சர் நம்மாழ்வார் அடிகள், பழுவேட்டரையர் கண்டன் அமுதன், கொடும்பாளூர் இளவரசன் விக்கிரமன், அரசியல் அதிகாரிகளான தந்தனூர் மூவேந்த வேளான், சிறுகுளத்தூர் மாறன், பரமேசுவரனான செம்பியன் சோழவரையன் ஆகியோர் சூழ அமர்ந்திருந்தனர்.

அச்சமயம் இரட்டை மண்டல அரசரின் தம்பியும் அமைச்சருமான அமோகவர்ஷன் விருந்தினர் மாளிகையிலிருந்து புறப்பட்டவர் அரசரின் ஆலோசனை மண்டபத்தினுள் பிரவேசித்தார்.

பேரரசர் எழுந்து நின்று வரவேற்றுத் தன் பக்கலில் இருந்த ஆசனத்தில் அமரச் செய்தார்.

"மன்னர் பெருமானே! சோழநாட்டுப் பெருமக்களே! நான் இங்கு விஜயம் செய்திருப்பதன் காரணத்தை ஒருவாறு ஊகித்திருப்பீர்கள்.

"எங்கள் மன்னரின் குமாரன் இளவரசன் கோவிந்தனுக்குச் சோழ இளவரசியை மணம் முடிக்க பெண் கேட்டு வந்துள்ளேன். இதற்கு ஒப்புதல் தந்து சோழ இராஜமாதா இளங்கோப்பிச்சியாரே இதற்காகவே என்னுடன் புறப்பட்டு வந்துள்ளார்கள்.

"முன்னர் நடந்தவைகளை மறப்போம்! இனி நடப்பவை எல்லாம் நல்லவையாகவே நடக்கட்டும்! இராஜமாதாவைப் பேரரசர் இன்முகம் கொண்டு நேற்று வரவேற்றதிலிருந்து அவர் கடந்த காலத்தை மறந்துவிட்டார் என்பது புலனாகிறது!"

இதை அவர் கூறியதும் அங்கு சற்று இறுக்கமான சூழ்நிலை நிலவியது. அமோகவர்ஷன் நாம்தான் பழையனவற்றைக் கிளறிவிட்டோமோ என்று சற்றே தயக்கம் காட்டினார்.

என்றாலும் தாங்கள் வந்த நோக்கம் நிறைவேற வேண்டுமே! மறுபடி பேச ஆரம்பித்தார்.

"எங்கள் நாட்டின் இளவரசனுடைய இந்த மண உறவால் பரத கண்டத்தின் தென்பகுதியில் அரசியல் ஸ்திரத்தன்மை ஏற்படும். இதைக் கருத்தில் கொண்டே மன்னர்பிரானிடம் தூது வந்துள்ளேன்!"

விக்கிரமனால் இதைக் கேட்டுக் கொண்டு வாளா இருக்க முடியவில்லை.

"தூதுவரே ! சோழ இளவரசியைப் பெண் கொள்ள என் போன்ற இளவரசர்கள் இந்நாட்டில் காத்துக் கொண்டிருக்கின்றனர்.

"சோழப் பேரரசுக்கு நெடுங்காலமாகத் தொண்டு செய்தும், மண உறவு ஏற்படுத்திக் கொண்டும் சிற்றரசர்கள் பலர் இங்குள்ளனர்.

"மன்னர்பிரான் அவர்களும் எங்களுடைய உறவைத் தொடர சோழ இளவரசிகளை, சோழ நாட்டிலுள்ள சிற்றரசர்களுக்கே மணமுடித்துக் கொடுப்பார்கள்! கொடுக்க வேண்டும் என்றும் சிற்றரசர்கள் சார்பாக வேண்டிக் கொள்கிறேன்!"

தன் விருப்பத்தை மன்னர்க்கு இதன்மூலம் அவன் தெரிவிக்க அவனுக்கு ஒரு வாய்ப்பாக இது அமைந்தது!"

பழுவேட்டரையர் எழுந்தார்.

"இதே கருத்துத்தான் எனக்கும்! என் சகோதரி அருண்மொழிநங்கைதான் இங்கு அரசியாக உள்ளார். பெண் கொடுத்ததுபோல, பெண் எடுக்கவும் நாங்கள் விரும்புகிறோம்!"

"உங்கள் இருவருக்கும் ஒன்று சொல்ல நான் ஆசைப்படுகிறேன். கூறலாமா?"

அமோகவர்ஷன் கேட்டார்.

"தாராளமாகக் கூறுங்கள்!"

பழுவேட்டரையர் தலையாட்டினார்.

"சிற்றரசர்கள்தான் நீங்கள்! சோழநாட்டைச் சுற்றிலும் எதிரிகள்தான் இன்னும் இருக்கிறார்கள். தோற்ற பாண்டிய மன்னர் சேர, ஈழ நாட்டரசர்கள் துணையுடன் மறுபடி தாக்க முனையலாம்!"

"படை எடுக்கட்டும் ! பரவாயில்லை. அப்போது எங்கள் வாட்கள் பதில் கூறும் !"

படபடத்தான் விக்கிரமன்.

அமைச்சர் பூதூர் உடையான் நம்மாழ்வார் அடிகள் கையமர்த்தினர்.

"தூதுவர் கூற வந்ததைக் கூறட்டும் !"

"வடக்கேயும் கங்க, சாளுக்கிய நாடுகளும் சோழ நாட்டுக்கு எதிரிகளே ! கடந்த காலத்திலும் எங்கள் நாடும் எதிராகத்தான் இருந்தது!"

"இப்போது காலம் கனிந்து வந்துள்ளதால் இரு பேரரசுகளும் மண உறவால் இணையவேண்டும் என்று விரும்புகிறோம்! இதன்மூலம் வடக்கு, தெற்கில் உள்ள எதிரிகள் போர் தொடுக்க அஞ்சுவர். படை நடத்திப் பணிய வைக்கலாம்தான் ! அதனால் எத்தனை உயிர்களைப் பலி கொடுக்க நேரிடும்? சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்!"

"மன்னர்பிரான் எல்லாவற்றையும் ஆற தீர ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வருமாறு கேட்டுக் கொள்கிறேன். மேலும் உடைந்த உறவை ஒட்டிப் புது உறவு இந்த மண உறவால் மலரட்டும். இதுவே எங்கள் மன்னர்பிரான் ஆசை ! இராஜ மாதாவின் ஆசையும்கூட!" அமோகவர்ஷன் கூறி முடித்தார்.

பேரரசர் சற்று சிந்தனையில் ஆழ்ந்துவிட்டார். விக்கிரமனோ முள்ளின்மேல் நிற்பதுபோலத் தத்தளித்தான். பழுவேட்டரையரை நோக்கினான். அவர் ஏதோ கூற முற்பட்டார். அதைக் கண்ட அமைச்சர் நம்மாழ்வார் அடிகள் அவரைக் கையமர்த்திவிட்டுக் கூறலானார்.

"அமைச்சர் பெருமானே ! எங்கள் பேரரசர் சற்று ஆலோசனை செய்ய அவகாசம் வேண்டும்! மேலும் அரண்மனைப் பெண்டிர் களிடமும் மன்னர் கேட்க வேண்டி யுள்ளது. அதுவரை தூதர் பொறுத்தருள வேண்டும்!"

"ஆகா! தாராளமாக! மன்னர் பிரானின் நல்ல முடிவை எதிர்பார்த்து எத்தனை நாள் வேண்டுமானாலும் காத்திருக்கிறேன்!"

அமோகவர்ஷன் எல்லோரையும் வணங்கி விடை பெற்றார்.

பிறகு பேரரசர் பேச ஆரம்பித்தார்.

"இரு பெரிய வல்லரசுகள் கெட்டுப் போன உறவைப் புதுப்பிக்க வேண்டும் என்று இரட்டை மண்டலப் பேரரசர் இந்திரர் விரும்புகிறார். நம்மைச் சுற்றிலும் பகைவர்கள் எப்போது காலம் கனியும் என்று காத்திருக்கின்றனர். இந்த உறவைப் புதுப்பித்தால் உங்கள் அதிருப்தி கிட்டும். அரண்மனைப் பெண்டிர்களிடமும் சம்பந்தப்பட்ட இளவரசியிடமும் சம்மதம் பெறவேண்டும்!"

விக்கிரமன் குறுக்கிட்டான்.

"இளவரசி சம்மதிக்கவில்லையானால்?"

"அதைப்பற்றி பிறகு ஆராயலாம் !"

மன்னர்பிரான் எந்த முடிவும் எடுக்கவில்லை என்பதறிந்த விக்கிரமன் மனநிறைவு கொண்டாலும், எப்படியாவது தன்னை விரும்பும் - தான் விரும்பும் இளவரசியை மணம் செய்துகொள்ள வேண்டும் என்ற வைராக்கியத்துடன் இருந்தான்.

பழையாறையில் தங்கியிருந்த அரசிகளான வில்லவன் மாதேவி, வளவன் மாதேவி, சோழசிகாமணி, தென்னவன் மாதேவி ஆகியோருக்கு சோழ இராஜமாதா மானியகேட நகரிலிருந்து திரும்பி வந்திருப்பதாகவும், பேரரசர் பழையனவற்றை எல்லாம் மறந்து அவரை வரவேற்றதாகவும், வீரமாதேவியைப் பெண் கேட்டு அந்நாட்டுப் பேரரசரின் தம்பியே தஞ்சை வந்தி ருப்பதாகவும் செய்தி போய்ச் சேர்ந்தது.

இராஜமாதாவை அவர்கள் ஒருவருக்குமே தெரியாது. அவரை மன்னரே வரவேற்றுவிட்டபடியால் அவரைத் தரிசிக்கவும், மண உறவு பற்றிப் பேசுவதால் அதில் தாங்களும் பங்கு பெற எண்ணி நால்வரும் தஞ்சை புறப்பட்டு வந்து சேர்ந்து விட்டனர்.

வந்ததும் அவர்கள் அருண்மொழிநங்கையின் மாளிகையில் தங்கியிருக்கும் இளங்கோப்பிச்சியைப் பார்த்து வணங்கினர். அவர்களை அருண்மொழிநங்கையே அறிமுகப்படுத்தி வைத்தாள்.

அரசமாதேவி கோக்கிழானடியைப் பார்க்கவும், வீரமா தேவியிடம் பேசவும் விழைந்து நால்வரும் அருண்மொழி நங்கையுடன் பேரரசி மாளிகை சென்றனர்.

எல்லாரும் அங்கு வந்திருப்பது அரசமாதேவிக்கு ஆச்சரிய மாயிருந்தது. என்றாலும் திருமணப் பேச்சு நடக்கும்போது அவர்களும் கலந்து கொள்வதும் நல்லதே என்று அவளும் மனநிறைவு கொண்டாள்.

தான் பெற்ற மகள் விரும்பும் கொடும்பாளூர் இளவரசன் விக்கிரமனை அவள் கைப்பிடிக்க வேண்டும். அதற்கு அவர்கள் ஏதாவது உபாயம் கூறலாம் என்று எண்ணிய அவள் வீரமாதேவியின் அறைக்கு அழைத்துச் சென்றாள்.

அன்னையர் அறுவரும் ஒருசேரப் பார்த்த வீரமாதேவிக்கு ஆச்சரியம் ! ஆனந்தம் ஏற்பட்டாலும் அடுத்த விநாடியே விம்மி அழத் தொடங்கி விட்டாள்.

அரசிகள் அனைவரும் பதறி விட்டனர்.

“என்ன உனக்கு வந்தது?”

பரிவுடன் அவளைக் கேட்டனர். அரசமாதேவியே இளவரசியின் விருப்பத்தைக் கூறினாள். மன்னர்பிரான் மறுத்து விடுவாரோ என்ற பயத்தையும் பகர்ந்தாள்.

அவர்கள் தேற்ற ஆரம்பித்தனர். நிலவரம் புரிந்த அவர்கள் அனைவரும் ஒரு முடிவுக்கு வந்தனர்.

மன்னர்பிரானிடம் இளவரசிக்காக வாதாட வேண்டியதுதான்! நம் இளவரசி விருப்பப்பட்ட இளவரசனுக்கு மணம் முடித்துக் கொடுக்காமல் மன்னர் வேறு முடிவு எதுவும் எடுத்திருந்தாலும் அவர் மனத்தை எப்படியாவது மாற்றிவிடவேண்டும் என்ற உறுதியுடன் இருந்தனர்.

"பேரரசர் எங்குள்ளார்? அறிந்து வாருங்கள்!"

பணிப்பெண்களுக்கு அரசமாதேவி ஆணையிட்டாள்.

அவர்கள் சென்ற சில விநாடிகளுக்குள் பேரரசரே அந்த மாளிகைக்குள் பிரவேசித்தார்.

பெற்றவளிடம் ஒரு வார்த்தை; தன் மகளிடமும் சில யோசனைகள் கூறவே அவர் அங்கு விஜயம் செய்தார்.

அரசிகள் அத்தனை பேரும் அங்கிருந்ததைக் கண்ட அவருக்கு வியப்பு மேலிட்டது.

சொல்லி வைத்தாற்போல அத்தனை பேரும் அங்கே இருந்தாலும் அதுவும் ஒரு நன்மைக்கே என்று எண்ணினார்.

அருண்மொழிநங்கையே பேச்சை ஆரம்பித்தாள்.

"இரட்டை மண்டலத்தார் பெண் கேட்டு வந்துள்ள விவரம் அறிந்தே இவர்கள் எல்லாரும் இங்கு வந்துள்ளார்கள்!"

"உம் ! தெரிகிறது!"

"வீரமாதேவியை அங்கு மணம் முடித்துக் கொடுக்க உங்களுக்கு விருப்பமா?"

"இன்னும் முடிவு செய்யவில்லை. உங்களுக்குத் தெரியாமலா அப்படி ஒரு முடிவு எடுப்பேன்?"

"நம் இளவரசிக்கு இதில் நாட்டமில்லைபோல !"

"யார் அப்படிக் கூறியது?"

"அவளே என்னிடம் கூறினாளே!"

பேரரசியே இப்போது பதில் கூறினாள்.

"ஏனாம்?"

"கொடும்பாளூர் இளவரசனை மணக்க விருப்பமாம்!"

"முன்வந்த சேர மன்னர் மகளான உன்னைத் தவிர மற்ற இவர்கள் எல்லாரும் சிற்றரசர்கள் மக்கள்தானே?"

அவர்கள் மௌனம் காத்தனர். அவர் தொடர்ந்தார்.

"இவர்கள் மட்டும் பேரரசனுக்கு மனைவியாகலாம். என் மகள் மட்டும் ஒரு பேரரசனாகப் போகின்றவனை மணக்கக் கூடாதா? "பெற்ற தந்தை நான் அப்படி ஆசைப்படக் கூடாதா?"

அரசரின் கேள்விக்கு அவர்களால் பதில் கூற முடியாமல், அத்தனை பேரும் வாயடைத்துப் போய்விட்டனர்!



# 23. சதுரங்கக் காய்கள்

"என்னை மணந்த உன்னைத் தவிர ஏனையோர் சிற்றரசர்களின் மக்களே! சிற்றரசர்கள் ஒரு பேரரசனுக்குப் பெண் கொடுத்திருக்கும்போது நான் ஒரு பேரரசன் மகனுக்குப் பெண் கொடுக்க ஆசைப்படக் கூடாதா? "அது நியாயமாகப்பட வில்லையா உங்களுக்கு? பெற்ற தந்தை அப்படி விரும்புவதில் என்ன தவறு?"

பராந்தரச் சக்கரவர்த்தி கேள்விமேல் கேள்வி கேட்க, அத்தனை அரசிகளுக்கும் பதில் சொல்ல நா எழவில்லை.

"என் சிற்றன்னையாரே மனந்திருந்தி இங்கு வந்துள்ளார்கள். அவர்கள் விரும்பியே இந்த மணஉறவுப் பேச்சு நடக்கிறது !"

"பேச்சு நடப்பதுபற்றி யாரும் தவறு என்று கூறவில்லை. பெண் என்று இருந்தால் யாரும் கேட்டு வரத்தான் செய்வார்கள். ஆனால் நம் இளவரசி விரும்பும்போது...."

அரசமாதேவி கூறிக் கொண்டிருக்கும்போதே பேரரசர் இடைமறித்தார்.

"நிறுத்து ! இன்றைய அரசியல் சூழ்நிலை தெரியாமல் பேசாதே! உன் சகோதரன் இருக்கிறானே சேரன், அவன் பாண்டிய - ஈழ மன்னர்களுடன் கூட்டு உடன்படிக்கை செய்துள்ளதாக அறிகிறேன். வடக்கேயும் நம்மிடம் பகைமை பாராட்டுவோர் பலருண்டு!

"கங்க மன்னன் பூதுகனும் எல்லைத் தகராறு காரணமாகப் பகைமை பாராட்டுகிறான்! எதிரிகள் இன்றோ நாளையோ என்று போர் தொடுக்க நாள் பார்த்துக் கொண்டிருக்கின்றனர்!

"இந்நிலையில் இராஷ்டிரகூடப் பேரரசர் பகைமை மறந்து வலிய வந்து பெண் கேட்டு விரும்பி வரும்போது நாம் மறுதளித்தால் அதனால் மனக்கசப்பு ஏற்படத்தானே செய்யும். பகைமை வளர்ந்தால் நம் நிலைமை என்னாவது?"

"அத்தோடு இராஷ்டிரகூடருக்கும் சாளுக்கியர் வளர்ச்சி அச்சுறுத்தலாக உள்ளது. இங்கு இரு நாடுகளும் மண உறவால் ஒன்றிணைந்தால் எதிரிகள் நம்மைக் கண்டு அஞ்சுவர். இதுபற்றி எல்லாம் அறியாத நீங்கள் எனக்கு யோசனை சொல்ல வருகிறீர்கள்?"

அதற்குமேல் அரசிகளில் எவருக்கும் எதிர்த்து மறுவார்த்தை சொல்லத் தைரியமில்லை. பேரரசரின் கோபத்தை அதிகரிக்கவும் விரும்பவில்லை.

இங்கு அந்நேரம் அரசிகளுடன் நம் தந்தை விவாதித்துக் கொண்டிருக்கிறார் என்ற சேதி அறிந்த வீரமாதேவி விரைந்து வந்தாள்.

தனக்குச் சாதகமான நிலைமை நிலவும் என்று எதிர்பார்த்து வந்தவளுக்கு, அரசிகள் வாய் மூடி மௌனிகளாக இருப்பது பேரிடி தாக்கியதுபோல உணர்ந்தாள்.

அவள் வருவதைப் பார்த்துவிட்ட பேரரசர் தன் மகளை அருகில் அழைத்தார்.

"என் அருமை மகளே! வா! உன் திருமண விஷயமாகத்தான் ஆலோசனை செய்து கொண்டிருக்கிறோம்!"

அவள் அன்னையர்களை ஏறிட்டாள்! எல்லாருடைய முகத்திலும் இறுக்கம் தெரிந்தது.

'இனி இவர்களை நம்பிப் பயனில்லை. நாமே தந்தையிடம் வாதாடிப் பேச வேண்டியதுதான்!'

"என்ன, பேசாமல் இருக்கிறாய்?"

"தந்தையே! எனக்கு இராஷ்டிரகூட இளவரசருக்கு வாழ்க்கைப்பட விருப்பமில்லை!"

"ஏன்?"

"உங்களை விட்டு வெகுதூரம் சென்று வாழ விரும்ப வில்லை."

மகளுடைய சாதுர்யமான பேச்சைக் கேட்டு வியந்தார்.

"நீ எங்கு சென்று கணவனுடன் வாழ்ந்தாலும் உன் நாட்டை மறந்து, நகரத்தை மறந்து ஏன், உன்னைப் பெற்று வளர்த்துச் சீராட்டிப் பாராட்டி வளர்த்த எங்களையும் மறந்துதானே வாழவேண்டும்!"

"கொடும்பாளூர் இளவரசரை மணம் செய்துகொள்ளவே நான் விரும்புகிறேன். வேறு இடத்தில் வாழ்க்கைப்பட நான் விரும்ப வில்லை!"

திட்டமாகக் கூறி முடித்தாள்.

"மகளே ! நீ நினைத்தபடி உன்னால் முயன்றால் முடியும் !"

அவளுக்கு அது இன்ப அதிர்ச்சியாக இருந்தது. அது சில கணங்களுக்குத்தான்! அடுத்த நொடியோ?

மன்னர் தொடர்ந்தார்.

"அதுவும் ஏழை எளியவர் வீட்டில் நீ பிறந்திருந்தால் அது சாத்தியம்தான் ! ஆனால் நீயோ ஒரு பேரரசன் மகள் ! அரண்மனை வாசியாகப் பிறந்துவிட்டாயே?

"இளவரசிகள் எல்லாரும் பெற்றெடுத்த மன்னர்களுக்கு சதுரங்கக் காய்கள் போலத்தான்! காய்களை நகர்த்துவதுபோல உங்களை எங்கள் நலத்துக்காக மட்டுமல்ல, நாட்டின் நலத்துக்காகவும் எங்கேயும் மணம் முடித்துக் கொடுத்தாக வேண்டும் !

"மகளே! நீ மற்றொன்றையும் தெரிந்து கொள்ள வேண்டும்! இதோ உன் அன்னையர்களில் பெற்றவளைத் தவிர மற்றவர்கள் அனைவரும் சிற்றரசர்களின் மக்களே!

"இவர்களின் தந்தையரெல்லாம் ஒரு பேரரசனை மருமகனாகத் தேர்ந்தெடுக்கும்போது பேரரசனான நான் ஏன் எனக்குத் தகுந்த இடத்தில் சம்பந்தம் தேடக் கூடாது?"

"உங்களுடைய ஆசை நியாயமாக இருக்கலாம். ஆனால் வேற்று நாடு சென்று அயலாருடன் பழகி அவர்களின் மொழி, கலாச்சாரம், பழக்க வழக்கங்களை எல்லாம் எப்படி நான் அறிய முடியும்? கஷ்டமில்லையா?"

"ஏன், உன் சிறிய பாட்டியார் இராஷ்டிரகூடத்திலிருந்து இங்கு உன் பாட்டனை மணந்து வாழ்ந்தவர்தானே? அவர்தானே உன்னை அங்கு மணம் செய்து கொடுக்க விரும்பி இங்கு வந்துள்ளார். அவரும் உன்னோடு அங்குதான் இருப்பார்கள். உனக்கு அங்கு எல்லா வற்றையும் கற்றுக் கொடுப்பார்கள். அதில் என்ன கஷ்டம்?

"மகளே ! நாடு இன்று இருக்கின்ற நிலையில் எதிரிகள் சூழ இருக்கும்போது ஒரு பேரரசருடன் மண உறவு ஏற்படுத்திக் கொள்ள இதைவிட வேறு சந்தர்ப்பம் வாய்க்காது! உன் நன்மை - எங்கள் நன்மை எல்லாவற்றையும் உத்தேசித்துத்தான் இந்தச் சம்பந்தம்பற்றி இங்கு ஆலோசனை செய்து கொண்டிருக்கிறோம்

"பெற்ற தந்தை பாழும் கிணற்றில் தள்ளுவானா? நீயோ ஒரு பேரரசன் மகள் ! உனக்கு ஒரு குறையும் இல்லாமல் நான் இந்தத் திருமணத்தைச் சீரும் சிறப்போடும் செய்து முடிப்பேன்!"

'நான் விரும்பிய இளவரசனை மணக்க முடியாதபோது இவர்கள் எங்கு தள்ளினாலும் என்ன!'

உள்ளம் துடித்தாள். கண்கள் குளமாயின. தன் தந்தையை ஏறிட்டாள்.

பதறிய மன்னர் அவளை அருகில் அமர்த்தித் தலையைத் தடவிக் கொடுத்தார்.

"மகளே! கொடும்பாளூர் இளவரசன் நமக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசன்! சிற்றரசனைவிட ஒரு பேரரசன் பிள்ளைக்கு என் மகளை மணம் செய்து கொடுக்க நான் விரும்புவதில் என்ன தவறு

கண்டாய்? நீ கொடும்பாளூர் இளவரசனை மறந்துவிடு! உன்னை நான் ஒரு மகாராணியாகப் பார்க்க விரும்புகிறேன். கேவலம், எனக்குப் பணிந்துள்ள ஒரு சிற்றரசனுக்கா உன்னைக் கொடுப்பேன் ? அதை மற! உன் நன்மையும், எங்கள் நலமும் ஒன்றுசேர இந்த முடிவை நான் எடுப்பதைத் தவிர வேறு வழி ஒன்றும் எனக்குத் தோன்ற வில்லை!"

தன் அரசிகள் பக்கம் பேரரசர் பார்வையைச் செலுத்தினார்.

"உம்! மகளுக்கு நல்ல யோசனைகளைச் சொல்லி மணப்பெண்ணைத் தயார்ப்படுத்துங்கள்!"

"தந்தையே ! இதுதான் உங்கள் முடிவா?"

அவர் தலையாட்டினார்.

"ஓ!"

அழுதபடியே எழுந்து ஓடினாள்! பேரரசி கோக்கிழானடி பதறியபடியே அவளைப் பின்பற்றினாள் !

பெற்றவள் அல்லவா?

வீரமாதேவி தன் அறைக்குள் சென்று கட்டிலில் முகம் புதைத்து அழுது கொண்டிருந்தாள்!

உள்ளே சென்ற பேரரசி அவள் தலையைத் தன் மடியில் எடுத்து வைத்துக் கொண்டு கோதிக் கொடுத்தாள்!

அவள் கண்களும் குளமாயின!

"சே ! என்ன அரச வாழ்வு?"

அலுத்துக் கொண்டாள்!

"ஆசைப்பட்ட இடத்தில் வாழமுடியாத எனக்கு அரச வாழ்வு ஏன்? நாட்டின் நலனுக்காக இந்தத் திருமணமாம் ! நான் என்னையே தியாகம் செய்து கொள்ள வேண்டும் ! அதனால் இந்த நாடும் போற்றும் ! பேரரசரும் பெருமைப்படுவார் ! அப்படித்தானே?"

அரசி ஒன்றும் கூறவில்லை.

"உம்! என்னை யார் போற்றி என்ன ? யார் தூற்றி என்ன? மகளது ஆசையைச் சாகடித்து விட்டாரே மன்னர் ! அன்புத் தந்தையாக இல்லாமல் அரசராக இருந்து எனக்குக் கட்டளையிடும் அவருக்காக என் ஆசையைப் பொசுக்கி அவல வாழ்வு வாழ இப்போதே நான் தயாராக வேண்டும் ! இந்தக் கொடுமை எங்காவது நடந்ததுண்டா ?"

"ஓ!....." வாய்விட்டு அழுதாள்.

அவளைத் தேற்ற வழி தெரியாமல் தந்தைக்கும் மகளுக்கும் இடையே நடந்த சர்ச்சையின்போதே நொறுங்கிப் போன அரசமாதேவி வெளியேறிச் சென்றவள், அப்படியே தன் கட்டிலில் சாய்ந்துவிட்டாள்.

மறுநாள் அமோகவர்ஷனை வரவழைத்தார் மன்னர். அதற்குமுன் கூடிய ஆலோசனைக் கூட்டத்தில் அமர்ந்திருந்த விக்கிரமன், பழுவேட்டரையர் முகங்களில் ஈயாடவில்லை. அமைச்சர் அப்போது குறுக்கிட்டார்.

"பேரரசே ! சில நாட்கள் பொறுத்திருங்கள். நல்ல முடிவு ஒன்றை எதிர்பார்க்கிறேன். அதுவரை நாட்களைக் கடத்துங்கள் !"

பேரரசர் அதற்கு இணங்கவில்லை.

"நல்ல காரியம் நடப்பதற்கு நாட்களைக் கடத்துவதா? நான் முடிவு செய்து விட்டேன்!"

கருமண்டபத்திற்கு விஜயம் செய்த அமோகவர்ஷனிடம், "உங்கள் இளவரசருக்குப் பெண் கொடுக்க எங்களுக்குச் சம்மதம்!" என்று அறிவித்தார்.

அமோகவர்ஷனுக்கு அளவற்ற ஆனந்தம். "நான் தூது வந்தது வெற்றியடைந்து விட்டது!"

முதல் நாளிரவு இளங்கோப்பிச்சி பேரரசரைப் பார்த்து நெடுநேரம் உரையாடினார்.

"இளவரசன் கோவிந்தன் ஒரே பிள்ளை. அழகனும்கூட!"

திரை ஓவியத்தைக் காட்டியவர் தொடர்ந்தார்.

"அவன்தான் வருங்கால மன்னன். நம் குழந்தைக்குப் பாதுகாப்பாக நான் அங்கேயே இருப்பேன். கவலை வேண்டாம்!"

பலவாறு நயந்து பேசி பராந்தகரை இசையச் செய்து விட்டார். நெடுங்கால நோக்கைக் கருத்தில் கொண்ட பேரரசரும் அதற்கு உடன்பட்டார்.

அரண்மனைப் பெண்டிர்க்கு அதில் துளியும் விருப்ப மில்லை. ஆனால் அவர்களை எல்லாம் அரசர் இலட்சியம் செய்யவில்லை. அருமை மகளின் ஆசையைப் புறக்கணிக் கிறோமே என்று அவர் எண்ணவில்லை. பேரரசன் மகனுக்குப் பெண் கொடுக்கிறோமே என்று பெருமைப்பட்டார். பேரரசியின் சகோதரரான சேர மன்னரை அவர் நம்பத் தயாரில்லை. அதனால் ஒரு பெண்ணையாவது பேரரசன் மகனுக்கு மணம் முடித்துக் கொடுப்போம்! வந்த சம்பந்தத்தை நழுவவிட மனம் வரவில்லை.

அடுத்த மாதம் திருமணம் என்று நாளும் குறிக்கப் பட்டுவிட்டது. அமோகவர்ஷனும் மகிழ்ச்சியுடன் புறப்பட்டார்.

இராஜமாதா இளங்கோப்பிச்சி அத்திருமணம் முடியும் மட்டும் தஞ்சையிலேயே இருக்க விரும்பினார். அதனால் அவர் அமோகவர்ஷனுடன் பயணப்படவில்லை.

அன்று மாலை அரண்மனை உத்தியானவனத்தில் வீரமா தேவியைச் சந்திப்பதற்காக விக்கிரமன் நெடுநேரமாகக் காத்திருந்தான். அங்கு வந்த பணிப்பெண்களிடமும் தான் காத்திருப்பதாகச் செய்தி கூறி அனுப்பினான். ஆனால் பாவம் ! வீரமாதேவி வரவே இல்லை !

நமக்காக அவன் காத்திருக்கிறானே என்று தெரிந்தும், இராஷ்டிரகூட இளவரசனுக்கு என்று மன்னர் முடிவெடுத்தபின் அவனைப் பார்க்கக்கூடச் செல்வது தவறு என்று அவள் உள்மனம் உணர்த்திற்று!

சேதி அறிந்த அநுபமா அவளிடம் வந்தாள்.

"என்ன என்று கேட்டு வாயேன்!"

தந்தையின் கட்டளையை மீற அவளுக்கு மனம் வரவில்லை. மறுத்து விட்டாள்.

ஆசையாக அவனுக்கு மடல் எழுதி வரச் செய்து அவன் மனத்தில் காதல் நெருப்பை ஊதி வளர்த்த அவள், இப்போது பார்ப்பதே பாவம் என‌ப் பயந்தாள் பேதை !

இருந்தாலும் ஓர் ஆண்மகனை அலைக்கழித்து விட்டோமே என்று பொருமினாள். கண்ணீர் ஆறாகப் பெருகி வடிந்ததுதான் மிச்சம் !

காத்திருந்தவன் ஏமாற்றமடைந்தான். அத்துடன் கோபத்துடனே திரும்பிச் சென்றுவிட்டான்.

**"காதலெனும் தோணிதனில் ஏறி வாழ்வுக்**
**கடலிலே மனதொன்றாய் மாறி**
**வாழலாம் இன்பமாய் என்றாய் - இப்போ**
**வருந்திநான் சென்றிடவே செய்தாய் !"**

என்று அவள் உள்ளம் அலற, கட்டிலில் உழன்றான்.

ஒரு வாரம் சென்றிருக்கும். பொன்பெருமாள் அமைச்சரைப் பார்த்தான். விவரத்தைக் கூறினான்.

அதைக் கேட்ட அமைச்சர் பூதூர் உடையான் நம்மாழ்வார் அடிகள் மன்னரைக் காண விரைந்து சென்றார்.

"மன்னர் பெருமானே! பேசி முடித்த இளவரசியின் திருமணத்தை நிறுத்துங்கள் !"

பேரரசர் பெரும் அதிர்ச்சிக்குள்ளானார்!

"பெருமானே! என்ன கூறுகிறீர்கள்?"



# 24. இராசாதித்தனின் கோபம்

அமைச்சர் மன்னரிடம் வந்து இளவரசியின் திருமணத்தை நிறுத்தக் கூறியதும் அரசர் அதிர்ச்சியடைந்தார்.

"ஏன், என்ன காரணம்?"

அமைதியே உருவான அமைச்சர் அன்று படபடவெனப் பொரிந்தார்.

"முதலில் இந்தத் திருமண உறவையே நான் விரும்ப வில்லை. எனக்கு ஏதோ சஞ்சலமாகவே இருந்தது. அது இப்போது உறுதியாகி விட்டது. இராஷ்டிரகூட நாட்டிலிருந்து எனக்குக் கிடைத்த செய்தி அதிர்ச்சி தரத்தக்கதாக உள்ளது !"

"பெருமானே! என்ன என்று கூறுங்களேன்"

"இரட்டை மண்டல இளவரசர் அழகில் மன்மதன்தான். ஆனால் குணத்தில் பண்பற்றவர்! மக்களிடம் மாறாத வெறுப்பைச் சம்பாதித்தவர்.

"ஆனால் மக்களோ இங்கு தூது வந்து சென்ற அமைச்சரான அமோகவர்ஷனையும் அவர் மகன் கிருஷ்ணனையுமே விரும்புகின்றனர்."

"அதனால் நமக்கென்ன?"

"அரசியல் சூழ்நிலை அப்படியே மாறலாம் என அச்சப்படுகிறேன்! மன்னர் இந்திரர் மறைவுக்குப்பின் மக்கள்

அமோகவர்ஷனுக்கே பட்டம் சூட்டவேண்டும், இளவரசன் கிருஷ்ணன்தான் என்று ஏகோபித்துக் குரல் கொடுத்து நிறைவேற்றினால் நம் இளவரசியை மணந்தவரின் கதி என்ன ஆவது? எதை நம்பி நம் இளவரசியை அங்கு பெண் கொடுப்பது?"

மன்னர் திகைத்தார். அமைச்சர் மேலும் தொடர்ந்தார்.

"அமோகவர்ஷன் இராஜ விசுவாசமிக்கவர்தான். அதை மனப் பூர்வமாக நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் அவர் மகன் நாடாள விரும்பினால்?

"அமைச்சர் தன் அண்ணன் மகனுக்காக நாட்டை அமைதிப் பாதையில் இட்டுச் செல்லலாம்! ஆனால் அவருக்கும் பின்னே, அங்கு என்ன நடக்கும் என்று இப்போது சொல்ல முடியாது! கோவிந்தன் கதி என்னாவது? நாடில்லாத மருமகனுக்காக நாம் மற்றும் ஒரு போர் நடத்த வேண்டியவர்களாவோம்!

"எல்லாம் யோசித்துத்தான் உங்களிடம் நான் ஓடோடி வந்தேன்! வேண்டாம் இந்தச் சம்பந்தம்,

"உள் நாட்டுக் குழப்பமுள்ள இடத்தில் நாம் ஏன் பெண் கொடுக்க முடிவு செய்ய வேண்டும்? பிறகு அவர்கள் நாடிழந்து நம்மிடமே அடைக்கலமாக வேண்டியதுதான். அதனால்...."

"அதனால், என்ன செய்யலாம்?"

"திருமணப் பேச்சை முறித்துக் கொள்ளுங்கள். அதற்குப் பதில் நம் இளவரசியைக் கொடும்பாளூர் இளவரசனுக்கே மணம் முடித்து வைக்கலாம்."

அவர் கூறியதை அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்த அரசர், அடுத்துக் கூறிய வார்த்தைகள் அமைச்சரையே திடுக்கிட வைத்தது.

"கொடுத்த வாக்கை நான் மீறமாட்டேன்! நம் இளவரசியின் தலைவிதி எப்படியோ அப்படியே நடக்கட்டும்!"

அப்படியே அமைச்சர் சிலையாக நின்றுவிட்டார். அவரால் ஒன்றும் கூற முடியவில்லை.

இனிப் பேசிப் பயனில்லை என்று விடை பெற்றுப் புறப்பட்டு விட்டார்.

பேரரசர் பொன்பெருமாளை அழைத்து வர உத்தரவிட்டார். அப்போதுதான் அரசர் பெருமானைத் தரிசிக்க அவனே அரண் மனைக்குள் பிரவேசித்தான்.

காவலன் கூறியதும் அரசரைக் காண வேகமாகக் கரு மண்ட பத்தினுள் நுழைந்தான்.

சிந்தனைவயப்பட்டிருந்த பேரரசர்முன் பவ்யமாக வணங்கி நின்றான்.

அவர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் தயங்காமல் பதில் கூறினான். ஆனால் கடைசிக் கேள்விக்கு மட்டும் அவன் தயங்க வேண்டியதாயிற்று.

அவர் கேட்ட கேள்வி இதுதான் :

"இந்த விவரம் கொடும்பாளூர் இளவரசனுக்குத் தெரியுமா?"

'ஆமாம்' என்பதா? 'இல்லை' என்பதா?

தயங்கியபடியே கூறினான்.

"அமைச்சர் பெருமானிடம் விவரம் கூறிக் கொண்டிருந்த போது அவரும் அங்கிருந்தார்!"

"சரி ! நீ போகலாம்."

வணங்கி விடை பெற்றுச் சென்றுவிட்டான்.

தன் கௌரவத்திற்குப் பங்கம் வந்துவிடுமோ என்ற கவலையில் அக்கடைசிக் கேள்வியைக் கேட்டாரோ என்னவோ?

அரண்மனை வாயிலில் ஆரவார ஒலி எழுந்தது.

"இராஜகேசரி இராசாதித்தர் வாழ்க !"

இளவரசன் இராசாதித்தன் தன் பரிவாரங்களுடன் வந்துள்ளான் என்பதை அவரும் உணர்ந்து கொண்டார்.

"இளவரசனின் தஞ்சை விஜயம் இப்போது எதற்கு?"

அவருக்கு அது வியப்பாக இருந்தது. 'ஒருவேளை தகவல் தெரிந்து வந்துள்ளானோ?'

பொன்பெருமாள் மானியகேட நகரம் செல்லுமுன் தலைநகருக்கு அமோகவர்ஷன் பெண் கேட்டுத் தூது வந்துள்ள விவரத்தையும், கொடும்பாளூர் இளவரசனை விடுத்து இராஷ்டிரகூட இளவரசனுக்கு இளவரசியை மணம் முடித்துக் கொடுக்க விரும்புவதையும் இளவரசன் காதில் போட்டு விட்டுத்தான் சென்றான்.

வரும்போது அவனைப்பற்றி அறிந்த விவரத்தையும், இராசாதித்தன் கட்டளைப்படி திருக்கோவிலூரில் கூறி விட்டுத்தான் தஞ்சை திரும்பி அமைச்சரிடம் தன் கடமையை - அவர் இட்ட கட்டளையை நிறைவேற்றினான்.

எப்படியும் அதைத் தடுத்து நிறுத்தவேண்டும் என்றே இராசாதித்தன் விரைந்து வந்தான். அதற்குள் பேரரசர் ஒப்புதல் அளித்துவிட்ட விவரம் தஞ்சை வந்தபின் அவனுக்குத் தெரிய வந்தது.

எப்படியாவது தன் தங்கைக்கு நல்வாழ்வு அமையப் பேரரசரிடம் பேசிப் பார்த்து அவர் மனத்தை மாற்றிவிட வேண்டும் என்ற முடிவோடு அவன் அரண்மனை அடைந்தான்.

மன்னர் குழப்பத்தில் ஆழ்ந்திருந்த வேளை அது. திடுமென இளவரசனே தன்முன் வந்து நிற்பான் என்பதைச் சற்றும் அவர் எதிர்பாக்கவில்லை !

தந்தையை வணங்கி நின்றவனை ஏறிட்டார்.

"நம் இளவரசியைப் பெண் கேட்டு இராஷ்டிரகூட அமைச்சர் வந்து சென்றதாக அறிந்தேன்!"

"ஆமாம் !"

"தாங்கள் என்ன முடிவு கூறினீர்கள்?"

"பெண் கொடுப்பதாக ஒப்புதல் தந்துவிட்டேன் !"

அவன் பேரரசரை ஏறிட்டுப் பார்த்தான். அவனுடைய பார்வையில் ஏமாற்றம், வருத்தம் எல்லாம் மண்டிக் கிடந்தன.

"உனக்கு அதில் விருப்பமில்லை என்று நினைக்கிறேன்."

"ஆமாம்!"

"காரணம்?"

"நம் இளவரசியை என் நண்பனும், கொடும்பாளூர் இளவரசனுமான விக்கிரமனுக்கு மணம் முடித்துக் கொடுக்கலாம் என எண்ணியிருந்தேன்! அவன் மனத்தில் அந்த ஆசையையும் வளர்த்து விட்டேன் !"

"அதைத் தவிர்க்கத்தான் இந்த முடிவு !"

"காரணத்தை நான் அறியலாமா?"

"இளவரசர்களாகிய உங்களுக்கு எல்லாம் உறவு அற்றுப் போய்விடக்கூடாது என்ற எண்ணத்தில் நம் சிற்றரசர்கள் சிலரிடம் பெண் எடுத்துள்ளோம். இனியும் எடுப்போம். ஆனால் கொடுப்பதை நம்மை ஒத்த அரச குடும்பங்களில் வைத்துக் கொள்ளவே நான் ஆசைப்படுகிறேன் !"

"அன்னையர்கள் சம்மதித்து விட்டார்களா?"

"சம்மதிக்கச் செய்து விட்டேன்!"

"எப்படி?"

"உன் அன்னையைத் தவிர ஏனைய அரசிகள் அனைவரும் சிற்றரசர்களின் குமாரத்திகள்தானே! என்பக்க நியாயத்தை அவர்களுக்கு எடுத்துக் கூறினேன். அதைக் கேட்டதும் சம்மதிக்காமல் என்ன செய்வார்கள்?"

"இரட்டை மண்டல இளவரசன்பற்றி ஏதும் அறிந்தீர்களா?"

"இல்லை ! ஏன் ?"

"இப்போது அவரைப்பற்றி நல்ல அபிபிராயம் இல்லை. மேலும் உள்நாட்டில் குழப்பநிலை உலவுவதாகச் சேதி அறிந்தேன் !"

"அதனால்?..."

"பெண் கொடுக்க இயலாது என்று தகவல் அறிவித்து விடுங்கள்!"

"ஒரு பேரரசனுக்கு இது அழகா ?"

அவர் முகத்தில் கோபம் கொப்பளித்தது.

"கொடுத்த வாக்கைக் காற்றில் பறக்கவிட்டான் கோவேந்தன் என்ற அவச் சொல் வேறு எடுக்க வேண்டுமா?"

"பெற்ற மகளின் வாழ்க்கையைவிட வாக்கு பெரிதா? வீரமாதேவியின் வாழ்வை வீணடிப்பதில்தான் தங்கள் கௌரவம் நிலை நாட்டப்படுமா?"

"நான் கொடுத்த வாக்கை மீறமாட்டேன். அது அரசர்க்கு அழகுமல்ல. விதிப்படி நடப்பது நடக்கட்டும்!"

"நாளை நாடிழந்து அவர்கள் நம்மிடம் தஞ்சம் அடைந்தால் அவர்களுக்காக மறுபடி மற்றொரு போர் தொடுக்க வேண்டி அவசியம் அல்லவா வந்து சேரும் ?"

"வீணாகக் கற்பனையில் இறங்காதே! எல்லாம் நல்லதே நடக்கும். நம்பிக்கையோடு இரு !"

அதற்குமேல் பேரரசரிடம் வாதிட்டுப் பயன் இல்லை என்று எண்ணி வணங்கிவிட்டு அந்தப்புரம் சென்றான்.

அவன் அன்னை கோக்கிழானடி, இராஜமாதா இளங்கோப்பிச்சி, வீரமாதேவி ஆகியோர் அங்கிருந்தனர்.

அவன் உள்ளே பிரவேசித்ததும் தங்கையவள் கண்ணீர் மல்க அவனருகில் வந்தாள். அவள் கைப்பிடித்து ஆறுதலாக மற்றொரு கரத்தால் தட்டிக் கொடுத்தான்.

அன்னை அருகில் இருப்பவர்தான் இராஜமாதா இளங்கோப்பிச்சி என்பதறிந்து வேண்டா வெறுப்பாக அவரை வணங்கினான்.

அவர் முகம் வாடிவிட்டது. மோப்பக் குழையும் அனிச்ச மலரோ?

"இளவரசன் இராஜாதித்தன்தானே நீ?"

"ஆமாம்!"

"இப்படி வந்து உட்கார். என்னைப்பற்றித் தவறான எண்ணத்துடன் இருக்கிறாய் என்று எண்ணுகிறேன்!"

அவன் பதில் கூறாமல் அடுத்த ஆசனத்தில் தங்கையின் கையைப் பிடித்துச் சென்று அமர்ந்தான்.

அவன் பதில் கூறாவிட்டாலும் அது 'ஆம்' என்பதற்கு அறிகுறிதான் என்பதை அவர் அறிந்துகொண்டார்.

"நான் பழைய சோழப் பேரரசி இளங்கோப்பிச்சி அல்ல. என் பிழை உணர்ந்து பேரரசரிடம் பேச வந்துள்ளேன். பேத்தியை இராஷ்டிரகூடப் பேரரசன் மகனுக்குப் பேசி முடிக்கலாம் என்று அமைச்சரையும் உடன் அழைத்து வந்தேன் !"

"பெண் கேட்டு வந்ததைப் பிழை என்று சொல்லவில்லை. ஆனால் அங்குள்ள நிலவரத்தைப் பேரரசரிடம் மற்றும் என் அன்னையர்களிடம்கூடக் கூறவில்லையே, ஏன்? இளவரசனைப் பற்றியும் நல்ல அபிப்பிராயம் நாட்டில் இல்லையே! அப்படிப் பட்டவனுக்கா நம் இளவரசியை மணமுடிக்க ஆசை கொண்டீர்கள்?"

"இராஜாதித்தா ! நீயும் என் பேரன்தான். ஒன்று சொல்கிறேன். கேட்கிறாயா?"

"கூறுங்கள் !"

"நீ இங்கு ஒருவன் மட்டும் பிறக்காமல் மேலும் மூவருடன் பிறந்துள்ளாய். நீ ஒருவனாகவே இருந்திருந்தால் உன் அன்னைமார்கள் செல்லம் கொடுத்துச் சீராட்டிக் கெடுத்திருப்பார்கள் அல்லவா?

"அப்படித்தான், இரட்டை மண்டல இளவரசன் ஒரே பிள்ளை. வருங்காலத்தில் நாட்டை ஆள வேண்டியவன். செல்லம் கொடுத்து வளர்த்ததால் அப்படி ஆகிவிட்டான். நம் இளவரசி போய் அவனை நல்வழிப்படுத்தட்டும். நானும் கூட இருந்து நம் குழந்தையைக் கண் இமைபோல் காப்பேன்!"

"அது போகட்டும்! நாட்டிலே குழப்பநிலை அங்கு உருவாகி இருப்பதாக அறிகிறேன்!"

"பேரரசன் தம்பி மகன் கிருஷ்ணன் மக்கள் மத்தியில் நல்ல பெயர் எடுத்து வருகிறான். ஆட்சியைக் கைப்பற்றலாம் என்ற ஆசை அவனுக்கு இருக்கலாம். ஆனால் அரசரோ, அமோக வர்ஷனோ அப்படி விடமாட்டார்கள். நானும் விட்டுவிட மாட்டேன் !"

இராஜாதித்தன் இகழ்ச்சியாகச் சிரித்தான். இளங் கோப்பிச்சியோ குழப்பமடைந்தாள்.

"நாட்டில் மக்களின் நாடி பிடித்துப் பார்க்க அரச குடும்பத்தார் இனிமேலாவது கற்றுக் கொள்ளுங்கள் !"

வேகமாக எழுந்து வெளியேறினான். பேசாமல் அதுவரை இருந்த பேரரசி பிரமித்து நின்றாள். வீரமாதேவியோ எழுந்து தன்னிடம் ஒன்றும் கூறாமல் செல்லும் அண்ணனைப் பின்பற்றி ஓடி வந்தாள்.

"அண்ணா !"

அவன் அப்படியே நின்றுவிட்டான்.

"தாங்களும் ஒன்றும் கூறாமல் செல்கிறீர்களே!"

தங்கையை ஏறிட்டுப் பார்த்தான். அவள் வாழ்வில் வசந்தம் வீச அண்ணனால் ஒன்றும் செய்ய இயலாமல் போய்விட்டதே என்று வருந்தியவன் அவள் கரம் பற்றிக் கொண்டான்.

"வீரமாதேவி ! என்னால் இயலவில்லை!"

அவள் திடுக்கிட்டாள்.

"உன் திருமணத்தைத் தடுத்து நிறுத்தும்படி கூறவே ஓடோடி வந்தேன் ! எவ்வளவோ கூறி மன்றாடினேன்! ஆனால் தந்தையோ கொடுத்த வாக்கை மீறமாட்டேன் என்று கூறிவிட்டார்கள் ! நடப்பது விதிப்படி நடக்கட்டும் என்று பிடிவாதமாக உள்ளார்கள். அண்ணனால் ஒன்றும் செய்ய முடியாமல் போய்விட்டதே ! நான் இனி என்ன செய்ய இயலும்?"

"அப்படி என்றால் எனக்கு?..."

"உன் விதி எப்படியோ, அப்படியே நடக்கட்டும் ! ஆனால் உன் அண்ணன் உயிர் உள்ளவரை உன் கண் கலங்காமல் காப்பேன். அது மட்டும் உறுதி ! ஆனால் இது நம் தந்தை எடுத்த முடிவு ! இதை இனி நம்மால் மாற்ற முடியாது ! வருகிறேன் !"

அவள் கரங்களைத் தட்டிக் கொடுத்தவன் அவள் முகம் பார்க்காமலே சென்றான்.

எங்கே தன் கண் கலங்குவதை அவள் பார்த்து விடுவாளோ என்ற தவிப்பில் விரைந்தான்.

அவன் செல்வதையே வீரமாதேவி கலங்கும் கண்களுடன் பார்த்துக்கொண்டு அங்கேயே நின்றுவிட்டாள்!

அண்ணன் உதவிக்கு வருவான் என்று எதிர்பார்த்த அவளது ஆசையிலும் மண் விழுந்து விட்டதே!



# 25. அமைச்சரின் சீற்றம்

இளவரசன் இராஜாதித்தன் தலைநகர் திரும்பியுள்ளான் என்பதறிந்த விக்கிரமன் அவனைப் பார்க்க இளவரசன் மாளிகைக்கு விரைந்தான்.

“வா, நண்பா ! வா !”

அவனை வரவேற்றான்.

சில கணங்கள் இருவரிடத்திலும் இறுக்கமான சூழ்நிலை. முதலில் விக்கிரமனே அதை உடைத்தான்.

“இளவரசர் தலைநகர் திரும்பி விட்டார் என்ற செய்தி கேட்டு ஓடோடி வந்தேன்.”

“என்ன காரணமாக இருக்கும் என்று நினைக்கிறாய்?”

“தெரியாது !”

“பொன்பெருமாள் செய்தி கொண்டு வந்தான். புறப்பட்டு நான் வந்தேன்.”

தனக்காகத்தான் இளவரசன் வந்துள்ளான் என்று எண்ணிய விக்கிரமன் பெருமிதம் கொண்டான்.

“பேரரசர் தரிசனம் கிட்டியதா?”

“உம்!”

“பேசினீர்களா?”

"உம்!"

"அவர் முடிவை மாற்றிவிட்டீர்களா?"

இளவரசனிடமிருந்து நீண்ட பெருமூச்சே அதற்குப் பதிலாக வெளிவந்தது.

பதில் என்னவாக இருக்கும் என்பதை விக்கிரமனும் உணர்ந்து கொண்டான். எனவே, மேற்கொண்டும் இளவரசனிடம் எதுவும் கேட்க வேண்டாம் என்ற முடிவுக்கும் வந்தான்.

ஆனால் இராசாதித்தன் கூறத் தொடங்கினான்.

"பேரரசர் கொடுத்த வாக்கை மீறமாட்டேன் என்று பிடிவாதமாக உள்ளார்! விதிப்படி வீரமாதேவிக்கு நடப்பது நடக்கட்டும் என்ற முடிவோடு உள்ளார்கள் ! நாம் என்ன சொல்வது?"

விக்கிரமன் விக்கித்து நின்றுவிட்டான்.

அவன் நிலை உணர்ந்த இளவரசன், அவன் தோளைத் தட்டிக் கொடுத்தான்.

"நண்பா! நடப்பது நடக்கட்டும். நாளையே நான் திருக்கோவிலூர் புறப்படுகிறேன். கொடும்பாளூரில் உனக்கு வேலை இல்லையே?"

"இல்லை!"

"அப்படியானால் நீயும் என்னோடு புறப்படு. இங்கிருந்தால் உன் மனநிலை பாதிக்கும். நாளை புறப்படுவதற்குத் தயாராக இரு !"

விக்கிரமன் விடை பெற்றுப் புறப்பட்டான்.

xxxxxxxxxxxxx

இராஷ்டிரகூட நாட்டின் தலைநகரான மானியகேட நகரில் அமோகவர்ஷனின் மாளிகை அது. அவரது மகனான கிருஷ்ணன் உலாவிக் கொண்டிருந்தான். அவன் யார் வரவையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

அப்போது உப தளபதி ஜெனமேயன் படிகளில் ஏறி

வருவதைக் கண்டு பரபரத்தான். புன்முறுவல் பூக்க அவரை வரவேற்றான்.

"வணக்கம் இளவரசே !"

"படைமுகம் சென்ற காரியம் என்ன ஆயிற்று?"

"பூரண வெற்றி போலத்தான்!"

"மக்கள் மனநிலை மாறவில்லையே?"

"அவர்கள் என்றும் தங்கள் பக்கம்தானே!"

"என்ன செய்யலாம்?"

"தாங்கள் மனம் வைத்தால் காரியம் கைகூடும்!"

"என் தந்தையார்தான் தடையாக உள்ளாரே?"

"இளவரசே ! பந்தபாசத்துக்கு இங்கு இடமில்லை!"

"சரி ! காரியத்தைக் கச்சிதமாக முடியுங்கள் !"

"தாங்கள் என்மேல் கருணை வைக்க வேண்டும் !"

"பதவி தானாக உம்மை வந்து சேரும். கவனமிருக்கட்டும்!"

"உத்தரவு இளவரசே!"

ஒரு பண முடிப்பு இளவரசனிடமிருந்து கைமாறியது.

திரை மறைவில் நின்ற உருவம் இக்காட்சியைக் கண்டு திடுக்கிட்டது. ஓசைப்படாமல் வெளியேறிச் சென்றும் விட்டது.

வேகமாக விரைந்தது.

அரசர் இந்திரர் கருமண்டபத்தில் இருக்கும்போது அது அங்கிருந்த காவலையும் தாண்டி உள்ளே சென்று விட்டது.

அவசர - அவசிய நிமித்தம் அது உள்ளே செல்லும்போது யாரும் தடுப்பதில்லை. அதன் வரவைக் கண்ட அரசர் இந்திரர் வியப்புடன் நோக்கினார்.

பணிந்து நின்றது.

"முகுந்தா ! இத்தனை அவசரம் என்ன?"

மெல்லிய குரலில் தான் வந்த காரணத்தை உரைத்தான்.

ஏனெனில், அரண்மனைச் சுவர்களுக்கும் காது உண்டு என்று அறிந்தவன் அவன்.

அவன் கூறிய தகவலைக் கேட்டு அதிர்ச்சியடைந்தார் மன்னர். கவலை ரேகைகள் படர ஆரம்பித்தன.

மன்னர் பதிலை எதிர்பார்த்து முகுந்தன் பணிவுடன் நின்றான். "கட்டளை என்னவோ?"

"உம்!... அப்படியா?"

நீண்ட பெருமூச்சு வெளிப்பட்டது.

"அதை நான் பார்த்துக் கொள்கிறேன். அவர்கள்மீது எப்போதும் உன் கவனம் இருக்கட்டும்."

"உத்தரவு பெருமானே!"

இராஷ்டிரகூட ஒற்றன் முகுந்தன் பணிந்து வணங்கிச் சென்றுவிட்டான். பேரரசர் அந்த மண்டபத்தில் குறுக்கும் நெடுக்குமாக நடை பழக ஆரம்பித்தவர்போல நடந்தார். வீரர்கள் வியந்து பார்த்தனர்.

'என் தம்பியின் மகனே புரட்சியில் இறங்கி விட்டானா? அமோகவர்ஷனின் அரச விசுவாசம்தான் இத்தனை நாளும் நாட்டில் அமைதி காத்து வருகிறது. பிறகு அவன் மனமும் மாறினால்?'

'ஊஹூம்!.... அப்படி மாற மாட்டான்!

'கோவிந்தன் குணம் மாறவில்லையே ! மது - மாது மயக்கத்தில் இருந்தால், மன்னன் நான் என்ன செய்வது? வஞ்சியரிடம் கொஞ்சுமொழி பேசி மஞ்சத்தில் புரண்டால் வஞ்சிப்போர் கிளம்பாமல் என்ன செய்வார்கள்?

'உம், சோழச் சக்கரவர்த்தி பெண் கொடுக்கச் சம்மதித்து விட்டால் என் கவலை தீர்ந்தது. மருமகனை அவர் கவனித்துக் கொள்வார் என்று கவலை இன்றிக் கண் மூடலாம்!'

அரண்மனை வாசலில் ஆரவாரம் கேட்டது.

'என்னவாக இருக்கும்? அப்படியும் இருக்குமோ?'

பதற்றம் கொண்டார்.

'வருவது வரட்டும் !'

மனத்தைத் தேற்றிக் கொண்டார்.

"அமைச்சர் வருகிறார்!"

கட்டியம் கூறுவோன் வார்த்தைகள் அவர் காதில் விழுந்தன.

'தம்பி வருகிறானா?'

இரட்டிப்பு மகிழ்ச்சி அவருக்கு.

பேரரசரை வணங்கினார் அமோகவர்ஷன். அவர் முகத்தில் மகிழ்ச்சிக் களை தாண்டவமாடியது! சற்று நேரத்தில் மன்னருக்கு ஏற்பட்ட கவலை மறைந்து விட்டது !

'தம்பி உடையான் படைக்கஞ்சான். அத்தோடு அவன் அமைச்சனாகவும் வாய்த்துவிட்டால். 'இராமனுக்குத் தம்பி இலட்சுமணன் வாய்த்ததுபோல தனக்கும் ஒரு தம்பி வாய்த்துள்ளானே!'

தைரியம் பிறந்தது !

"அரசே ! சந்தோஷச் செய்தியுடன் வந்துள்ளேன்!"

"அப்படியா! சக்கரவர்த்தி சம்மதித்து விட்டாரா?"

"ஆமாம் ! பெண் கொடுக்க இசைவு தெரிவித்து விட்டார்! திருமண நாளும் குறித்தாகி விட்டது. இன்னும் இருபதே நாளில் தஞ்சையில் இந்த வைபவம். நாம் இப்போதே தயாராக வேண்டும்!"

"மிக்க சந்தோஷம்!"

அவர் மனத்தில் இருந்த பாரம் குறைந்து விட்டது.

"சோழ இராஜமாதாவை, பேரரசரும், அரசிகளும் பிரியமுடன் வரவேற்றனர். அவர் கூறிய இனிய வார்த்தைகளிலே சக்கரவர்த்தியும் இசைவு தெரிவித்து விட்டார் !

"சிற்றரசர்கள் சிலர் தங்கள் குடும்பத்தில் மண உறவு கொள்ள விரும்பியிருந்தனர் போல. ஆனால் அதையெல்லாம் மீறி, முறிந்துபோன உறவு மீண்டும் தொடரவேண்டும் -

இருபெரும் சாம்ராஜ்யங்களும் இந்தப் பந்தத்தால் பலப்பட வேண்டும் என்ற நெடிய நோக்குடன் அவர் இந்தத் திருமணத்துக்கு ஒப்புக்கொண்டார் !"

அமோகவர்ஷன் கூறியது அத்தனையும் பொறுமையுடன் கேட்ட பேரரசர், நீண்ட பெருமூச்சுடன் எங்கோ பார்வையைச் செலுத்த ஆரம்பித்தார்.

அவரது நிலை கண்டு வருந்தினார் அமைச்சர்.

'தான் தலைநகரில் இல்லாத சமயம் தன் தமையன் மனத்தை ஏதோ ஒன்று பாத்தித்துள்ளது. வருந்தத்தக்க செய்தி வாட்டத் தொடங்கி விட்டது ! 'என்னவாக இருக்கும்?'

"அரசே ! ஏதோ வருத்தமுடன் உள்ளீர்கள்போல ! எது தங்கள் மனத்தைத் தாக்கியது ? தயங்காமல் உங்கள் தம்பியிடம் கூறுங்கள்!"

"தம்பி !"

பாசத்துடன் அமோகவர்ஷனின் கரங்களைப் பற்றினார்.

கண்களும் கலங்க ஆரம்பித்தன.

பதறிவிட்டார் அமைச்சர்.

"என்ன அண்ணா?"

பாசத்தில் ஒலித்த தம்பியின் குரலில் இந்திரர் நெகிழ்ந்து விட்டார்.

"எனக்கு எதிராக - என் மகனுக்கு எதிராக இங்கு சதி நடப்பதாக நான் அறிகிறேன் !"

"என்ன, சதியா?"

"ஆமாம் !"

"சதியை நான் முறியடிக்கிறேன்!"

"தம்பி ! நீ எனக்கு ஒரு வரம் தரவேண்டும் !"

பேரரசரே தன்னிடம் கெஞ்சும் அவல நிலை அங்கு வந்துவிட்டதே என்று பதறிய அமோகவர்ஷனின் கண்களும் கலங்கி விட்டன!

"வரம் என்று கேட்காதீர்கள். என்ன என்று கட்டளை யிடுங்கள். தங்கள் காலால் இட்ட பணியைத் தலையால் ஏற்று உங்கள் தம்பி செய்கிறேன்! என் உயிர் உள்ளவரை உங்களுக்கு ஓடாய் உழைப்பேன். இது உறுதி. உங்களுக்கு எதிராக நான் இருக்க மாட்டேன்! இது சத்தியம் !"

"கிருஷ்ணனே கிளர்ச்சி செய்யக் கிளம்பி விட்டான் !"

"என்ன ! என் மகனா ?"

"ஆமாம் !"

அவர் உடல் பதறியது. அமைச்சர் வந்துவிட்டார் என்பது தெரிந்த ஒற்றன் முகுந்தனும், அங்கு விரைந்து வந்து கருமண்டப வாசலில் காத்து நின்றான்.

மன்னர் கைதட்டி அழைத்தார் அவனை!

வந்த முகுந்தன் இருவரையும் வணங்கி நின்றான்.

"இதோ இவனைக் கேள்!"

அவனும் தான் கண்டவற்றை ஒன்று விடாமல் கூறினான்.

"உபதளபதியும் இதற்கு உடந்தையா?"

"ஆமாம் ! இப்போதே சென்று முதலில் அவரைச் சிறைப் பிடிப்பது நல்லது !"

ஒற்றன் முகுந்தன் கூறியதுதான் தாமதம்.

"யாரங்கே?"

அமோகவர்ஷன் கர்ஜித்தார்!

பத்துப் பன்னிரண்டு காவலர்கள் ஓடி வந்து வணங்கி நின்றனர்.

"என்னோடு புறப்பட்டு வாருங்கள்!"

வேகமாக அழைத்துக் கொண்டு புறப்பட்டார் அரசிடம் விடை பெறாமல்கூட.

உபதளபதியின் மாளிகை நோக்கி அமைச்சரே வீரர்களுடன் விரைந்து செல்வதை எல்லோரும் வியந்து பார்த்தனர்.

அமோகவர்ஷனே தன் மாளிகைக்குள் அவசரமாகப் பிரவேசிப் பதைக் கண்ட உபதளபதி பதறிவிட்டார்!

"வணக்கம், பெருமானே!"

"எதற்காக நான் இங்கு வந்திருக்கிறேன் தெரியுமா?"

"தெரியாது !"

உபதளபதி மென்று விழுங்கினார்.

"மன்னருக்கு எதிராகச் சதியா? அதற்கு நீரும் உடந்தையா?"

உபதளபதி ஜெனமேயன் திடுக்கிட்டார். அக்கேள்விக்குப் பதில் ஒன்றும் கூற முடியவில்லை அவரால்.

"சிறைப் பிடியுங்கள் இவனை !"

வீரர்களுக்கு அமோகவர்ஷன் கட்டளையிட்டார். உரையாடிக் கொண்டிருக்கும்போதே வீரர்கள் ஜெனமேயனைச் சூழ்ந்து நின்றனர்.

சிறை செய்ய அமைச்சர் கட்டளையிட்டபோது உபதளபதியின் கை வாளைத் தொட நெருங்கியது. அதற்குள் உஷாரான பின்பக்கம் நின்ற காவலன் ஒருவன் அந்த வாளை உருவிக் கொண்டான்.

நிராயுதபாணியாகி விட்டதால் காவலர்கள் எளிதில் அவனைச் சிறைப்பிடித்து விட்டனர்.

"சிறையில் தள்ளுங்கள் இந்தத் துரோகியை!"

"பெருமானே ! தங்களுக்கும், தங்கள் திருக்குமாரருக்கும் விசுவாசமானவன் நான் !"

கெஞ்சினார் ஜெனமேயன். ஆனால் அமைச்சரோ சீறினார்.

"விசுவாசம் ! அதை யாரிடம் நீ வைக்க வேண்டும் ? மன்னரின் உப்பையே தின்று அவருக்கே துரோகம் செய்வதா? என்னிடமா விசுவாசம் காட்டுகிறாய்? நானும் அந்த உப்பைத் தின்பவன்தான் தெரியுமா? இழுத்துச் செல்லுங்கள் துரோகியை!"

வீரர்கள் சிலர் இழுத்துச் சென்றனர்.

அடுத்து அமோகவர்ஷன் தன் மாளிகை நோக்கிப் புயல் எனப் புறப்பட்டார். வீரர்கள் பின்பற்றி விரைந்தனர்.

தூரத்தே தன் தந்தை வருவதைக் கண்டுவிட்டான் கிருஷ்ணன்.

'அதற்குள் தஞ்சையிலிருந்து திரும்பி விட்டாரா?'

வியப்புடன் அவரை எதிர்கொள்ள எழுந்தான்.

'அவர் கூட வீரர்கள் சிலரும் வேகமாக வருகிறார்களே!'

அவன் புருவம் நெறிந்தது !

"வணக்கம் ! தந்தையே ! தஞ்சை விஜயம் என்ன ஆயிற்று? வெற்றிதானா உங்களுக்கு ?"

"வெற்றிதான் அது ! இப்போது தந்தைக்கும் மகனுக்கும் பாசப் போர் ஒன்று நிகழ்கிறதே, அது தெரியுமா உனக்கு ? அதிலும் வெற்றியே பெறுவேன் !"

ஒன்றும் புரியாமல் தந்தையை அவன் ஏறிட்டான்.

"புரியவில்லையே தந்தையே !"

"புரிய வைக்கிறேன் ! மன்னருக்கு எதிராகச் சதி செய்யும் சண்டாளர்களைக் களை எடுக்கவும் வந்துள்ளேன் ! அது தெரியுமா என்னவென்று ?"

"தந்தையே !"

"நிறுத்து ! நான் பெற்ற பிள்ளையா இப்படி நடப்பது ? என்னால் நம்ப முடியவில்லை ! உன்னைச் சிறைப்பிடித்துச் செல்லவே இப்போது இங்கு வந்துள்ளேன்! உம் நடக்கட்டும்!"

வீரர்களை அவர் நோக்கவும், அவர்கள் கிருஷ்ணனை நெருங்கினர். கிருஷ்ணன் அப்படியே நின்றுவிட்டான்.



# 26. பூதுகன் தலையீடு

“உன்னைச் சிறைப்பிடிக்கவே இப்போது நான் இங்கு வந்துள்ளேன். உம் ! நடக்கட்டும்!”

அவர் வீரர்கள் பக்கம் திரும்பவும், அவர்கள் கிருஷ்ணனை நெருங்கினர். தந்தையே தன் மகனைச் சிறைப்பிடிக்க வருவார் என்பதை அவன் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. பிரமை பிடித்து அப்படியே நின்றுவிட்டான்.

காவலர்கள் தங்கள் கடமையைச் செய்தனர். கையிலே விலங்கு மாட்டப்பட்டது கண்டு அவனுக்குக் கோபம் வரவில்லை! இகழ்ச்சியுடன் பேச ஆரம்பித்தான்.

“தந்தையே ! மகனைக் கைது செய்யும் கைங்கர்யம் இங்கேதான் நடக்கிறது! மகனுக்குத் தாங்கள் செய்யும் உதவி இதுதானோ?”

“நிறுத்து! அப்பன், மகன் என்ற பாசம் இத்தோடு அறுந்து விட்டது! ஒரு கைதியிடம்தான் இப்போது நான் பேசுகிறேன். தகப்பன் சொல்லை மீறும் பிள்ளைகளுக்கு இதுதான் கதி !”

“குற்றமென்ன நான் செய்தேன் ?”

“மன்னருக்கு எதிராகப் புரட்சி நடத்தச் சதி செய்துள்ளாய்!”

“மன்னர் மக்களின் காவலராக இருக்க வேண்டும்! பெற்ற பிள்ளை செய்யும் அட்டூழியங்களை அடக்கத் தெரியாத அவரும் ஒரு மன்னரா?”

"வரம்பு மீறிப் பேசாதே !"

"மக்கள் வரம்பு மீறிப் போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது ஒரு மன்னரது கடமை! அதை மன்னர் நிறைவேற்றத் தவறிவிட்டார். ஆனால் சிறந்தவர்கள் - உயர்ந்தவர்கள் நாம்தான் என்று நம் பக்கம் மக்கள் பார்வை திரும்பியுள்ளது. இது நமக்குக் கிடைத்த பாக்கியம். ஆனால் எனக்குக் கிடைத்த வெகுமதி இதுதான்போல! இன்று நான் ! நாளை உங்களுக்கும் இதே கதிதான் ! இதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்!"

"இழுத்துச் செல்லுங்கள் !"

கர்ஜித்தார் அமோகவர்ஷன் !

மக்கள் கூட்டம் கூடிவிட்டது.

"இது அநீதி ! அக்கிரமம் ! எங்கள் இளவரசரை விடுதலை செய்யுங்கள்!"

கூக்குரல் அதிகரித்தது.

"நிறுத்துங்கள்! இவன் என் மகன்! தவறு செய்தால் தண்டிப்பதும் என் கடமை ! அரசர் பெருமானை எதிர்த்துக் கிளர்ச்சி செய்பவரை ஒடுக்குவதும் ஓர் அமைச்சனின் பொறுப்பும்கூட! கலைந்து செல்லுங்கள் !"

கிருஷ்ணன் இகழ்ச்சியுடன் தந்தையைப் பார்த்தான். கண்கள் கலங்க அவன் இழுத்துச் செல்லப்படுவதை அவர் பார்த்துக் கொண்டிருந்தார்.

"இன்று நான் ! நாளை உங்களுக்கும் இதே கதிதான் !"

மகன் கூறிய வார்த்தைகள் காதுகளில் ரீங்காரமிட்டன. ஒருவாறு மனம் தேறித் தன் கடமையை முடித்து வந்த செய்தியை மன்னரிடம் தெரிவிக்க அரண்மனை விரைந்தார்.

உபதளபதி ஜெனமேயன், இளவரசன் கிருஷ்ணன் இருவரும் சிறைப்பிடிக்கப்பட்ட செய்தி முன்னமேயே மன்னருக்குச் சென்று விட்டது.

அமோகவர்ஷன் அங்கு சென்றதும் தன் தம்பியின் கரங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார் மன்னர்.

"தம்பி ! நாங்கள் தஞ்சை சென்று திருமணம் முடித்து வரும்வரை நீதான் ஆட்சிப் பொறுப்பைக் கவனித்து வரவேண்டும் ! உன்னையே நம்புகிறேன் !"

"மங்களகரமாகச் சென்று வாருங்கள் அரசே ! உங்கள் உப்பைத் தின்று வளர்ந்த இந்த ஜீவன் உயிர் உள்ளவரை உங்களுக்காகப் பாடுபடும்!"

திருமண நாள் பத்து நாட்கள் இருக்கும்போதே அரசர் இந்திரர், தன் மகன் கோவிந்தனோடு தன் பரிவாரம் சூழத் தஞ்சை புறப்பட்டுச் சென்றார்.

அவர்கள் புறப்பட்ட வேளையில் கங்க நாட்டுத் தலைநகர் 'மன்னே'யில் பூகம்பம் வெடித்தது.

கங்க மன்னன் பூதுகன், அமோகவர்ஷனின் மகளும் கிருஷ்ணனின் சகோதரியுமான குந்தளதேவியை மணம் புரிந்திருந்தான்.

தன் மைத்துனன் மன்னனானால் தனக்கு என்றும் பாதுகாப்பு - நன்மை என்று கணக்குப் போட்டவன்! நாட்டில் நிலவிய சூழ்நிலையைக் கிருஷ்ணனுக்குச் சாதகமாக்க அவனுக்கு அடிக்கடி உபதேசம் வேறு செய்தவன்.

'வருங்காலத்தில் இரட்டை மண்டலத்தில் மன்னனாக முடி சூடப் போகும் மைத்துனன் சிறையிலா?'

'தந்தையே மகனைச் சிறையில் தள்ளுவதா? பெற்றவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா?'

அமோகவர்ஷனுக்குக் காட்டமாக பூதுகன் மடல் ஒன்றை அனுப்பி வைத்தான்.

"கிருஷ்ணதேவன் நாட்டை ஆளத் தகுந்தவன். மக்கள் அவனையே விரும்புகின்றனர். கங்க நாடும் அவனுக்கே ஆதரவு தெரிவிக்கிறது.

"கங்க நாட்டு எதிரியான சோழனோடு மண உறவு கொள்ளும் இராஷ்டிரகூட மன்னரும் இனி எனக்கு எதிரிதான்.

"இதையே எச்சரிக்கையாகக் கொண்டு உடனே கிருஷ்ணனை விடுவிக்க வேண்டும். இல்லையேல் பின்னால் ஏற்படும் விளைவுகளைச் சந்திக்க நேரிடும் !"

தனது மருமகனான கங்க மன்னனின் மடல் கண்டு அமோகவர்ஷன் ஒரு கணம் மலைத்தாலும், அதற்கு அசைந்து கொடுக்கவில்லை.

'அடுத்த நாட்டு விவகாரத்தில் இவர் என்ன மூக்கை நுழைப்பது?'

கிருஷ்ணன் அடைபட்ட சிறையின் காவலைப் பலப்படுத்தினார்.

கோபம் கொண்ட பூதுகன் காய்களை நகர்த்த ஆரம்பித்தான்.

xxxxxxxxxx

தஞ்சையில் கோலாகலமாக இளவரசி வீரமாதேவிக்கும், இராஷ்டிரகூட இளவரசன் கோவிந்தனுக்கும் திருமணம் நடந்தேறியது.

தன் எண்ணப்படி - தான் விரும்பியவரை மணக்க முடியவில்லையே - இளவரசிகள் எல்லாம் சதுரங்கக் காய்கள் ஆகவேண்டியதுதானா என்ற எண்ணக் குமுறல்களுடன் கண்கள் கலங்க மணப்பெண்ணாக அவள் வீற்றிருந்தாள்.

ஆண் அழகனாக - முருகவேளை ஒத்த பேரழகனாக மாப்பிள்ளை அமர்ந்திருப்பதைக் கண்டு வந்தவர்கள் எல்லாரும் வியந்து பாராட்டினர்.

வீரமாதேவியை அரசிகளும், அநுபமாவும் தேற்றியிருந்தனர். பேரரசிக்கோ தன் மகள் விரும்பிய மணமகனை வரிக்க முடியவில்லையே என்ற வருத்தம்தான்.

எல்லாவற்றிலும் மேலாக இத்திருமண விழாவில் பங்கு கொள்ளாமல் இளவரசன் இராசாதித்தன் புறக்கணிப்பதுபோல தங்கையின் திருமணத்திற்கு வரவே இல்லை.

பேரரசர் பராந்தகருக்கோ தான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றவேண்டுமே என்ற வைராக்கியத்தில் அரசிகள்,

இளவரசிகள், குறிப்பாக இராசாதித்தன் ஆகியோரின் வேண்டுகோளை ஏற்க முடியவில்லையே என்ற வேதனை!

எப்படியோ வீரமாதேவி, கோவிந்தனின் மனைவி என ஆகிவிட்டாள்.

மணமக்கள் புறப்படத் தயாராகிவிட்டனர். இராஜமாதா இளங்கோப்பிச்சியும் அவர்களுடன் புறப்பட்டார்.

புறப்படும் முன்பு வீரமாதேவி பேரரசர் பாதங்களில் விழுந்து வணங்கினாள்.

வாரி எடுத்து அணைத்துக் கொண்டார்! அவர் ஒரு பேரரசர்தான்! என்றாலும் ஒரு பெண்ணின் தந்தை அல்லவா? பெற்று வளர்த்த பெண்ணைப் பிரியப் போகிறோமே என்ற கவலையில் கண்கள் பனித்தன!

"பேரரசே!"

தன் மகள் அப்படி அழைத்ததும் பராந்தகர் பதறிவிட்டார்.

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? கொடுத்த வாக்கைக் காப்பாற்ற, கௌரவத்தை நிலைநாட்ட நீங்கள் என்னைப் பலி கொடுத்து விட்டீர்கள்!"

பராந்தகர் பதில் ஏதும் கூறவில்லை.

"அநுபமாவையாவது அவள் விரும்பும் இடத்தில் மணம் முடித்துக் கொடுப்பீர்களா? இதுதான் நான் கேட்கும் வரம்."

தன மகளை உச்சி முகர்ந்தார்.

"உன் விருப்பத்தை நான் என்ன விலை கொடுத்தாவது நிறைவேற்றுவேன். சென்றுவா மகளே! சோழர் பெருமையை நிலைநாட்டுவாய் என்று நம்புகிறேன்!"

"உங்கள் பெண் நிச்சயம் நிலைநாட்டுவாள்!"

எங்கோ இருக்கும் கொடும்பாளூர் இளவரசன் விக்கிரமனிடத்தில் மனத்தால் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு தேரில் ஏறினாள் சோழ இளவரசி!

இராஜமாதா பராந்தகரிடம் விடை பெற்றார்.

"அன்னையே! உங்கள் பொறுப்பில் இளவரசியை நான் ஒப்படைக்கிறேன். கலங்காமல் கவனித்துக் கொள்ள வேண்டியது தங்கள் பொறுப்பு!"

"பேரரசே! கவலை வேண்டாம்! என் பேத்திக்காகவேதான் நான் மறுபடி மானியகேடத்திற்கு மனமின்றிப் புறப்படுகிறேன். இளவரசியைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். மன்னரும், அமைச்சரும் எனக்குப் பக்கபலமாக இருப்பார்கள்!"

அரசர் இந்திரர் பரிவாரம் மணமக்களுடன் தஞ்சையிலிருந்து புறப்பட்டுச் சென்றது. அது மறையும்வரை பேரரசர் பராந்தகர் அரண்மனை வாயிலில் நின்று கொண்டிருந்தார்.

பேரரசி கோக்கிழானடி தன் மாளிகை சென்றவள் சயன அறையில் மஞ்சத்தில் படுத்துக் கொண்டு 'கோ' என மனம் விட்டு அழுதாள்! மகளைப் பிரிந்த துக்கத்தைவிட அவளுக்கு நல்ல வாழ்க்கையை அமைத்துக் கொடுக்க முடியவில்லையே என்ற வேதனை விம்மல்களாக வெடித்தன!

'எப்படி ஆசை ஆசையாக வளர்த்தேன்! சகல கலைகளையும் கற்பித்ததை அப்படியே கற்றுக் கொண்ட கண்மணி அங்கு எப்படி வாழப் போகிறாளோ?'

வெகுநேரம்வரை அவள் வெளியே வரவில்லை.

xxxxxxxxxx

மணமக்கள் மானியகேட நகரம் சென்ற வேளை அரண்மனை அல்லோலகல்லப்பட்டது.

பூதுகன் மூலமாகக் கிருஷ்ணனுக்கு விசுவாசமான படைத்தலைவர்கள் உதவியுடன் மன்னர் பரிவாரம் தலைநகரம் சென்று சேரும்முன் கிருஷ்ணன் சிறையிலிருந்து எப்படியோ தப்பித்து விட்டான்!

சிறைக் காவலர்கள் சிலர் காயம் பட்டுக் கிடந்தனர். அதைக் கண்ட அமைச்சர் அமோகவர்ஷன் அதிர்ச்சியடைந்தார்.

இத்தனைக் கட்டுக் காவலையும் மீறி அவன் தப்பித்துச் செல்ல முடியும் எனறால், அவனுடைய பலம் அரண்மனைவரை பரவியிருக்கிறது என்பதை அவர் உணர்ந்து கொண்டார்!

பேரரசருக்கு என்ன பதில் கூறுவது?

அரண்மனை வாயிலில் ஆரவாரம்! மன்னர் இந்திரர், மணமக்கள், இளங்கோப்பிச்சி எல்லாரும் தேர்களில் இருந்து இறங்கிக் கொண்டிருந்தனர்.

அமைச்சர் அரசரை வணங்கினார். அவர் முகத்தில் மகிழ்ச்சிக் களை இல்லையே!

"தம்பி! என்ன வாட்டம்? சந்தோஷத்துடன் வந்து கொண்டிருக்கும் எங்களை இன்முகம் கொண்டு வரவேற்பாய் என்று நான் நினைத்தால்......"

"அரசே! அசம்பாவிதம் ஒன்று நள்ளிரவில் நடந்துவிட்டது!"

"என்ன?"

"கிருஷ்ணன் சிறையிலிருந்து எப்படியோ தப்பித்து விட்டான்!"

இந்திரர் தன் தம்பியைச் சந்தேகத்துடன் நோக்கினார். அது கண்டு அமோகவர்ஷனே கலங்கி விட்டார்!

"அரசே! என்மீது தாங்களே ஐயம் கொள்ளும் அளவுக்கு இச்சம்பவம் நடந்தேறி உள்ளது! காவல் வீரர்கள் அங்கு காயம்பட்டுக் கிடந்தனர். படைவீரர்களில்கூட அவனது விசுவாசிகள் ஊடுருவி இருக்கிறார்கள் என நான் நினைக்கிறேன்.

"அவனைத் தேடிச் சிறைப்பிடிக்க உத்திரவிடுகிறேன். அவன் ஓர் இராஜத்துரோகி என நாடு முழுவதும் பிரகடனப்படுத்துகிறேன்! போதுமா?" இந்திரர் தன் தம்பி தோளைத் தட்டிக் கொடுத்தார்.

"அப்படியே செய்! நாங்கள் வந்து சேரும் வேளையில் இச்சம்பவம் நடந்துள்ளது. ஒருக்கால் கங்கநாடு சென்றிருப்பானோ?"

"அங்கும் ஓலை அனுப்புவோம்!"

"கிருஷ்ணன் ஓர் இராஜத்துரோகி. பேரரசருக்கு எதிராகச் சதிவேலையில் ஈடுபட்டுச் சிறையில் அடைபட்டவன். தப்பித்து விட்டான். பிடித்துக் கொடுப்பவர்களுக்கு உரிய சன்மானம் அரசர் வழங்குவார்!'

நாடு முழுவதும் அறிவிக்கப்பட்டது.

கிருஷ்ணன் இரட்டை மண்டலத்தில் இருந்தால்தானே! அவன் இரவோடு இரவாகத் தனது ஆதரவாளர்களுடன் கங்கநாடு சென்றுவிட்டான். அந்நாட்டு மன்னன் பூதுகன் தன் மைத்துனனை இருகரம் நீட்டி வரவேற்றான்.

அன்று இரவு முதலாம் சாமம் முடியும் வேளை. கோவிந்தனுக்கு எப்போதும் மது ஊற்றிக் கொடுக்கும் காவலனை அன்று வரவேண்டாம். தனது பணிப்பெண்களே பார்த்துக் கொள்வார்கள் என்று தடை போட்டாள் வீரமாதேவி!

"எங்கே என் காவலன்?"

கோவிந்தன் கோபமடைந்தான்.

"இதோ என் பணிப் பெண்கள் இருக்கிறார்கள். அவர்கள் கவனித்துக் கொள்வார்கள். அளவோடு மது ஊற்றிக் கொடுக்க ஆணையிட்டுள்ளேன்!"

"என்னைத் தடுக்க நீ யார்?"

"நானா? உங்கள் மனைவி!"

"மனைவியாகி விட்டால் என் செயலில் எதிலும் குறுக்கிட அதிகாரம் வந்துவிடுமோ?"

வீரமாதேவி மௌனமாக நின்றாள். பணிப்பெண்களை அவன் அதட்டினான்.

"கூட்டி வாருங்கள் அவனை!"

அவர்கள் ஓடிவிட்டனர். கண்ணீருடன் மௌனமாக அதைப் பார்த்துக் கொண்டு நின்றாள். காலவன் நடுங்கியவாறு வந்து நின்றான்.

"ஏன் இவ்வளவு கால தாமதம்?"

"இளவரசியார்தான் என்னைத் தடுத்துவிட்டார்கள்!"

"அதற்காக என்னைச் சந்திக்காமல் இருப்பதா?"

ஓங்கி ஓர் அறை கொடுத்தான்! ஒரு பெண், அதுவும் மணமகளாக வந்துள்ள இளவரசி முன் தன்னைக் கை நீட்டி அடித்துவிட்ட இளவரசன்மேல் வந்த கோபத்தை அக்காவலன் மென்று விழுங்கினான்!

கோவிந்தனுக்கு அன்று அவன் வேண்டுமென்றே அளவுக்கு அதிகமாகவே மதுவை ஊற்றிக் கொடுத்தான்.

குடிக்கக் குடிக்க இளவரசன் போதை ஏறித் தள்ளாடினான். வாந்தியும் எடுத்து விட்டான். அடுத்த அறையில் இருந்த வீரமாதேவி பதறியடித்து ஓடிவந்தாள்.

கண்ட காட்சி அவளைத் திடுக்கிட வைத்தது. கண்ணீருடன் அவனைக் கைத்தாங்கலாக அழைத்து வந்த அவள் கட்டிலில் மெல்லப் படுக்க வைத்தாள். அவள் சேலை எல்லாம் நனைந்து விட்டது.

மாற்றுடை அணிந்து வர அடுத்த அறை புகுந்தாள். திரும்பி வரும்போது அவள் கண்ட காட்சி அவளைத் திடுக்கிட வைத்தது.

கோபம் கொப்புளிக்க அறைவாங்கிய காவலன் கையில் வாளுடன் இளவரசன் கோவிந்தனைக் கொல்ல ஓங்கினான்!

"ஏய்! நிறுத்து!"

பதறியபடியே, அலறி ஓடி வந்தாள் வீரமாதேவி!



# 27. வீரமாதேவியின் சீற்றம்

**போ**தையில் மயங்கிக் கிடக்கும் கோவிந்தனைக் கோபத்தில் கொல்ல வந்த காவலனைத் தடுக்க முனைந்தாள் வீரமாதேவி.

"என்னை அவமானப்படுத்திய இளவரசன் தொலையட்டும்!"

"பாதகா! நில் அப்படியே! கிட்டே நெருங்கினால் இந்த வாளுக்குப் பலியாவாய்!"

கோவிந்தனின் வாளை எடுத்துக் கொண்டு சீறினாள்!

"ஓ! சோழ இளவரசிக்கு வாள் தூக்கவும் தெரியுமா?"

கோபம், அவமானம், ஆண்மை எல்லாம் கிளர்ந்தெழுந்த காவலன் எகத்தாளமாகக் கேட்டான். எப்படியும் தன்னைக் கொன்றுவிடுவார்கள், அதற்குள் அந்தக் கொடும்பாவியைக் கொன்றால் என்ன என்ற வெறியுடன் அவன் நின்றான்.

"என்னடா சொன்னாய்?" கோபம் கொண்ட வீரமாதேவி வாளுடன் பாய்ந்தாள். பணிப் பெண்கள் பயத்துடன் இக்காட்சியைக் கண்டு நடுங்கினர். இளவரசியின் வாள்வீச்சில் அவன் நிலைதடுமாற ஆரம்பித்தான். அவள் கற்ற வாள் வித்தை கைகொடுத்தது அவளுக்கு!

ஒரே செருகல்.

அவள் வாள் காவலன் மார்பில் பாய்ந்துவிட்டது. குருதி கொட்ட குப்புற அவன் விழுந்துவிட்டான்.

"பாவி! என்னைக் கொலைகாரியாக்கி விட்டாயடா!"

வீரமாதேவி அழுதபடி அப்படியே அமர்ந்து விட்டாள்! பணிப்பெண்கள் கூறிய செய்தி கேட்டு ஓடி வந்த இளங்கோப் பிச்சியைக் கண்ட இளவரசி அவர் மார்பில் அழுதபடி சாய்ந்து விட்டாள்.

"அழாதே! உன் கணவன் உயிரை - என் வருங்கால மன்னனின் உயிரைக் காத்த வீரப் பெண்மணியல்லவா நீ!"

பணிப்பெண்களைப் பார்த்து அவர் உத்தரவிட்டார்.

"இவனை அப்புறப்படுத்துங்கள்!"

இந்தக் களேபரத்தை எல்லாம் காண இயலாதபடி மயங்கிய நிலையில் இளவரசன் கட்டிலில் கிடந்தான். ஆறுதல் கூறியவாறு அடுத்த அறைக்கு வீரமாதேவியை இராஜமாதா அழைத்துச் சென்றார்.

என்றாலும் அவளுக்கு மனத்தில் அமைதி ஏற்படவில்லை. மறுநாள் காலை இறந்த காவலனின் மனைவி மக்களை அழைத்துவர உத்தரவிட்டாள் வீரமாதேவி!

அவர்கள் பயத்துடன் அவள் முன் நின்றனர். அவர்களைப் பார்த்து இளவரசி இரக்கம் கொண்டாள்.

"உங்கள் நிலை கண்டு மிக்க வருந்துகிறேன். நம் இளவரசனையே கொல்ல முனைந்ததால்தான் அவனுக்கு அந்த முடிவு ஏற்பட்டது. அதற்காக உங்கள் வாழ்வு அஸ்தமனமாவிடக் கூடாது. நான் செய்த செயலுக்குப் பிராயச்சித்தமாகவே இது இருக்கட்டும்! வாங்கிக் கொள்ளுங்கள்!" ஒரு பணமுடிப்பை அவர்களிடம் நீட்டினாள்.

இதைச் சற்றும் அவர்கள் எதிர்பார்க்கவில்லை. காவலன் மனைவி இளவரசியின் காலில் விழுந்தாள்!

பணிப்பெண்கள இளவரசியின் தயாள குணத்தைக் கண்டு வியந்தனர். இளங்கோப்பிச்சி அவள் தோளைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டினார்.

"குழந்தாய்! இப்போதுதான் சோழர் குலத்தின் பெருமையை நிரூபித்துக் காட்டினாய்! நீ ஓர் அரசி ஆவதற்குரிய தகுதியையும் பெற்றுவிட்டாய்!"

"ஆனால் என் வாழ்வு?" கண்ணீருடன் அவரை ஏறிட்டாள்.

"போகப்போக இளவரசனை நல்வழிப்படுத்திவிடுவாய்! அவனும் திருந்தி விடுவான்! பாரேன்!"

அவளைத் தேற்றினார் இராஜமாதா!

ஆனால்?........

கோவிந்தனை வீரமாதேவி எவ்வளவோ நல்வழிக்குத் திருத்தப் பார்த்தாள். அவனோ?

"நான் இந்த நாட்டின் வருங்கால மன்னன்! நீ எனக்கு அடிமை போலத்தான்! அலட்டிக் கொள்ளாதே!"

அவள் மனத்தைப் பலவாறு நோகடித்தான். நரக வேதனையை அங்கு அனுபவித்தாள். தான் வாழும் அந்த வாழ்வைப்பற்றி அணு அளவேனும் சோழ நாட்டுக்குத் தகவல் கசிந்துவிடக் கூடாது என்பதில் கண்ணும் கருத்துமாய் இருந்தாள்!

இராஜமாதாவே அவளுக்கு அங்கு ஆறுதல். நாளுக்குநாள் இளவரசனின் போக்கு கண்டு அவரே தான் பெரிய தவறு செய்துவிட்டோம் என்று வேதனைப்பட்டார். ஒரு பெண்ணின் வாழ்வைத் தெரிந்தும் பாழ்படுத்திவிட்டோமோ என்று கவலையில் மூழ்க ஆரம்பித்தார்!

'ஒரு பேரரசியாவாள் என்றுதானே பெருமை கொண்டோம்! ஆனால் அது இப்படியாகி விட்டதே!'

அவர் வீரமாதேவிமீது இரக்கமும், தனது பேத்தி என்ற பற்றும் பாசமும் அதிகம் கொண்டு பாராட்டினார்.

சில நேரங்களில் வீரமாதேவியின் நினைவில் விக்கிரமன் வருவான்!

அவனோடு தனது காதல் வாழ்வு இணைந்திருந்தால் எப்படி எல்லாம் இருந்திருக்கும் என்ற கற்பனையில் லயித்து விடுவாள்!

ஆனால் புத்தி விழித்துக் கொள்ளும். அவனை நினைப்பதே தன் கற்புக்குக் களங்கம் எனப் பேதையவள் அவன் நினைப்பை அறவே அகற்றப் பெரும் பாடுபட்டாள்.

தான் கற்ற இலக்கியங்களில் தன் ஓய்வு நேரத்தைச் செலவிட ஆரம்பித்தாள்.

இளங்கோப்பிச்சியும் இடையிடையே தான் அப்பெயரைப் பெற்ற விவரத்தையும், ஆண்டாள் பாசுரங்கள் அவர் இதயத்தைக் கவர்ந்ததையும் அவளுக்கு எடுத்துக் கூறுவார்.

அவளது பாட்டன் ஆதித்த சோழர் பெருமைகளை எல்லாம் எடுத்துக் கூறுவார். பேரரசர் இருவர் உள்ளங்களிலும் ஆக்கிரமித்ததால் அவர்களுக்கு நேரம் போவதே தெரியாது.

ஒருத்தி பட்ட கதையைக் கூற மற்றொருத்தி பாழும் கதையைக் கூற அதுவே அவர்களுக்குப் படிக்கும் பாடங்களாயின.

xxxxxxxxxx

பேரரசர் இந்திரருக்குப் பொல்லாத நேரமோ அல்லது இளவரசன் கோவிந்தனுக்குப் பொல்லாத நேரமோ தெரியவில்லை.

அன்று அரசரின் ஆலோசனை மண்டபத்தில் காரசாரமான விவாதம்!

நாட்டில் கிருஷ்ணனின் ஆதரவாளர்களின் புரட்சி தலை தூக்குவதால் ஏற்படும் பிரச்சனை அங்கே பூதாகாரமாக வெடித்தது.

அமோகவர்ஷனுக்கும் அது பெரிய தலைவலியாகப் போய்விட்டது.

பெற்ற பிள்ளை செய்யும் கலகங்களுக்கு அமைச்சர் அமோகவர்ஷனே பின்னணியில் இருந்து ஆதரவு தருகிறாரோ - அவருக்கும் அதில் தொடர்பு இருக்குமோ என்ற ஐயம் இளவரசன் கோவிந்தனுக்கு ஏற்பட்டு விட்டது.

அதை அவன் அடிக்கடி அரசர் காதிலும் போட்டு வந்தான். ஆனால் இந்திரர் அதை நம்பத் தயாரில்லைதான்.

என்றாலும் நடைபெறும் சம்பவங்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகின்றனவே!

'ஒன்று கிருஷ்ணனைச் சிறைப்பிடிக்க வேண்டும். அல்லது புரட்சியை அமைச்சர் அடக்க வேண்டும்.'

இரண்டில் எதுவும் நடைபெற்றதாகத் தெரியவில்லை. அது அன்று ஆலோசனை மண்டபத்தில் எதிரொலித்தது.

இளவரசன் கோவிந்தனின் வார்த்தைகள் நெருப்புத் துண்டங்களாக வெளிவந்தன. அவை அமைச்சரின் இதயத்தையே சுட்டெரித்தன. கடைசியில் ஓர் அஸ்திரத்தைப் பிரயோகித்தான்.

"அமைச்சர் தன் மகனுக்கு உடந்தையோ என நான் சந்தேகிக்கிறேன்!"

"கோவிந்தா!"

மன்னர் ஒருமையில் அவனை அழைத்து அதட்டினார். ஆனால் அவன் கேட்பதாயில்லை.

"அரசே! நான் கூறுவதைச் சற்றுப் பொறுமையுடன் கேளுங்கள்! நான் குடியன்தான். ஒப்புக் கொள்கிறேன். என்றாலும் கோமகன் நான்! எனக்கு எதுவும் தெரியாது என்று அமைச்சர் நினைக்கிறார்போல!

"ஒன்று இவர் பெற்ற பிள்ளையைப் பிடித்துக்கொண்டு வந்து இங்கு நிறுத்த வேண்டும்! அல்லது அவன் தூண்டிவிடும் புரட்சியை அடக்கி ஒடுக்கி நசுக்க வேண்டும்.

"செய்தாரா இவர்? இரண்டுமே இல்லை! அலங்காரமாக அமைச்சராக இருந்தால் மட்டும் போதுமா?"

அமோகவர்ஷன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன!

'நான் எடுத்து வளர்த்த பிள்ளை! என்னமாய்த் தேளாய்க் கொட்டுகிறான்! இனிப் பொறுக்க முடியாது!'

"அரசே! இளவரசன் பேச்சு இன்று எல்லை மீறிப் போகிறது. விபரீதத்துக்கு வித்து விதைப்பது இங்கு விரும்பத்தக்கதல்ல!"

அரசர் இந்திரர் என்ன சொல்வது என்று தயங்கினார். அவர் மௌனமே அமோகவர்ஷனை உசுப்பி விட்டது.

"அரசே!"

உஷ்ணத்துடன் இந்திரரை நோக்கிப் பேச ஆரம்பித்தார்.

"இதுநாள்வரை நான் இராமனுக்கு ஏற்ற இலட்சுமணனாக இருந்தேன். அதனால் இறுமாப்பும் கொண்டிருந்தேன். ஆனால் இளவரசன் கொட்டிய நெருப்புத் துண்டங்கள் என் இதயத்தையே பொசுக்கி விட்டன.

"பெற்ற பிள்ளை என்றும் பாராமல் கிருஷ்ணனைச் சிறையில் இட்டேன். உபதளபதியின் உதவியும் அவனுக்குக் கிடைத்தது கண்டு அவரையும் பிடித்து அடைத்தேன்!

"ஆனால் அரசாங்க ஊழியர்களிடையே உங்கள்மேல் அதிருப்தி நிலவுவதால் அவர்கள் உதவியுடன் அவன் தப்பித்திருக்க வேண்டும்!"

இளவரசன் குறுக்கிட்டான்.

"உங்கள் மகள் கங்க நாட்டு அரசியாகி விட்டதால் அவர்கள் பாதுகாப்பில் அங்குதான் அவன் இருப்பான். அழைத்துக் கொண்டு வர வேண்டியதுதானே?"

"அவருக்கும் அவன் ஓர் இராஜத்துரோகி என அறிவிப்புச் செய்து பிடித்துக் கொடுங்கள் என்று அரசர்தானே ஓலை அனுப்பி வைத்தார்?"

"அப்படி அனுப்பியிருந்தும் அந்த ஓலையை உங்கள் மருமகன் மதித்தாரா? அவருடைய ஆதரவு இருப்பதால்தானே உங்கள் மகன் இந்த ஆட்டம் போடுகிறான்!"

"படைகொண்டு இளவரசன் சென்று பிடித்து வரட்டும். அவன் அங்கு இருந்தால்?"

"இல்லை என்று எப்படிக் கூறுகிறீர்கள்?"

"அங்கு இருந்தால் எப்படி இங்கு கிளர்ச்சி செய்ய முடியும்?"

"அப்படியானால் அவன் இந்நாட்டில்தான் இருக்கிறான்?"

"இருக்கலாம்!"

"பிடிக்க வேண்டியதுதானே?"

"முயற்சி செய்யாமலா நான் இருக்கிறேன்?"

"அமைச்சரின் நடிப்பு அபாரம்!"

துள்ளி எழுந்தார் அமோகவர்ஷன்!

"அரசே! பெறுமைக்கும் ஓர் எல்லை உண்டு! இளவரசன் பேச்சு எல்லை மீறிப் போய்க் கொண்டிருக்கிறது! அண்ணன் மகன்தான் என்று அமைதி காத்தேன். அத்தனையும் விழலுக்கு இறைத்த நீராக வீணாகிப் போய் விட்டது

"இளவரசனே விரும்பும் நபரை அமைச்சராக இனி நியமித்துக் கொள்ளட்டும். அரசரும் அதற்கு அனுமதி கொடுக்கலாம். இனி நான் இந்தப் பதவியில் ஒட்டிக் கொண்டிருக்க விரும்பவில்லை!

"எனவே இதுவரை நான் வகித்து வந்த அமைச்சர் பதவியை இப்போதே உதறித் தள்ளுகிறேன்! வேண்டாம் இந்தப் பதவியும் பவிசும்! அரசர் அனுமதி தந்தாலும் சரி! தராவிட்டாலும் சரி! இனி இதில் நான் இருக்க விரும்பவில்லை! வருகிறேன்!"

கோபமாகக் கூறிவிட்டு ஆலோசனை மண்டபத்தைவிட்டு அமோகவர்ஷன் வெளியேறினார்.

அதைத்தான் இளவரசனும் விரும்பினானோ? அவன் முகத்தில் புன்னகை அரும்பியது. ஆனால் அரசர் இந்திரர் அப்படியே ஒன்றும் பேசத் தோன்றாமல் ஸ்தம்பித்து சிலைபோல இருந்துவிட்டார்.

'அருமைத் தம்பி! அமைச்சனாக இருந்து நமக்கு ஆலோசனை கூறி வந்தவன். இராமனுக்கு ஏற்ற இலட்சுமணன் என்று இறுமாந்து இருந்தேனே! எல்லாம் இவனால் பாழ்பட்டுப் போயினவே!'

"அரசே! இவர் போனால் போகட்டும்! எப்படியும் கிருஷ்ணனை நானே முன்னின்று பிடித்துக் காட்டுகிறேன். படைபலத்தை என் பொறுப்பில் தாருங்கள்! பாவியைச் சிறைப்பிடிக்கிறேனா இல்லையா என்று பாருங்கள்!" அரசர் அதற்கும் ஒன்றும் கூறாமல் திக்பிரமை பிடித்தவாறு ஆசனத்தில் அமர்ந்திருந்தார்.

இச்செய்தி கேட்டு இராஜமாதாவும், வீரமாதேவியும் திடுக்கிட்டனர்!



# 28. மன்னர் மரணம்

அமோகவர்ஷன் அமைச்சர் பதவியைத் துறந்த செய்தி கேட்ட இராஜமாதா இளங்கோப்பிச்சியும், வீரமாதேவியும் திடுக்கிட்டனர். உடனேயே அடுத்த மாளிகையில் இருந்த அவரைப் பார்க்கக் கிளம்பிவிட்டனர்.

"அமோகவர்ஷா?"

அன்பான குரல் கேட்டு அவர் திரும்பிப் பார்த்தார். வாசலில் அவர்கள் நிற்பதைக் கண்டு திடுக்கிட்டவர், ஆசனத்திலிருந்து துள்ளி எழுந்தார்.

"வரவேண்டும்! இராஜமாதா, வரவேண்டும்!"

"நீ இப்படிச் செய்யலாமா?"

"அத்தை! எல்லாம் பாழ்பட்டுப் போயின! எடுப்பார் கைப்பிள்ளையான என் மகனால் நாடு துண்டாகிவிடும் என அஞ்சினேன். ஆனால் இளவரசனுடைய செயலால் அது நடந்து விடும்போல! அவனால் நாட்டுக்கும் நன்மையில்லை! சோழ இளவரசிக்கும் அதே நிலைதான் என்று வேதனைப்படுகிறேன்!

"உம்!... அதிகாரத்தில் இருந்து நான் என்ன சாதித்தேன்? ஒன்றுமில்லை! எனவே பொறுப்பிலிருந்து நான் கழன்று கொண்டேன். இனி அரசர்பாடு! இளவரசன்பாடு என ஒதுங்க வேண்டியதுதான்!"

"நாட்டின் நிலையை நினைத்துப் பார்த்தாயா நீ? அல்லது இந்த நங்கையின் வருங்காலத்தைத்தான் எண்ணிப் பார்த்தாயா?" நீண்ட பெருமூச்சு அவரிடமிருந்து வெளிப்பட்டது.

"நாம் இருவருமே பிழை செய்து விட்டோம். அத்தை! மிகப் பெரிய பிழை செய்து விட்டோம்! நன்றாக வாழவேண்டிய பெண்ணை - கொடும்பாளூர் இளவரசனை மனதார விரும்பிய பெண்ணை நம் அரச குமாரனுக்குப் பெண் பேசி மணம் முடித்துப் பெரும் பிழை செய்துவிட்டோம்!"

இராஜமாதா இதைக் கேட்டுத் திடுக்கிட்டார்!

"என்ன! கொடும்பாளூர் இளவரசனையா இவள் விரும்பினாள்?"

கண்கள் கலங்கத் தலையசைத்தாள் வீரமாதேவி!

"முன்னமே என்னிடமோ மன்னரிடமோ சொல்லித் தொலைத்தால் என்ன?" கோபத்துடன் அவளைக் கடிந்து கொண்டாள்.

இளங்கோப்பிச்சியின் மருமகளாக வந்த பூதிமாதவியின் சகோதரர் மகனையா இவள் காதலித்தாள்!

பழைய நினைவுகளில் மூழ்கினார்.

'பூதிமாதவி! தியாகத்தின் பிம்பம் அவள்! அவள் குடும்பத்திலா அடுத்தடுத்து சோகம் முளைக்க வேண்டும்!'

தான் சுமார் இருபத்தைந்தாண்டுகளுக்கு முன் செய்த பிழையை எண்ணிப் பார்த்து வெட்கம் கொண்டார்! வேதனைப்பட்டார்.

"அத்தை, சோழ இளவரசியை வருங்கால அரசியாக்கிப் பார்க்க நாம் ஆசைப்பட்டோமே! ஆனால் அத்தனையும் பாழ்பட்டுப் போயின போல!"

"என்ன சொல்கிறாய், அமோகா?"

"ஆமாம் அத்தை! கங்கமன்னரும் எனது மருமகனுமான பூதுகன் உதவி கிருஷ்ணனுக்குக் கிட்டியுள்ளது. அதனால் அவர்கள் படையுடன் எந்நேரமும் கிருஷ்ணன் தலைநகருக்குள் பிரவேசிக்கலாம் என நான் பயப்படுகிறேன். நம் படையிலும் அவனுடைய ஆதரவாளர்கள் நிறையப் பேர் உள்ளனர்போலத் தெரிகிறது. அமைச்சனாக நான் இருந்ததால் அஞ்சியிருந்தனர். அவர்களையும் அடக்கி வைக்க முடிந்தது. .... இனி எப்படியோ?"

"அப்படிப்பட்ட சூழ்நிலை நிலவும்போது நீ ஏன் அமைச்சர் பதவியை உதறித் தள்ளினாய்?"

"நானா உதறித் தள்ளினேன்? என்னை அந்த நிலைக்குத் தள்ளியவனே இளவரசன்தானே!"

"எப்படி?"

"பொறுமையைக் கடைப்பிடித்தேன். ஆனால் முட்டாள் அதைத் தவறாகப் புரிந்து கொண்டு கடுஞ்சொற்களால் என் மனதைக் காயப்படுத்திவிட்டான்!"

"இந்த நிலையில் நீங்கள் ஒதுங்கிக் கொள்ளலாமா?"

கண்ணீருடன் வீரமாதேவி அவரை வினவினாள்.

அமோகவர்ஷனிடமிருந்து நீண்ட பெருமூச்சு அதற்குப் பதிலாக வெளிப்பட்டது.

"இளவரசி! நான் என்ன செய்ய முடியும்? கிருஷ்ணனுக்கு உதவுகிறேனாம்! நாட்டில் குழப்பம் ஏற்படுவதைத் தடுக்கத் தவறிவிட்டேனாம்! பெற்ற பிள்ளை பதவியைத் தட்டிப் பறிக்க நான் உடந்தையாம்! இதைக் கேட்டுக் கொண்டு எப்படி இளவரசி நான் பதவியில் ஒட்டிக் கொண்டிருக்க முடியும்? எனவேதான் அதை உதறித் தள்ளிவிட்டு வந்துவிட்டேன்!"

மீண்டும் பெருமூச்சு அவரிடமிருந்து வெளிப்பட்டது.

"உம்!... இதை அரசரும் மௌனமாக இருந்து ஆமோதித்து விட்டாரே!"

"என்ன, அரசருமா?"

ஏககாலத்தில் இருவருமே பதற்றுத்துடன் கேட்டனர்!

"ஆமாம்! அதை நினைக்கும்போதுதான் வேதனையாக இருக்கிறது! எல்லாம் பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போய்விட்டது. இனி மன்னர் பாடு! மக்கள் பாடு! நான் தனியே ஒதுங்கிக் கொள்கிறேன்!

"உம்!... சோழ இளவரசியைத்தான் நாம் பாழும் கிணற்றில் தள்ளிவிட்டோமோ என்ற கவலைதான் என் மனத்தை இப்போது வாள் கொண்டு அறுக்கிறது!"

சில கணங்கள் அங்கு இறுக்கமான சூழ்நிலை நிலவியது! மயான அமைதி!

வீரமாதேவி கண்கள் கலங்கக் குலுங்கி அழுதாள். பதறிய இராஜமாதா அவள் தோளை ஆதரவாகப் பற்றிக் கண்ணீரைத் துடைத்து ஆசுவாசப்படுத்தினார்!

"குழந்தாய்! சோழர் குலத்தில் பிறந்த நீ சோகத்தில் துவளலாமா? இதோ பாட்டி நான் இருக்கிறேன்! உன் துன்பத்தைக் களைவது என் பொறுப்பு! என் உயிர் உள்ளவரை உனக்கு ஒரு குறையும் வராமல் பார்த்துக் கொள்வேன்! கவலைப்படாதே!"

அவர் அவ்வாறு ஆறுதல் கூறிக் கொண்டிருக்கும்போதே அவர்களை ஓர் இடி வந்து தாக்கியதுபோல ஒரு செய்தி அவர்களிடம் வந்து சேர்ந்தது.

"மன்னர் இந்திரர் மயங்கிக் கீழே விழுந்து விட்டார். மயங்கியவர் இன்னும் விழிக்கவில்லை! அரண்மனை மருத்துவர்கள் தீவிர சிக்ச்சையளிக்கின்றனர்!"

மூவரும் திடுக்கிட்டனர். பதறி ஓடினர் அரண்மனைக்கு!

அங்கே மன்னர் கட்டிலில் படுத்தவாறு மலங்க விழித்துக் கொண்டிருந்தார்.

"பாவி! நான்தான் உங்கள் உடல் நலத்துக்கு ஊறு விளைத்துவிட்டேனோ?" அமோகவர்ஷன் அலறித் துடித்தார்.

அக்குரல் கேட்டு மன்னர் அவர் பக்கம் திரும்பிப் பார்த்தார், படுத்த நிலையிலேயே!

தலையை லேசாக அசைத்தார்.

மன்னர் தன்னை அழைப்பதை உணர்ந்து அவர் கட்டிலை நெருங்கினார்.

அப்போது அங்கு இளவரசன் கோவிந்தன் பிரவேசித்தான்.

“நில்லுங்கள்!”

உரத்தக் குரலில் அவன் கட்டளையிட்டதும், அமோகவர்ஷன் அதிர்ச்சியடைந்தார்!

“உடன் பிறந்த அண்ணனை - அரசனைப் பார்க்க எனக்கு அனுமதி இல்லையா? என் தமையனைப் பார்க்க எனக்கே தடையா? நான் செய்த தவறுதான் என்ன?”

உள்ளம் பதற அவனை ஏறிட்டார்.

“அரசர் எப்போது சாய்வார்? ஆட்சியை நாம் எப்போது பிடிக்கலாம் என ஆசை கொண்டவரல்லவா நீங்கள்?”

“நிறுத்து உன் பேச்சை! உன்னால்தான் என் அண்ணன் மனம் நொந்து இந்த நிலைக்கு ஆளாகிவிட்டார்! இனிமேலும் வதைத்து அவரைக் கொன்று விடாதே”

“ஆகா! எவ்வளவு கரிசனம்!”

கோவிந்தனது பேச்சால் கோபம் கொண்டவர் தன் அண்ணனை - அரசரை ஒரு கணம் திரும்பிப் பார்த்து வணங்கிவிட்டு விடுவிடு என விரைந்து சென்று விட்டார்.

அவர் போவதைப் பார்த்த மன்னர் கண்கள் கலங்கின.

“தந்தையே! இவரால்தான் உங்களுக்கு இந்த நிலை என்பது எனக்குத் தெரியும்! கவலை கொள்ளாதீர்கள்!”

அவர் கண்ணீரைத் துடைத்தான்.

‘பாவி! உன்னால்தானடா என் தம்பியை விட்டு நான் விலகினேன்! நாட்டைக் காப்பாற்றிய அவனை விரட்டி விட்டாயடா!’

உள்ளம் சொல்லத் துடித்தது. வாய்தான் பேச முடியாமல் மூடிக் கொண்டதே! மலங்க மலங்க விழிக்கிறாரே!

அங்கு வந்த அமோகவர்ஷனை விரட்டியடித்த காட்சியைக் கண்டு அப்படியே சிலையாக நின்றுவிட்ட இரு பெண்களும் கண்கள் கலங்க மன்னர் கட்டிலை நெருங்கினர்.

அவர்களைப் பார்த்ததும் மேலும் அவர் கண் கலங்கினார். வாய் ஏதோ பேசத் துடித்தது. ஒரு கை லேசாக மேலே எழுந்தது.

அதுவும் சில கணங்கள்தான்!

சட்டென்று கை கீழே சரிந்து விட்டது! கண்கள் நிலைகுத்தி நின்றுவிட்டன!

"ஐயகோ! அரசர் பெருமானே! அமரர் ஆகிவிட்டீர்களே! இனி என் கதி என்ன?"

வீரமாதேவி அழுகையுடன் அரற்றினாள்!

அறையின் மறுவாயில் வழியாக வெளியேறிக் கொண்டிருந்த கோவிந்தன், அவள் அலறல் கேட்டு மறுபடி அங்கு ஓடி வந்தான்.

அதற்குள் மனனர் மரணத்தைக் தழுவி இருந்தார். கோவிந்தன் திடுக்கிட்டான்!

காரியங்கள் மளமளவென்று நடந்தேறின. சவஅடக்கம் நடைபெற்றபோது அமோகவர்ஷனும் அதில் சோகத்துடன் கலந்து கொண்டார். கலங்கிய கண்ணீரைப் பலர் பார்ப்பதால் மறைக்க முடியாமல் தவித்தார்.

கோவிந்தனின் முடிசூட்டும் விழாவிலும் பெயரளவில் ஓர் ஓரத்தில் அமர்ந்து கொண்டார்.

அரசியாக அவன் பக்கத்தில் வீரமாதேவி அமர்ந்திருப்பதைக் கண்டு ஒருவாறு ஆறுதலும் கொண்டார்.

இதற்குத்தானே அவர் இத்தனை நாளும் பாடுபட்டார்! சோழ இளவரசியைப் பட்டமகிஷியாகப் பார்த்துப் பரவசம் கொண்டவர் அங்கு அவராகத்தான் இருக்க முடியும்!

முடிசூட்டு விழாவுக்குக் கங்கமன்னன் பூதுகனுக்கு அழைப்பு அனுப்பியும் அவன் கலந்து கொள்ளவில்லை. தன் மைத்துனர்

கிருஷ்ணனைச் சிறைப்பிடித்து ஒப்படைக்கவும் என்ற ஓலை சென்றதால், அந்த விழாவைப் புறக்கணித்துத் தன் எதிர்ப்பைக் காட்டினாள்.

கோவிந்தன் ஆட்சிப் பொறுப்பேற்றதும், எப்படியாவது கிருஷ்ணனைக் கண்டுபிடித்துச் சிறைப்பிடித்துக் கொண்டு வருமாறு கட்டளையிட்டான்!

கொன்று விடுமாறும் இரகசியமாகத் தன் படைத் தலைவர்களிடம் கூறியிருந்தான்.

விசுவாச வீரர்கள் அவனைச் சல்லடை போட்டுத் தேட ஆரம்பித்தனர். அமோகவர்ஷன் மாளிகையையும் ஒற்றர்கள் வேவு பார்க்க ஆரம்பித்தனர். தளபதியும் அவரைப் பார்க்க வருவதுபோல வந்து அங்கு நோட்டமிட்டார்.

அதைக் கண்டு அமோகவர்ஷன் தனக்குள் மெல்ல நகைத்துக் கொண்டார். கவலைப்படவில்லை. காரணம்?

அவர் மடியில் கனமிருந்தால் அல்லவா வழியில் பயப்பட வேண்டும்?

அரசன் கட்டளைகளை வேடிக்கை பார்ப்பதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய இயலாமல் வாளா இருந்தார்.

யார் யார் வந்து போகிறார்கள் என்ற தகவலும் அடிக்கடி மன்னன் கோவிந்தனுக்குப் போய்க் கொண்டுதான் இருந்தது!

ஒவ்வொரு சம்பவமும் ஏதாவது ஒரு காரண காரியத்தோடுதான் நடைபெறும்! விதி தன் விசித்திரக் கரங்களை நீட்டி வேடிக்கை காட்டும்! விளைவுகள் விபரீதமாகலாம்!

அப்படித்தான் அங்கு விதி தன் வேலையைக் காட்ட ஆரம்பித்தது. அவன் பட்டமேற்ற சில மாதங்களிலேயே இரட்டை மண்டலம் இரண்டுபட்டுக் கிடப்பதுபோல கீழைச் சாளுக்கிய நாடும் குழப்பத்தின் பிடியில் சிக்குண்டு கிடந்தது!

கீழைச் சாளுக்கிய நாட்டின் வடபகுதியில் யுத்தமல்லன் ஆதிக்கம் செலுத்தி வந்தான். தென்புறத்திலோ இரண்டாம் வீமன் பலம் பெருக்கி வந்தான்!

இருவரும் அடுத்த நாட்டு உதவியைப் பெற ஆசைப்பட்டனர். கோவிந்தன் யுத்தமல்லனுக்கு உதவ விரும்பினான். வீமனின் கொட்டத்தை அடக்க எண்ணிய கோவிந்தன், இரட்டை மண்டலப் படையை ஏவினான் அங்கு.

காலஞ்சென்ற மன்னர் இந்திரர் இருக்கும்வரை - அமோகவர்ஷன் அமைச்சராக இருக்கும்வரை இந்தப் பிரச்சனை அங்கு வந்தது.

ஆனால் அடுத்த நாட்டுப் பிரச்சனையில் தலையிடுவது ஆபத்து என்று அமைச்சர் அமோகவர்ஷன் அதைத் தடுத்து விட்டார்.

ஆனால் இப்போது ஆட்சி செலுத்துபவன் கோவிந்தன் அல்லவா?

தனக்கு வேண்டியவன் யுத்தமல்லன். அவனுக்கு உதவுவது தனக்குப் பிற்காலத்தில் உதவும் என்று அவன் தப்புக் கணக்குப் போட்டு விட்டான்.

'விநாசகால விபரீத புத்தி'!

அனாவசியமாக அங்கு மூக்கை நுழைத்தான்.

என்ன நேருமோ என அமோகவர்ஷன் அஞ்சினார். கட்டிக் காத்த நாடு கண் முன் சிதறலாமா?

அரசன் கட்டளையிட்டதும் அவனுக்குப் பணிந்தும், படைத்தலைவர்களின் கட்டளைக்கும் ஏற்ப இரட்டை மண்டலப் படைகள் யுத்தமல்லனுக்கு ஆதரவாகப் போர்க்களத்தில் குதித்தன. வேண்டா வெறுப்பாக வீரர்கள் சென்றனர்.

படையின் பெரும் பகுதி அங்கு சென்றுவிட்டதால் தைரியமாகக் கிருஷ்ணன் தன் ஆதரவாளர்களுடன் கங்க நாட்டிலிருந்து வெளியேறி மானிய கேட நகரில் நுழைந்து விட்டான்.

சகல கட்டுப்பாடுகளையும் உடைத்தெறிந்து, வேவு பார்க்க நின்ற வீரனையும் கொன்று விட்டுத் தன் தந்தை அமோகவர்ஷன் மாளிகைக்குள் அவன் நுழைந்தான் அவர்களோடு.

தன் மகனைக் கண்டதும் அமோகவர்ஷனுக்கு ஆனந்தம், கோபம், பாசம், அனைத்தும் கலந்து வெளிப்பட்டன.

"கிருஷ்ணா!"

"தந்தையே! நலந்தானா? வீட்டுக் காவலில் உள்ளவர்போலக் காலம் கழிக்கிறீர்களே! இப்போதாவது புரிகிறதா நாட்டை ஆளும் மன்னனின் இலட்சணத்தை!"

மௌனமாக இருந்தார்.

அது அவரது ஆமோதிப்பு என அவன் அறிந்தான். எனவே, மேலும் தொடர்ந்தான்.

"என்னுடன் புறப்படுங்கள்."

அவர் மறுத்துவிட்டார்.

"இந்நாட்டு மன்னனுடைய அறியாத்தனத்தால் அநியாயமாகப் பல வீரர்களின் உயிர் பலியாகிக் கொண்டிருக்கும்! சாளுக்கிய வீமனின் பலம் தெரியாமல் யுத்தமல்லனுக்கு உதவியாகப் படை சென்றுள்ளதே! இது மன்னனுக்குத் தேவைதானா? பார்த்துக் கொண்டிருங்கள், படை தோல்வி கண்டு திரும்பப் போகிறது. இதையே நான் எனக்குச் சாதகமாக்கிக் கொள்வேன்."

"எப்படி?"

"வீரர்களின், படைத்தலைவர்களின் அதிருப்தி எனக்குப் பக்க பலமாகும்! மக்கள் எந்நேரமும் புரட்சி செய்யத் தயாராயிருக்கின்றனர்! வீரர்களின் கோபம் வெடித்தால் புரட்சி உடனே நடக்கும்!"

அமோகவர்ஷன் அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்தார்.

"தந்தையே! இப்போதாவது என் பக்கம் சேருங்கள். உங்கள் அண்ணன் - அரசர் இருக்கும்வரை இராமனுக்கு ஏற்ற இலட்சுமணனாக இருந்தீர்கள். இனியும் இந்த மௌனம் தேவையா?"

"நடப்பது நடக்கட்டும். நான் உன்னுடன் வரப் போவதில்லை."

"கூடிய சீக்கிரம் தைரியமாக வெளிக் கிளம்புவேன். புரட்சி வெடிக்கும். நாடும், மக்களும் என் பக்கம் வரத்தான் போகிறது. இராஜ விசுவாசத்திற்குக் கிடைத்த பரிசு என்ன? இப்போதாவது தங்களுக்குப் புரிந்தால் அதுவே போதும்!"

சில வீரர்கள் வருவது தெரிந்ததும் தன்னுடன் வந்தவர்களுடன் சத்தம் செய்யாமல் பின்பக்கமாக அவன் வெளிக் கிளம்பிவிட்டான். அவர்களுடன் மோதித் தன் நாட்டு வீரர்களின் உயிர்களைப் பலி கொள்ள விரும்பவில்லை. நாளை அவர்களும் அவன் பக்கம் சேர்வார்கள் அல்லவா?

வந்த வீரர்கள் இரத்த வெள்ளத்தில் கிடக்கும் வீரனைக் கண்டு திடுக்கிட்டனர்.





## 29. கோவிந்தனின் கோபம்

அமோகவர்ஷன் மாளிகை முன்பு வேவுபார்க்க நின்ற வீரன் இரத்த வெள்ளத்தில் கிடந்ததைக் கண்ட வீரர்கள் திடுக்கிட்டு அவனைத் தூக்கினர்.

"தண்ணீர்!"

காயம்பட்டுக் கிடந்தவன் முனகினான்!

"யார் உன்னைக் காயப்படுத்தியது? இந்தப் பாதகச் செயலைச் செய்தது யார்?" வீரர்கள் வினவினர்.

"இளவரசர் கிருஷ்ண..."

பதிலை முடிக்காமலே அவன் பரலோகம் சென்றுவிட்டான்.

"ஆ!... இளவரசர் வந்து சென்றுள்ளாரா தன் தந்தையைக் காண்பதற்கு?..... உடனே ஓடுங்கள்.... மன்னரிடம் இந்தச் செய்தியைத் தெரிவியுங்கள்! கூடுதலாக வீரர்களுடன் ஓடி வாருங்கள்."

அலறினான் அவர்கள் தலைவன்.

இந்தச் சப்தம் கேட்டு மாளிகையிலிருந்து அமோகவர்ஷன் வெளிவந்தார்.

"அமைச்சர் பெருமானே! இந்த அநியாயத்தைப் பாருங்கள்!"

வாசலில் நின்றிருந்த வீரன் குருதி கொட்டிக் குலைந்து கிடந்ததை அவர் கண்டார்; அதிர்ச்சியும் அடைந்தார்.

'இது தன் மகனுடைய செயலாகத்தான் இருக்கும். இவன் என்னை வேவு பார்க்க வந்தவனாக இருக்கலாம். எனவே, கிருஷ்ணன் இவனைக் கொன்றிருக்கலாம்.'

ஊகித்து அறிந்து கொண்டார்.

"வீரனே! இவன் யார்? எதற்கு இங்கு வந்து கொலையுண்டான்?"

அவர் எதிர்க்கேள்வி கேட்டதும் அவர்களால் சரியான பதில் கூற முடியவில்லை.

பாவம், வநத வீரர்கள் என்ன கூற முடியும்?

"ஓகோ!... இவன் என்னை வேவுபார்க்க வந்தவனா? இப்போது புரிகிறது. இளவரசன் கிருஷ்ணன் என்னைக் காண வந்திருந்தான். இதை மன்னனிடம் போய்த் தெரிவியுங்கள்! முடிந்தால் அவனைச் சிறைப் பிடிக்கச் சொல்லுங்கள்!"

மன்னனிடம் தெரிவிக்கச் சென்ற வீரர்கள் மேலும் சில வீரர்களுடன் அமோகவர்ஷன் மாளிகைக்கு விரைந்து வந்தனர்.

மாளிகைக்குள் ஒவ்வோர் இடமாகத் தேடினர். கிருஷ்ணன் அங்கு இருந்தால்தானே, பிடிப்பதற்கு! அவன் இல்லை.

எனவே, அமோகவர்ஷனிடம் நெருங்கினர்.

"மன்னிக்க வேண்டும்!"

மாளிகைக்குள் அநாவசியமாக அத்துமீறிப் பிரவேசித்து கிருஷ்ணனைத் தேடிக் காணாது அவரிடம் மன்னிப்புக் கேட்கின் றனரோ என்றுதான் முதலில் அவர் நினைத்தார்.

ஆனால் நடந்தது வேறு!

"உங்களைச் சிறையில் அடைக்க மன்னர் உத்தரவு!"

அமோகவர்ஷன் அதிர்ச்சியடைந்தாலும், உடன்பட்டார்.

"இதுவும் நமக்குத் தேவைதான்! உம்! நடக்கட்டும்!"

அவர் கைகளில் விலங்கிட்டுச் சிறைக்கு அழைத்துச் சென்றனர்.

அதே நேரத்தில் வீரமாதேவியும், இராஜமாதாவும் கோவிந்தனிடம் ஆமோகவர்ஷனைச் சிறையில் அடைக்க வேண்டாம் என மன்றாடிக் கொண்டிருந்தனர்.

"கோவிந்தா!"

இளங்கோப்பிச்சி கோபத்துடன் கூப்பிட்டார்.

கோவிந்தன் கோபத்துடன் திரும்பினான்.

"பாட்டியாரே! இப்போது நான் நாட்டின் மன்னன். மரியாதையுடன் பேசக் கற்றுக் கொள்ளுங்கள்!"

தன் தவறை உணர்ந்தவராகத் தழுதழுத்த குரலில் கெஞ்சினார் அவர்.

"இந்த நாட்டின் மறைந்த மன்னரின் தம்பி அவர். அமைச்சராக அநேக ஆண்டுகள் இருந்தவர். வீணாக அவரை எந்த முகாந்திரமும் இல்லாமல் சிறைப்பிடிப்பது நியாயமா? அது அழகல்ல!"

"நியாயம், அநியாயம் பார்க்கத் தெரிந்தவரா அவர்? அவரிடம் கேட்க வேண்டிய கேள்வி இது!"

"அவர் என்ன குற்றம்தான் செய்தார்?"

வீரமாதேவி அப்படிக் கேட்டதும் எரிந்து விழுந்தான்.

"வாயை மூடு!"

அதற்குமேல் அவளால் ஒன்றும் கேட்க முடியவில்லை.

"அவரைச் சிறைப் பிடித்து அநியாயமாக வம்பை விலைக்கு வாங்காதே!" இளங்கோப்பிச்சி எச்சரித்தார்!

"அவரைக் காண வந்தவனைப் பிடித்து என்னிடம் அவர் ஒப்படைத்தாரா? இராஜத் துரோகியுடன் துணை போனதால்தான் சிறைப்பிடிக்க உத்தரவிட்டேன். வருவது வரட்டும். இவரைத் தேடி கிருஷ்ணன் வருவான் அல்லவா? அப்போது அவனும் சிறைப்படுவான்!"

அதற்குமேல் அந்த இரு பெண்டிர்களாலும் வாதாட முடிய வில்லை.

அமோகவர்ஷன் சிறைப்பிடிக்கப்பட்ட செய்தி நகரத்தில் பரவ ஆரம்பித்து விட்டது.

"இது அநியாயம்!"

மக்கள் புலம்ப ஆரம்பித்தனர்.

அவர் சிறைக்குக் கொண்டு போகப்பட்டார். சிறையில் ஒரு கதவு திறக்கப்பட்டது. விலங்கு அகற்றப்பட்டு அதன் உள்ளே அடைக்கப்பட்டார்.

உள்ளே இருந்த ஓர் உருவம் அக்காட்சியைக் கண்டு திடுக்கிட்டது.

பிறகு மெல்ல நகைக்கவும் செய்தது. மேலும் அவரை ஒரு கேள்வி கேட்கவும் செய்தது.

"அமைச்சர் பெருமானே! உங்களுக்குமா இந்தக் கதி?"

அறையின் வெளியே எரிந்து கொண்டிருந்த தீப்பந்த ஒளியில் அந்த உருவத்தை அவர் ஏறிட்டார்.

அது வேறு யாருமல்ல. அவரால் முன்பு சிறையில் அடைக்கப்பட்ட உதவித் தளபதி ஜெனமேயன்தான்!

"பெருமானே! பார்த்தீர்களா? அற்பன் அரசன் ஆனால் அமைச்சர் ஆண்டியாக வேண்டியதுதானா? நாடு இனி எப்படி உருப்படும்?

"உம்!... இதற்காகத்தான் என் போன்றவர்கள் உங்கள் திருக்குமாரர் பக்கம் சேர்ந்தோம்! அதற்குப் பரிசாகத் தாங்கள் சிறைத் தண்டனை வழங்கினீர்கள்! ஆனால் இன்றோ உங்களுக்கே அந்தத் தண்டனை வழங்கியது வேதனைதான்! கூடிய சீக்கிரமே நாட்டில் புரட்சி வெடிக்கத்தான் போகிறது, பாருங்கள்!"

அவ்வாறு கூறிக்கொண்டே அமோகவர்ஷன் அமர்வதற்கு ஏற்ப இருக்கையைத் தூசி தட்டித் தயார்படுத்தினர்.

அந்த நேரம் அந்த இருட்டில் இரு உருவங்கள் சிறையை நோக்கி விரைந்து வந்தன.

அவர்கள் வேறு யாருமல்ல.

வீரமாதேவியும், இளங்கோப்பிச்சியும்தான் அவர்கள்!

"அமோகா! உனக்குமா இந்த நிலை?"

இராஜமாதாவின் குரல் தழுதழுத்தது.

"பெருமாட்டி! நாம் நினைத்தவை எல்லாம் தலைகீழாகப் போய்விட்டன. பிறகு எப்படி நான் இங்கு அடைபடாமல் இருக்க முடியும்? விதி வலியது என்பதை இப்போது நான் உணர்கிறேன்! என்ன செய்வது? நடப்பது நடக்கட்டும்!"

வீரமாதேவி கண்ணீருடன் அவரை நோக்கினாள்.

"பெருமானே! நாங்கள் எவ்வளவோ மன்னரிடம் மன்றாடிப் பார்த்தோம்! அவர் கோபம்தான் அதிகரித்ததே ஒழிய எங்கள் பேச்சை அவர் கேட்கவில்லை!"

"உம்!... நீங்கள் என்ன செய்வீர்கள்?"

"பிழை பொறுக்க வேண்டும். எங்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை!"

"நான் ஒன்றும் உங்கள்மீது குறை எதுவும் கூறமாட்டேன். ஆனால் இதன் பலனைக் கோவிந்தன் அனுபவித்தே ஆக வேண்டும்"

இதைக் கேட்ட வீரமாதேவி அதிர்ந்தாள். இராஜமாதாவோ எதுவும் கூறத் தோன்றாமல் தவித்தார்.

"நீங்கள் இருவரும் ஆறுதல் கூற வந்துள்ளது கண்டு மன நிறைவு அடைகிறேன். சீக்கிரம் இந்த இடத்தை விட்டுச் சென்று விடுங்கள்!"

அமோகவர்ஷன் அந்த இரு பெண்களுக்காக இரங்கினார். 'இப்பெண்களால் எப்படி அந்த மூடனைத் திருத்த முடியும்? நடப்பது நடக்கட்டும். இனி நாம் என்ன செய்வது?'

இரு பெண்டிரும் அரண்மனையை அடைந்தபோது அங்கு கோபமாகக் கோவிந்தன் வார்த்தைகளை அள்ளிக் கொட்டினான்.

"ஓகோ! இரட்டை மண்டல அரசியும், இராஜமாதாவும் தங்கள் கௌரவத்தை எல்லாம் விட்டுவிட்டுச் சிறைச் சாலையைப் பார்வையிடச் சென்றீர்களோ?"

எகத்தாளமாக அவன் கேட்பது புரிந்தாலும் அவர்களால் பதில் ஒன்றும் கூற முடியவில்லை.

"என் சிற்றப்பன்தான் எனக்கு முதல் எதிரி! அவரை இனிப் பார்ப்பதோ பேசுவதோ மன்னன் கட்டளையை மீறிய செயலாகும். இதை மறந்தால் தண்டனையை அனுபவிக்கவும் தயாராக இருக்க வேண்டும்!"

இப்படிப்பட்ட மூடனாக இருக்கிறானே என்ற வேதனையுடன் இராஜமாதா உள்ளே சென்றார். வீரமாதேவியோ பெட்டிப் பாம்பாக அடங்கி ஒடுங்கி அவரைப் பின்தொடர்ந்தாள்.

இது நடந்து இரண்டு மூன்று நாட்கள்கூடச் சென்றிருக்காது.

பிற்பகல் நேரம். வீரன் ஒருவன் விரைந்து வந்து மன்னன் கோவிந்தன் முன் மண்டியிட்டு வணங்கினான்.

"என்ன?"

"பிழை நடந்து விட்டது அரசே!"

"என்ன உளறுகிறாய்? விவரமாகக் கூறு!"

"கீழைச் சாளுக்கிய வீமன் படை வெற்றி கொண்டு விட்டது."

"ஆ!"

"யுத்தமல்லன் தோல்வியடைந்து விட்டார்!"

"நம் படைகள் என்ன செய்தன? போரிடவில்லையா?"

"நம் படைகளும் தோல்வி கண்டு திரும்புகின்றன! அனேக வீரர்கள் போர்க்களத்தில் வீரமரணம் அடைந்து விட்டனர்!"

"என்னடா சொன்னாய்? நம் படை தோல்வி கண்டதா?" கோபத்துடன் அவனுக்கு ஓர் அறை கொடுத்தான்.

"உண்மைதான் அரசே!"

"என் படைவீரர்களின் வலிமை இதுதானா? வீரமற்ற வீணர் களைத்தான் இத்தனை நாள் ஊட்டி வளர்த்தோமா? படைத் தலைவர்கள் எல்லாம் என்ன செய்தார்கள்? அவர்கள் எல்லாம் எங்கே போனார்கள்?"

"தோற்றோடும் நம் வீரர்களை ஒழுங்குபடுத்துகின்றனர். வீரர்களோ படையில் கலகம் வேறு செய்கின்றனர்!"

"அவர்கள் ஒழிந்து போகட்டும்! நீயும் தொலைந்து போ!"

தனது இடையில் சொருகி இருந்த குறுவாளை உருவி, செய்திகொண்டு வந்த வீரன்மீதே எறிந்து தன் சினத்தைத் தீர்த்துக் கொண்டான்.

பாவம் அவன்! கோவேந்தனின் கோபத்தால் அப்பாவி வீரனின் உயிர் அப்போதே பிரிந்து விட்டது!

பிரமித்து அதைப் பார்த்துக் கொண்டிருந்த காவலர்களுக்கு உத்தரவிட்டான்.

"இழுத்தெறியுங்கள்!"

பயந்த அவர்கள் அவ்வீரனின் உடலைத் தூக்கிச் சென்று அப்புறப்படுத்தினர்.

சினத்தால் முகம் சிவந்த கோவிந்தனின் கோபம் அடங்கவே இல்லை! அலங்காரமாக அங்கே வைக்கப்பட்டிருந்த பூச்சாடிகள் போன்றவற்றை எல்லாம் ஆவேசமாகத் தூக்கி வீசி எறிந்து ஆர்ப்பாட்டம் செய்தான்!

"என் படை தோல்வியா? அவமானம்! அவமானம்! இதை எப்படிச் சகிப்பேன்!"

உறுமியவாறே குறுக்கும் நெடுக்குமாக உலவினான். கிட்ட நெருங்கவே எல்லாரும் பயந்து நடுங்கினர்.

அன்று மாலையிலேயே மானியகேட நகரில் படை தோல்வி கண்டு திரும்புகிறது என்ற செய்தி பரவ ஆரம்பித்து விட்டது.

பல இடங்களில் மக்கள் கூட்டம் கூட்டமாக நின்று ஆவேசமாகப் பேசிக் கொண்டிருந்தனர்.

"இந்த அவலத்தை எங்கேயாவது கேள்விப் பட்டிருக்கிறோமா?"

"உள்நாட்டிலே குழப்பமான சூழ்நிலை! இதைச் சீர்படுத்தாமல் திசை திருப்பி அடுத்த நாட்டு விஷயத்தில் தலையிடலாமா?"

"ஆயிரக்கணக்கான வீரர்களை அநியாயமாகப் பலியிட்ட அரசனும் ஓர் அரசனா?"

"அப்படி என்ன அடுத்த நாட்டு அரசியலில் ஆர்வம் கொள்வது? அது தேவைதானா?"

"கொடுங்கோல் மன்னன் ஆளும் இந்த நாட்டில் வாழ்வதைக் காட்டிலும் காட்டில் வாழும் புலியுடன் வாழ்வது எவ்வளவோ மேல்!"

"இதைத் தட்டிக் கேட்பார் யாருமில்லையா?"

"தன் சிறிய தந்தையையே சிறையிலிட்ட மன்னனைத் தட்டிக் கேட்க யாருக்குத் தைரியம் வரும்?"

"கிருஷ்ண பரமாத்மாபோல இளவரசர் கிருஷ்ணதேவர் நம் அபயக் குரலுக்கு ஓடி வந்து காப்பாற்ற மாட்டாரா?"

"அவர் வரவேண்டும் என இறைவனை வேண்டுவோம்."

"தோல்வி கண்ட நம் படைகளுக்குள்ளேயே குழப்பம் வேறு வந்து விட்டதாம்!"

"ஆமாம்! மன்னரை எதிர்த்து - தளபதிகளை மதிக்காமல் கலகம் செய்கிறார்களாம்!"

"இனி அவர்களால்தான் நமக்கு ஒரு விடிவுகாலம் பிறக்க வேண்டும்!"

"கிருஷ்ணதேவரே படை திரட்டி வருகிறாராமே? படைகளும் அவர் பக்கம் சேர்கின்றார்களாமே?"

"எப்படியாவது நமக்கு விடிவு வந்தால் சரி!"

வீதிகளிலும் சரி, அங்ச[illegible]ளிலும் சரி இதே பேச்சுத்தான். இதே ஆவேசம்தான்!

என்றாவது பு[illegible]சி வெடிக்கும் என எதிர்பார்த்த மக்களுக்கு இது ஒரு வாய்ப்பாக இருந்தது.

அவர்கள் எதிர்பார்ப்பை நிறைவு செய்வதுபோல இனிப்பான செய்தி ஒன்றும் அவர்கள் காதில் விழுந்தது.

'கிருஷ்ணன் படையுடன் கோட்டை வாயிலை வந்தடைந்துவிட்டான், என்பதே அது!



# 30. அடைக்கலம்

மக்கள் எப்போது புரட்சி வெடிக்கும் என ஆவலுடன் காத்திருந்தனர். அவர்கள் காதில் இனிப்பான செய்தி வந்து எட்டியது.

கிருஷ்ணன் படையுடன் கோட்டை வாயிலை நெருங்கி விட்டான்.

நள்ளிரவு நேரம். அரண்மனை வளாகம் அல்லோல கல்லோலப்பட்டது.

வீரமாதேவி திடுக்கிட்டு எழுந்து வெளியே ஓடி வந்தாள். அதேபோல இராஜமாதாவும்! அவர் எழுந்து வீரமாதேவி இருக்கும் அறை நோக்கி விரைந்து வந்தார்.

வீரமாதேவி முன் அமோகவர்ஷன் நின்று கொண்டிருந்தார்.

அவரைக் கண்டதும் அவளுக்கு ஒரு பக்கம் அதிர்ச்சி! மற்றொரு பக்கம் மகிழ்ச்சி!

"பெருமானே! இந்த வேளையில் தாங்கள் எப்படி இங்கு? விடுதலை கிடைத்து விட்டதா?"

"சோழ இளவரசி!"

அவர் அப்படி அழைத்ததும் அவள் திடுக்கிட்டாள். அரசி என்று அழைக்காமல் அப்படி அவர் அழைத்த காரணம் புரியாது திகைத்தாள்.

"நாட்டில் புரட்சி வெடித்து விட்டது!"

"என்ன?"

அவள் அதிர்ச்சியடைந்தாள்!

"ஆமாம்! என் மகன் எல்லாரையும் சிறையிலிருந்து விடுவித்துவிட்டு மக்கள் ஆதரவுடன் அரண்மனையைக் கைப்பற்ற வருகிறான். உங்கள் இருவருக்குமே ஆபத்து! அவன் என்ன செய்வானோ என்று தெரியாது! எப்படியாவது ஓடித் தப்பித்துக் கொள்ளுங்கள்! இதைக் கூறி உங்களைக் காப்பாற்றவே ஓடிவந்தேன்!"

"அமோகா! வந்துவிட்டாயா? நீ நலமா?"

இராஜமாதா இரைந்து கேட்டபடி நெருங்கினார்

கலவரம், ஆரவாரம்பற்றிய விவரம் அவருக்குத் தெரிய நியாய மில்லை.

"உஷ்! மெதுவாகப் பேசுங்கள்!"

அவரிடம் ரகசியமாக, அதுவும் விரைவாக அங்கு நடந்துள்ள நிகழ்ச்சிகளைக் கூறி முடித்தார்.

"இனி கிருஷ்ணன் என்ன செய்வான் என்று எனக்குத் தெரியாது. மன்னனைச் சிறைப் பிடித்துத் தன் வஞ்சம் தீர்க்க இங்கு வரலாம். எனவே சீக்கிரம் புறப்படுங்கள்! வெளியே ரதம் ஒன்று உங்களுக்காகக் காத்திருக்கிறது. உம்! எங்கே கோவிந்தன்?"

வீரமாதேவியோ அப்படியே பிரமை பிடித்து நின்றுவிட்டாள்!

'என் கதி இப்படியா? எங்கு போவது? மயங்கிய நிலையில் கிடக்கும் கணவனை எழுப்புவதா? தப்பிக்க வழி தேடுவதா?'

இளங்கோப்பிச்சி உஷாரானார்!

"தேவி! கவலைப்படாதே! நான் இருக்கிறேன்! என் உயிர் உள்ளவரை உன்னைக் காப்பேன்! கோவிந்தன் எங்கே?"

சயன அறையைக் காட்டினாள். கோவிந்தன் அங்கே குடிபோதையில் கிடந்தான்.

ஆபத்து சூழ்ந்த அந்த நேரத்தில் அவர்களைக் காப்பாற்ற வேண்டுமே என்று அமோகவர்ஷன் பரபரத்தார்!

'இவனைச் சற்று தூக்க வேண்டுமே!'

தன்னைச் சிறையில் அடைத்தவனையே இப்போது காப்பாற்றி அனுப்ப வேண்டிய காலமும், கடமையும் சேர்ந்து வந்ததே என்று அவர் கவலைப்பட்டார்.

"யாரங்கே?"

இரு வீரர்கள் உடனே ஓடி வந்தனர்.

"அரசனைத் தூக்குங்கள்! அரண்மனைக்கு வெளியில் நிற்கும் இரதத்தில் ஏற்றுங்கள்!" உத்தரவிட்டார். இன்றுவரை - இப்போது வரை அவன் அரசன்தானே!

வீரர்கள் விரைந்து செயல்பட்டனர்.

பிரமை பிடித்து எல்லவாற்றையும் பார்த்துக் கொண்டு நின்ற வீரமாதேவியை இராஜமாதா கைப்பிடித்து அழைத்துக் கொண்டு படிகளில் இறங்கினார்.

கோவிந்தன் இரதத்தில் கிடத்தப்பட்டான். இரு அரசிகளும் அதில் ஏறிக் கொள்ள, அமோகவர்ஷன் ஒரு பணமுடிப்பை இராஜமாதாவிடம் கொடுத்தார்.

"உம்! புறப்படுங்கள். உங்களுக்கு இனி புகலிடம் தக்க பாதுகாப்பான இடம் சோழ மண்டலமே! அங்குதான் இந்த இரதம் செல்கிறது. மன்னர் பிரானிடம் மன்னிப்புக் கேட்பதாகக் கூறுங்கள். நல்ல வாழ்க்கை வீரமாதேவிக்கு அமையவில்லை!

"அதற்கு நான் என்ன செய்வது? இதோ இப்படி மயங்கிக் கிடக்கிறானே இவன், என்னையே சிறையில் அடைத்தவன்! இவன் உயிரைக் காப்பாற்றி வெளியில் அனுப்பி வைப்பதே என் அண்ணனுக்கு நான் செய்யும் நன்றிக் கடனாகும். அதையும் செய்து நிறைவேற்றி விட்டேன். கூடவே சில காவலர்களும் துணைக்கு வருகிறார்கள். தாமதிக்காதீர்கள்! புறப்படுங்கள்!"

இரதம் வேகமாகப் புறப்பட்டுச் சென்றது. அவர்கள் பரிவாரமும் பின்பற்றிச் சென்றது.

"அப்பாடா! என் கடமை முடிந்தது!"

அமோகவர்ஷன் வாய் முணுமுணுத்தது.

அவன் நாட்டின் நிலையை நாடி பிடித்துப் பார்க்கத் தவறிவிட்டானே! அதனால் அல்லவா கோவிந்தன் குடும்பம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள ஓடவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு விட்டது.

விதி வலிது என்பதை அப்போது அவர் உணர்ந்து வேதனைப்பட்டார்!

xxxxxxxxxxx

**ப**ராந்தகச் சக்கரவர்த்தி தன் தந்தையின் ஞாபகமாக திருநாமல்லூரில் எழுப்பிய ஆதித்தேசுவரம் திருக்கோயிலைப் பார்வையிட இராசாதித்தன் சென்றிருந்தான்.

அவனைப் பார்க்க ஓடோடி வந்தான் பொன்பெருமாள். அவன் கொண்டுவந்த செய்தி கேட்டு சோழ இளவரசன் திடுக்கிட்டான்.

"என்ன! என் தங்கைக்கு இந்தக் கதியா?"

அவனால் அதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

பொன்பெருமாள் தான் அறிந்த செய்திகளையும் அவனிடம் விவரித்தான்.

"நாட்டிலே மன்னராக முடிசூட்டிக் கொண்ட நாளில் இருந்தே மக்கள் மனத்தில் அவர் இடம் பெறத் தவறிவிட்டார்.

"கிருஷ்ணருக்காக அமைச்சரும் சிறிய தந்தையுமான அமோகவர்ஷரையே சிறையில் அடைத்தார். அத்தோடு மட்டுமல்ல. கீழைச் சாளுக்கிய அரசியலில் வீணாகத் தலையிட்டார்.

"வீமனுக்கு எதிராக யுத்தமல்லனுக்கு ஆதரவாகவும் தன் படைகளை அனுப்பி வைத்தார். அவர் ஆதரித்த பக்கமும் படையும் படுதோல்வியடைந்தது.

"மக்களிடம் இருந்த மனக்கசப்போடு தோல்வி வேறு அவருக்கு எதிராக மக்களைக் கிளர்ச்சி செய்ய வைத்து விட்டது.

"அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி கிருஷ்ணர் புரட்சி செய்து மக்கள் ஆதரவுடன் ஆட்சியைக் கைப்பற்றி விட்டார்.

"மானியகேட நகரத்தில் அவரே தன் தந்தையான அமோகவர்ஷருக்கு முடிசூட்டி மன்னராகப் பிரகடனப் படுத்திவிட்டார்.

"அதற்கு முன்னமே அமோகவர்ஷரின் உதவியால் அரசிருக்கை இழந்த கோவிந்தர் நம் இளவரசியாருடன் நாட்டை விட்டுப் பத்திரமாக தப்பிவிட்டார். இப்போது அடைக்கலம் தேடி தஞ்சை நோக்கி வருகிறார்கள்!"

இவ்வளவையும் கேட்ட இளவரசன் இராசாதித்தனுக்கு இரத்தம் கொதித்தது.

உடனேயே தனது படையைக் கொண்டு கிருஷ்ணனைத் தோற்கடித்துத் தன் தங்கைக்கு நேர்ந்த அவமானத்தைத் துடைத்து, அவள் கணவரை மறுபடி அரசனாக்க ஆவல் கொண்டான். அதற்கு அரசரின் அனுமதி பெறத் துடித்தான்.

"தஞ்சைக்கு என் பரிவாரம் புறப்பட ஆயத்தமாகட்டும்!"

கட்டளை பிறப்பித்தான்.

பரிவாரம் புறப்படும் முன் தன் தம்பியான இளவரசன் அரிகுல கேசரியிடம் எல்லைக் காவற்படைப் பொறுப்பை ஒப்படைத்தான்.

அத்தோடு அருகில் முடியூரில் தங்கியிருந்த படைத்தலைவர் வெள்ளன் குமரனாரையும் படைகளைப் போருக்குப் புறப்பட ஆயத்தமாக இருக்கக் கட்டளையிட்டான்.

தஞ்சை போய்ச் சேர்ந்ததும் பராந்தகச் சக்கரவர்த்தியிடம் இராஷ்டிரகூட நாட்டில் நடந்த புரட்சிபற்றிக் கொட்டித் தீர்த்தான்.

"திருமணத்திற்கு முன்னமே நான் எவ்வளவோ எடுத்துக் கூறினேன். பேரரசர் தாங்கள் கெளரவம் பார்த்தீர்கள். கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வேண்டி மகளுடைய வாழ்வுக்கே உலை வைத்து விட்டீர்களே!"

தந்தைக்குச் சுட்டிக் காட்டினான். பொறுமையுடன் கேட்டுக் கொண்ட பேரரசர் நீண்ட யோசனைக்குப் பின் அவன் கோரிக்கையை ஏற்பதாகக் கூறினார்.

"நாளையே படைத்தலைவர்களுடன், அமைச்சர் மற்றும் அதிகாரிகளின் கூட்டத்தைக் கூட்டுகிறேன்!"

ஆலோசனைக் கூட்டம் கூட்டப்பட்டது. இளவரசன் இரட்டை மண்டலத்தில் நடைபெற்ற புரட்சிபற்றி எடுத்துக் கூறினான்.

மணிமுடி இழந்த கோவிந்தனும் அரசி வீரமாதேவியும் அடைக்கலம் தேடி தஞ்சை நோக்கி வருவதையும் கூறி அவர்களுக்காக படை திரட்டிச் செல்ல அனுமதி கோரினான்.

அமைச்சர் பெருமான் பூதூர் உடையான் நம்மாழ்வார் அடிகளும், பழுவேட்டரையரும், கொடும்பாளூர் இளவரசன் விக்கிரமனும், திருக்கோவிலூர் மிலாடுடையார் சித்தவடவன் கண்டதேவனும், தண்டநாயகரான சிறுகுளத்தூர் மாறன் பரமேசுவரனான செம்பியன் சோழவரையன், பெருந்தரத்து அதிகாரி தத்தனூர் மூவேந்தர் வேளாண் ஆகியோரும் அந்த ஆலோசனைக் கூட்டத்தில் பங்கு பெற்றிருந்தனர்.

எல்லாருடைய முகத்திலும் கவலை ரேகைகள் படிந்திருந்தன. அன்று பேரரசர் எடுத்த தவறான மண உறவு இன்று இப்படிப்பட்ட பிரச்சனையாக உருவெடுத்து விட்டதே என்ற வருத்தம் வேறு.

முதலில் அமைச்சர் பெருமானே மற்றவர்கள் பேசுவதைத் தவிர்ப்பதற்காகப் பேச ஆரம்பித்தார்.

"நாடு இன்று இருக்கும் நிலையில் நாம் போர் ஒன்று தொடங்க வேண்டுமா?" நம் இளவரசிக்கு நேர்ந்த அவமானத்தைப் பொறுத்துக் கொள்ள முடியுமா?"

இளவரசன் இராசாதித்தன் இப்படி படபடத்தான்.

"பொறுத்துக் கொள்ள முடியாதுதான். உடனே படை திரட்டிப் போருக்குப் புறப்பட்டுச் செல்வதாக வைத்துக்

கொள்வோம். கிருஷ்ணருக்கு உதவியாக கங்க மன்னர் பூதுகன் உதவிக்கு வருவார். கீழைச் சாளுக்கிய வீமன் உதவ முன்வருவார்."

"மூவரும் ஒன்று சேர்ந்து போரில் குதிப்பார்கள். முக்கூட்டுப் படையை நாம் முறியடிக்க வேண்டுமானால் நம் படைபலத்தைப் பெருக்க வேண்டும். கால அவகாசமும் தேவை!"

"அதற்காக?"

"இளவரசர் பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். அரசர் அமோகவர்ஷன் என ஆகிவிட்டது. அவர் ஆளும் திறமை உள்ளவர்! அமைச்சராகப் பணியாற்றியவர். நாட்டில் அவருக்கு நல்ல செல்வாக்கு உள்ளது. அவர் ஆளப் போவது எத்தனை நாள்? அவர் காலம்வரை நாம் பொறுத்துக் கொள்வோம். படைபலத்தையும் பெருக்கிக் கொள்வோம்! கோவிந்தரைக் காப்பாற்றி அனுப்பியதற்காக நன்றிக் கடன் செலுத்துவோம்!"

"அதுவரை நாம் கைகட்டிக் கொண்டு காலத்தைக் கழிப்பதா?"

"யார் அப்படிக் கூறமுடியும்? நம் இளவரசியாருடன் அரசர் கோவிந்தர் நம்மிடம் அடைக்கலம் தேடி வருவார் என்பது இளவரசன் கிருஷ்ணனுக்கு நன்றாகத் தெரியும். எனவே, நம்மைத் தாக்கவும் வரலாம்!"

"அதற்கு முன்னமே நாமே படை நடத்திச் சென்றால் என்ன?"

"நாம் வீணாக வம்புச் சண்டைக்குப் போக வேண்டாம். வந்தால் போருக்குப் புறப்படுவோம்!"

"எப்படி அது சாத்தியமாகும்!"

"எல்லைக் காவற்படையைப் பலப்படுத்துவோம். அங்கு திரளும் படையணியை வைத்து அங்கு நாம் வளர்ச்சிப் பணியைத் தொடங்குவோம். போர் மூளும்வரை ஆக்கப் பணிகளில் நாம் கவனத்தைச் செலுத்தலாமே!"

'அதுவும் நல்ல யோசனைதான்' என்று அரசர் ஏற்றுக் கொண்டார்.

(அவ்வாறு திரட்டப்பட்ட எல்லைக் காவற்படையைக் கொண்டுதான் இளவரசன் இராசாதித்தன் மூலம் வீரநாராயண ஏரி என்ற கடல் போன்ற ஏரி ஒன்று வீரநாராயணபுரத்தில் வெட்டப்பட்டது. கொள்ளிடத்திலிருந்து கால்வாய் வெட்டி, தண்ணீர் கொண்டு வரப்பட்டது. அந்த ஊர் இன்று காட்டுமன்னார்கோயில் என வழங்கப்படுகிறது. அந்நாளில் அந்த ஊர் வீரநாராயணச் சதுர்வேதி மங்கலம் என அழைக்கப்பட்டது. அவ்வூரில் ஆளவந்தார், நாதமுனி போன்ற மகான்கள் அவதரித்தனர்.)

இதை ஏற்பதைத் தவிர இளவரசன் இராசாதித்தனுக்கும் வேறு வழி தெரியவில்லை. வரப்போகும் தங்கையை வரவேற்க இளவரசன் துடித்தான்.

இரவு முதலாம் சாமம் முடியும் நேரம் வீராமாதேவி வரும் இரதம் தஞ்சை நகருக்குள் புகுந்தது.

இரதம் அரண்மனை வாயிலில் போய் நின்றதுதான் தாமதம்! அழுகையை அடக்கமாட்டாத வீரமாதேவி 'ஓ!' என்ற பெருங்குரல் எடுத்து அழுதவாறு படிகளில் ஏறினாள்.



# 31. அநுபமாவின் காதல்

தஞ்சைக்குள் வீரமாதேவி வரும் இரதம் வந்துவிட்டது என்பது தெரிந்த பேரரசரும், பட்டத்தரசி கோக்கிழானடியும், இராசாதித்தனும் அரண்மனை வாயிலில் அவர்களை எதிர்பார்த்து நின்றனர்.

அதனால் தான் வீரமாதேவியால் பொங்கி வந்த அழுகையைக் கட்டுப்படுத்த முடியாமல் 'ஓ' என்ற பெருங்குரல் எடுத்து அழுதவாறு படியேறி வந்தாள்.

தாயின் தோளில் சாய்ந்து விட்டாள். பின்னால் இராஜமாதா இளங்கோப்பிச்சியும், கோவிந்தனும் படிகளில் ஏறி வந்தனர்.

இரட்டை மண்டல அரசியாகத் தன் மகளை வரவேற்க முடியவில்லையே எனப் பேரரசர் பராந்தகர் வருந்தினார். தன் அருமை மகளின் அவல நிலையை எண்ணித் துன்பத்தை மென்று விழுங்கினார்.

சக்கரவர்த்தியல்லவா? சுகத்தையும் துக்கத்தையும் ஒருசேரப் பார்க்கும் பக்குவம் பெற்றவரல்லவா?

சிவனது பாதத்தாமரையில் உறையும் வண்டு என்று தன்னைக் கூறிக் கொள்பவர் அல்லவா? தில்லையில் தன் தந்தை ஆதித்த சோழர் போல் கூரையில் பொன் வேய்ந்த புரவலர் அல்லவா?

ஈசனைச் சரணடைவதைத் தவிர வேறு ஒன்றும் தோன்ற வில்லை. தில்லை அம்பலவாணனை எண்ணித் தொழுதவாறு பூஜை அறைக்குள் புகுந்து விட்டார்.

வீரமாதேவியை உள்ளே அழைத்துச் சென்றனர். அவர்களுடன் இளங்கோப்பிச்சியும் பின்தொடர்ந்தார்.

கோவிந்தன் தயங்கியவாறே இளவரசன் இராசாதித்தனைப் பின் தொடர்ந்தான்.

அரசபோகத்தை அனுபவித்தவன். இப்போது அடைக்கலம் தேடி வந்துள்ளான். பழைய பீடு- கர்வம் எல்லாம் தானாகவே தொலைந்து போயின.

இன்று வளர் குட்டி ஒன்று எஜமானனைப் பின்தொடர்வது போலச் செல்ல வேண்டிய நிலை ஆகிவிட்டதே!

எல்லாம் காலம் செய்த கோலம்! விதி செய்த வேலை !

ஒரு சில தினங்கள் கழிந்திருக்கும்.

பேரரசர் பராந்தகரிடம் கோவிந்தன் கோரிக்கை வைத்தான்.

“உடனே படைதிரட்டித் தாருங்கள். போருக்குக் கிளம்புகிறேன். இழந்த அரசை மீட்டுக் கொள்கிறேன்.!”

அரசர் அவனிடம் பேசுவதைத் தவிர்த்தார்.

“ஆகட்டும், பார்க்கலாம்!”

இராசாதித்தனே அவனிடம் நாசுக்காக- பக்குவமாக இன்றைய எதிரிகளின் நிலை-சோழநாடு இருக்கும் சூழ்நிலை - அமோகவர்ஷனின் ஆட்சித் திறன் இவை எல்லாவற்றையும் எடுத்துக் கூறினான்.

“சற்று காலம் தாழ்த்துங்கள்! படை திரட்டித் தருகிறோம். அமோகவர்ஷனின் ஆட்சிக் காலம் முடிந்ததும் கிருஷ்ணனுக்கு எதிராகக் கிளர்ந்து எழலாம்! படைகொண்டு சென்று பகைவனைத் துரத்தி விட்டு மணி முடி தரிக்கலாம்!”

அதுகேட்டு அவன் சமாதானமானான்.

பழையாறையில் அரசி அருண்மொழி நங்கையுடன் தங்கியிருந்த இளவரசி அநுபமாவுக்கு வீரமாதேவி தலைநகர் திரும்பிவிட்ட செய்தி எட்டியது.

ஓடோடி வந்தாள். அவளைக் கட்டிப் பிடித்து அழுதாள் வீரமாதேவி! தேற்றினாள் இளவரசி.

வீரமாதேவி மனம் ஆற - தேற அநேக நாட்கள் ஆகிவிட்டன. கலகலப்புடன் பேசும் பக்குவம் அடைந்த போதுதான் இளவரசி அநுபமா அந்தச் சந்தோஷச் செய்தியை உரைத்தாள்.

"அக்கா! உன் தங்கைக்குத் திருமணம் நிச்சயம் ஆகியுள்ளது தெரியுமா?"

"அப்படியா! சந்தோஷம்! எங்கே? உனக்கும் என்னைப்போல வெளி தேசத்திலா?"

"இல்லை! இல்லை,"

"அப்பாடா! நல்ல வேளை நீ தப்பித்தாய்!"

"எங்கே?" வெட்கத்துடன் அனுபமா நெளிந்தாள்.

"எங்குதான் என்று சொல்வேன்! வெட்கத்தைப் பாரேன்!"

"கொடும்பாளூர் இளவரசருக்கு!"

"என்ன? கொடும்பாளூர் இளவரசருக்கா?"

திகைப்புடன் வினவினாள்.

அநுபமா தலையசைத்தாள். வீரமாதேவிக்கு ஒரு பக்கம் மகிழ்ச்சி. மறுபக்கம் வேதனை!

இரண்டுக்கும் இடையே ஆடும் ஊசலானாள்!

தான் காதலித்தவரை - தான் கைப்பிடிக்க எண்ணியவரைக் கை கழுவிச் சென்ற நிலை-கை நழுவிச் சென்ற அவலம் அவளை அலைக் கழித்தது.

ஆனால் அதே வேளையில் தனக்குக் கிடைக்காத அந்தப் பாக்கியம் தன் தங்கைக்கே கிடைத்ததில் மகிழ்ச்சி!

அவளும் ஒரு பெண்தானே? ஆவல் உந்தித் தள்ளியது. எப்படி இது சாத்தியமாயிற்று?

தங்கையிடமே கேட்டு விட்டாள்.

நாணத்துடன் தலை கவிழ்ந்தவாறே நடந்தவைகளை அநுபமா உரைத்தாள்.

“நீ காதலித்ததுபோலவே அப்போது நானும் அவரை மனதார விரும்பினேன்!”

“என்ன? நீயும் காதலித்தாயா?” வீரமாதேவி வியந்தாள்!

“வேடிக்கைக்காக நீ பேசுகிறாய் என்றல்லவா அப்போது நான் நினைத்தேன்!”

“இல்லை! இல்லை! உண்மையிலேதான் நான் அவரை விரும்பினேன். நீ காதலித்தது போலத்தான் நானும். ஆனால் நீயோ அதிக ஈடுபாடு கொண்டதால் என் காதலை வெளியிடத் தயங்கி என் மனச் சிறையிலேயே அதைப் பூட்டி வைத்திருந்தேன்.

“உன் திருமணம் முடிந்ததும் என் திருமணப் பேச்சு எழுந்தது. அவரை நான் விரும்புவதாகக் கூறினேன். அவருக்கே மாலையிடுவேன் என மன்றாடினேன்.

“ஆனால் அவரோ, உன்மேல் கொண்ட காதல் கைகூடாமல் போய்விட்டதால் யாரையும் இனி மணம் புரிவதில்லை என்று மறுத்துக் கூறிவிட்டார்!”

இதைக் கேட்டதும் வீரமாதேவியின் கண்கள் கலங்க ஆரம்பித்தன. தங்கை முன் அதைக் காட்டிக் கொள்ளாமல் சமாளித்த பின் அவள் கூறுவதைக் கேட்க ஆரம்பித்தாள்.

“அவர் மனம் மாறி - தேறி வரும்வரை நானும் அவருக்காகக் காத்திருப்பேன் என்று பெற்றவர்களுக்கு மாத்திரமல்ல, மற்றவர் களுக்கும் ஏன் கொடும்பாளூர் இளவரசருக்கும் தெரிவித்து விட்டேன்.

“பிறகு அவர் மனத்தை மாற்றும் முயற்சியில் இறங்கினேன். காலம் கனியட்டும் என்று காத்திருந்தேன்.

"என்னுடைய அன்புத் தொல்லை தாங்காமலோ அல்லது அவர் மனம் மாறியோ என்னை மணக்கச் சம்மதம் தெரிவித்து விட்டார். அதற்குத்தான் இத்தனை ஆண்டுகள் ஆகிவிட்டன!"

இதைக் கேட்டதும் வீரமாதேவிக்குத் தன் காதல் நிறைவேறாமல் - கானல் நீராகிவிட்ட அவலத்தால் கண்கள் கலங்கின. இன்றைய அவல வாழ்வு நினைத்தும் அவளால் அழாமல் இருக்க முடியவில்லை.

குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்து விட்டாள். அதைக் கண்ட அநுபமா பதறி அவளை அணைத்து ஆறுதல் கூறிக் கொண்டிருந்தாள்.

தஞ்சையில் தஞ்சம் புகுந்துவிட்ட வீரமாதேவிக்குக் காலம் நல்வழி காட்டியதா? பழையபடி இரட்டை மண்டலத்தின் மகா ராணியாகப் பவனி வர முடிந்ததா?

காலம் அவளுக்குக் கருணை காட்டியதா?

இல்லை ! பாவம்!! காதலும் கைகூடாததுபோல அதுவும் கைகூடவில்லை என்றே வரலாறு நமக்கு எடுத்துக் காட்டுகிறது!

அவள் இளவயதில் சோழவள நாட்டிலேயே வாழ ஆசைப்பட்டாள். அதுபோல அவள் சந்தோஷத்தைத் தொலைத்து விட்டதோடு கைம்பெண்ணாகக் கடைசிவரை தஞ்சையிலேயே தன் வாழ்நாளைக் கழித்தாள்!

அரச குமாரியாகப் பிறந்தாலும் அவலம் நிறைந்த வாழ்க்கை அமையலாம் என்பதற்கு அவள் ஓர் எடுத்துக்காட்டு! சோழ குல வல்லியேயானாலும் சோகமான வாழ்க்கை வாழவேண்டிய நிலையும் ஏற்படலாம் என்பதற்கு வீரமாதேவியின் வாழ்க்கை நமக்கு ஒரு படிப்பினைதான்!



**பின்குறிப்பு :**

நான்காம் கோவிந்தன் மனைவி வீரமாதேவியுடன் தஞ்சையிலேயே அடைக்கலமாகி நான்கு ஆண்டுகள் இருந்தான். கி.பி. 993-ல் அமோகவர்ஷன் இறக்கவே மாமனான பராந்தக சக்கரவர்த்தியிடம் படை உதவி வேண்டினான். தன் உரிமையை நிலைநாட்ட இராட்டிரகூட நாட்டுக்குப் படை நடத்திச் சென்று கிருஷ்ணனை எதிர்த்தான்.

இப்படையெடுப்பை அறிந்த கங்க மன்னன் பூதுகன் தன் மைத்துனனுக்கு உதவியாக விரைந்து வந்தான்.

இராஷ்டிரகூடப் படையும், கங்கர் படையும் ஒன்றாகச் சேர்ந்து கோவிந்தனையும் சோழர் படையையும் தாக்கிப் போரிட்டன. போரில் கோவிந்தன் கொல்லப்பட்டான்; சோழர் படையும் தோற்றது.

தன் அரசுரிமையை எதிர்த்த சோழர்மீது கிருஷ்ணன் உள்ளூரக் கருகிக் கொண்டிருந்தான்.

வெற்றி முரசு கொட்டி ஒன்பதாம் நூற்றாண்டின் நடுவிலிருந்து புகழ் ஏணியில் ஏறிவந்த சோழப் பேரரசு பெண் கொடுத்து அதனால் பெரும் அழிவைச் சந்திக்க வேண்டிய கட்டாயத்தைக் கால தேவன் அளித்தான்.

சோழர் இராஷ்டிரகூடப் படைபெடுப்பின் தோல்விக்குப் பின் இந்நிலை மேலும் நெருக்கடியாகி வந்தது.

மூன்றாம் கிருஷ்ணன் இனி எந்நேரத்திலும் படையெடுத்து வரக்கூடும் என்று தெரிந்து சோழ மன்னர் பராந்தகர் தன் வட எல்லையை வலுப்படுத்தினார். வடதிசைக் காவலைத் தன் மூத்த புதல்வனும் பட்டத்து இளவரசனுமான இராசாதித்தனிடம் ஒப்படைத்திருந்தான்.

இராஷ்டிரகூட மன்னன் கிருஷ்ணன், அவன் மைத்துனன் கங்கமன்னன் பூதுகன் உதவியோடும், முன்பு சோழரால் துரத்தப்பட்ட இரண்டு பாண அரசர்கள் மற்றும் வைதும்ப அரசன்

ஆகியோருடைய துணையோடும் சோழ நாட்டின்மீது படையெடுத்துத் தொண்டை நாட்டைத் தாக்கினான்.

தக்கோலம் என்னுமிடத்தில் கடும்போர் நடைபெற்றது. சோழர் பக்கம் வெற்றி கிடைக்கும் என்ற நிலை ஏற்பட்டது. அதைக் கண்ட கங்கமன்னனான பூதுகன் பதறினான். யானை மீதிருந்து போர் நடத்திக் கொண்டிருந்த இராசாதித்தன்மேல் அம்பு மழை பொழிந்தான்.

சற்றும் எதிர்பாராத நிலையில் அம்பு மழையில் இராசாதித்தன் உயிர் துறந்தான். சோழர் படைத் தலைவனில்லா நிலையில் நிலைகுலைந்தது. கிருஷ்ணன் வெற்றிவாகை சூடினான்.

சோழப் பேரரசு தக்கோலப் போரினால் கடும் வீழ்ச்சியுற்றது. இப்போரினால் நெல்லூர்வரை பரவியிருந்த பேரரசு தொண்டை நாடு முற்றிலும் இழந்தது. அத்தோடு தெற்கில் பாண்டிய நாடும் பறிபோனது.

சோழர் தாயக எல்லையுடன் சில தலைமுறை அமைந்த அவலம் நடந்தது.

சோழப் பேரரசின் வெற்றி வாழ்வில் தக்கோலப் போரைப் போன்ற பேரிடி எதுவும் இல்லை. அந்த வீழ்ச்சியிலிருந்து மறுபடி பேரரசு நிலைக்கு மீள சுமார் அரை நூற்றாண்டு காலம் ஆயிற்று.

(ஆதாரம் : கா. அப்பாதுரையார் எழுதிய **"தென்னாட்டுப் போர்க்களங்கள்"** நூலில், பக்கம் 186, 187)